டையர் - நன்மையுடையவராவர், (அவர்போல அவைகாரணமாக), நெஞ்சத்து-(தமது) நெஞ்சினிடத்து, அவலமிலர்-கவலையிலர், (ஆகலால்), (எ - று).

நன்றென்பது ஈறுதோன்றாத சாதியொருமைப் பெயர். உறுதிகளாவன: இம்மை மறுமை வீடுகளுக்குரியனவாகியபுகழ்புண்ணியஞானங்கள். இவற்றையறிவார் இவை செய்யாநின்றே மிகுதியாகச் செய்யப்பெறுகின்றிலே மென்றும், செய்கின்ற இவற்றிற்கு இடையூறுவருமோ வென்றும், இவற்றின் மறுதலையாகிய பழி பாவம் அறியாமை யென்பனவற்றுள் யாது விளையுமோ வென்றும் இவ்வழியால் கவலையையடைவர்; கயவர் அப்புகழ் முதலியவற்றை யொழித்துப் பழி முதலியவற்றைச் செய்யா நின்றும் சிறிதுங் கவலையுடைய ரல்லராகலால் 'திருவுடையர்' என அவரைக் குறிப்பா லிகழ்ந்தவாறும். இதனால் கயவர் பழிபாவ முதலியவற்றிற்கு அஞ்சாரென்பது சொல்லப்பட்டது.

(க - து.) கீழ்மக்கள் பழிமுதலியவற்றிற் கேதுவாய காரியங்களை அஞ்சாது செய்தும் அதுபற்றிக் கவலையில்லாதுமிருப்பர்.

2. The base are happier than those who know what is good ; as they have no anxiety as to the good.



௩. தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

பரி:—(இ - ள்.) தேவருங் கயவரும் ஒரு தன்மையர்; அஃதியாதெனின், தேவரைபபோன்று தம்மை நியமிப்பாரின்றிக் கயவருந்தாம் விரும்புவனவற்றைச் செய்தொழுகலான், (எ - று).

* உயர்வும் இழிவுமாகிய தங் காரணவேறுபாடு குறிப்பாற்றோன்ற நின்றமையின், இது † புகழ்வார்போன்று பழித்தவாறாயிற்று. இதனால் கயவர் விலக்கற்பாடின்றி வேண்டிய செய்வரென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) தேவரனையர்கயவர்-தேவரும் கயவரும் ஒருதன்மையராவர், (அஃது எதனாலெனின்), அவரும் - அக்கயவரும், (தேவரைப்

* விரும்புவனவற்றைச் செய்யாமை உயர்விற்குக் காரணமாமென்றும், (விலக்கப்படுதலில்லாமல்) விரும்புவனவற்றைச் செய்தல் இழிவிற்குக் காரணமா மென்றுங் கொள்க. 'உயர்ச்சியும் தாழ்ச்சியுமாகிய' என்றும் பாடமுண்டு.

† 'தேவ ரனையர் கயவர்' என்று புகழ்வார்போன்று 'மேவன செய்தொழுக லான்' என்னும் ஏதுவினால் கயவரைப்பழித்தா ரென்க.

இது புகழ்வது போலப் பழித்திறம் புனைதலாம்; அஃதாவது ஒன்றனைப் புகழ்ந்தாற் போன்று பழிப்பதாம்.

போன்று தம்மை நியமிப்பாரில்லாமல்), தாமேவன - தாம்விரும்புவன வற்றை, செய்தொழுகலான் - செய்து நடத்தலால், (எ - று).

உயர்வும் இழிவுமாகிய தமது காரண வேறுபாடு குறிப்பால் தோன்ற நின்றமையால், இது கயவரைப் புகழ்வார் போன்று பழித்தபடியாயிற்று. இதனால் கயவர் விலக்கப்படுத லில்லாமல் வேண்டியவற்றைச் செய்வாரென்பது சொல்லப்பட்டது. ...

(க - து) கீழ்மக்கள் விலக்குபடுதலில்லாது தாம்விரும்பிய வற்றை விரும்பியவாறு செய்வர் என்பது

3. The base are likened to gods; for they act as they like.



ச. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

பரி:—(இ - ள்.) கீழாயினான் தன்னிற் சுருங்கிய * பட்டியா யொழுகுவாரைக் கண்டானாயின், அவ்வொழுக்கத்தின்கண் † அவரிற் றன் மேம்பட்டு ‡ அதனாற் றன்மிகுதிகாட்டி யிறுமாக்கும், (எ - று).

() அகப்பட்டி - அகமாகியபட்டி பட்டிபோன்று வேண்டியவாறே யொழுகலின் 'பட்டி' என்றார்; $ "நோதக்க செய்யுஞ் சிறுபட்டி" என்றார் பிறரும். இதனால் ⁝ அவர் மேம்படுமாறு கூறப்பட்டது.

தேளி:—(இ - ள்.) கீழ் – கீழாயினன், அகப்பட்டியாவாரை - (தன்னிற்) சுருங்கியபட்டியாய் நடப்பவரை, காணின் - கண்டானாயின், (அந்நடக்கையில்), அவரின் - அவரைக் காட்டிலும், மிகப்பட்டு - (தான்) மேம்பட்டு, செம்மாக்கும் - (அதனால் தன் மிகுதியைக் காட்டி) இறுமாப்படைவன், ()

அகப்பட்டி - அகமாகியபட்டி. (கீழாயினார்) பட்டிபோன்று வேண்டியபடியே நடத்தலால் (அவரை) 'பட்டி' என்றார் இதனால் அவர் மேம்படும் விதம் சொல்லப்பட்டது.

* பட்டியாய் - காவலில்லாதவராய்.

† அவரின் - அகப்பட்டியாயொழுகுவாரினும்.

‡ அதனால் - அம்மேம்பாட்டினால்.

() அகப்பட்டி - அகமாகிய மனம் சுருங்குதலுடையவராய்ப் பட்டி (கள்வன்) போன்று தாம்விரும்பியவாறே யொழுகுகின்றவர்.

$ கலித்தொகை-குறிஞ்சிக்கலி, 15. இதன்பொருள். நோவத்தக்க தொழில்களைச் செய்யுஞ் சிறியனாகிய காவலில்லாதவன் என்பது.

⁝ அவர் - கயவர்.

(க - து.) கீழ்மகன் தன்னிற் கீழாயினோரைக் கண்டவிடத்து அவரிடத்துத் தனது செய்கைகளை வியந்து கூறி, இறுமாப் படைவன் என்பது.

4. The base prides himself when he sees those whose acts are meaner than his own.



ரு. அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

பரி:—(இ-ள்.) * கயவராதாய வாசாரங்கண்டதுண்டாயின், † அதற்குக் காரணம் அரசனான் ஏதம் வருமென்றஞ்சு மச்சமே; ‡ அஃதொழிந்தால், தம்மால் அவாவப்படும்பொருள் ¶ அதனாலுண்டாமாயின் | சிறிதுண்டாம், (எ - று).

|| ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், ⁝ அவாவப்படுவதனை 'அவா' என்றுங் கூறினார். o எச்சத்தின்கண் ணென்னுமேழாவது இறுதிக் கட் டொக்கது § பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு, இவ்விரண்டானு மன்றி இயல்பாக வுண்டாகாதென்பதாம். வேண்டியசெய் தலே இயல்பு, ஆசாரஞ் செய்தல் இயல்பன்றென்பது இதனாற் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள் ) கீழ்களதாசாரம் - கீழோரது ஆசாரத்தை, (கண்டதுண்டாயின் அதற்குக் காரணம்), அச்சமே-(அரசனால் துன்பம் வருமென்று அஞ்சும்) அச்சமே, எச்சம் - (அஃது) ஒழிந்தால், அவா - (தம்மால்) அவாவப்படும் பொருள், உண்டேல் - (அதனால்) உண்டாமாயின், சிறிதுண்டாம் - (அது) சிறிதுண்டாகும் (எ - று).

* கயவராதாய - கயவர்களுடையதாகிய

† அதற்கு - அவ்வாசாரத்திற்கு. ‡ அஃது - அவ்வச்சம்.

¶ அதனால் - அவ்வாசாரத்தால்.

| சிறிதுண்டாம்-கீழ்மக்களிடத்துஅவ்வாசாரம் சிறிதுண்டாயிருக்கும்.

|| கீழ்மக்களது ஆசாரத்தின் காரணமாகிய அச்சத்தை 'அச்சமே கீழ்கள தாசாரம்' என்றொற்றுமை செய்து கூறினமையின், இது காரணம் காரிய மாய உபசார வழக்காம்-அச்சம்-காரணம்; ஆசாரம் - காரியம்.

⁝ அவா என்பது அவாவப் படுதற்கேதுவாயபொருளை யுணர்த்துத லால், காரியவாகு பெயராம். பொருள்—காரணம்; அவா - காரியம்.

o எச்சம் என்பதனிறுதியில் கண் என்னும் ஏழனுருபு செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது; அதன் பொருள் ஒழிந்தால் என்பதாம்.

§ கீழ்மக்களிடத்து ஆசாரம் பெரும்பான்மை அச்சங்காரணமாகவும் சிறுபான்மை பொருட்பேறு காரணமாகவு மிருப்பதன்றி, இயல்பாக இருப்பதில்லை யென்பதாம். பொருட்பேறு - மணி, பொன், நெல் முதலிய பொருள்களைப் பெறுவதாம்.

ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், அவாவப்படும் பொருளை 'அவா' என்றும் சொல்லினார். எச்சத்தின்கண் என்னும் (கண் என்னும்) ஏழனுருபு இறுதியில் தொக்கு நின்றது. கீழ்மக்களுக்கு ஆசாரம் பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு என்னுமிவ்விரண்டாலு மல்லாமல் இயல்பாக உண்டாகா தென்பதாம். கீழ்மக்களுக்கு வேண்டியவற்றைச் செய்தலே யியல்பு, ஆசாரஞ் செய்த லியல்பன் றென்பது இதனாற்சொல்லப்பட்டது. ஆசாரம் - ஒழுக்கம்.

(க - து.) கீழ்மக்களிடத்து ஆசாரம் அச்சம் பொருட்பேறு என்று மிவற்றுள் ஒன்றாலன்றி இயல்பாக விருப்பதில்லை என்பது.

5. Fear is the only motive power in the degenerate; if any other, hope of gain, to some extent.



கூ. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்து ரைக்க லான்.

பரி:—(இ - ள்) தாங்கேட்டமறைகளை இடந்தோறுந் தாங்கிக்கொண்டு சென்று பிறர்க்குச் சொல்லுதலான், கயவர் அறையப்படும் * பறையினை யொப்பர், (எ - று).

மறை - வெளிப்படிற் குற்றம் விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லிய சொல். பிறர் - அம்மறைக்கற்குரியார். 'உய்த்து' என்றார்; † அவர்க்கது பெரும்பாரமாதனோக்கி. பறை ஒருவன் கையாற்றன்னை யறிவித்த தொன்றனை இடந்தோறுங் கொண்டுசென்று யாவரையு மறிவிக்குமாகலான், ‡ இது தொழிலுவமம். இதனால் ¶ அவாது செறிவின்மை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) தாங்கேட்ட—, மறை-இரகசியங்களை, உய்த்து—(இடந்தோறும்) தாங்கிக்கொண்டுபோய், பிறர்க்கு—,உரைக்கலான் - சொல்லுதலால், கயவர் - கீழ்மக்கள், அறைபறையன்னர் - அறையப்படும் பறையினை யொப்பாவர், (எ-று).

* பறை - பறையர் கொட்டும் வாத்தியங்களுள் ஒன்று.

† அவர்க்கு (கீழ்மக்களுக்கு) அது (தாங்கேட்ட இரகசியம்) பெரும் பாரமாதல் (பெரும்பளுவா யிருத்தலை) நோக்கி.

‡ பறை ஒருவன் கையால் தன்னை யறிவித்ததொரு விஷயத்தையிடந் தோறுங்கொண்டு சென்று யாவர்க்கும் அறிவித்தல் போன்று கீழ்மக்கள் தாங்கேட்ட இரகசியத்தை யுட்கொண்டு பலவிடங்களிற் சென்று பிறர்க்குச் சொல்லுதலால், இக்குறள் தொழிலுவமை யாயிற்றென்க. பறையறிவித்தல் உவமானம்; கீழ்மக்கள் சொல்லுதல்-உவமேயம்.

¶ அவாது செறிவின்மை - கயவரது அடக்கமில்லாமை.

மறை - வெளிப்பட்டால் குற்றம் விளையுமென்று பிறரைமறைத்து ஒருவன் சொல்லியசொல் பிறர்-அவவிரகசியங்களை மறைத்தற்குரியவர். 'கேட்டு' என்றார்; அவர்க்கு அது பெரும்பாரமாதலை நோக்கி. பறை ஒருவன் கையால் தன்னையறிவித்ததொன்றனை இடந்தோறுங் கொண்டுசென்று அறியாதவர் யாவரையும் அறிவிக்குமாதலால், இது தொழிலுவமமாம். இதனால் அவரது செறிவில்லாமை சொல்லப்பட்டது.

(க - து.) கீழ்மக்களிடத்து இரகசியம் வெளியாகாதிருத்தலில்லை என்பது.

6. The degenerate are like a drum that is beaten, for they reveal the secrets they have heard.

எ. * ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

பரி:—(இ - ள்.) கயவர்தங் ‡ கதுப்பினை நெரிப்பதாக வளைந்த கையினையுடைய ரல்லாதார்க்குத் தாமுண்டு † பூசியகையைத் தெறித்தல் வேண்டுமென்றிரந்தாலுந் தெறியார், (எ-று).

வளைந்தகை - முறுக்கியகை. ¶ மெலிவார்க்கு யாதுங்கொடார்; நலிவார்க்கு எல்லாங்கொடுப்பரென்பதாம்.

தெளி:—(இ - ள்) கயவர் - கீழ்மக்கள், கொடிறுடைக்கும் - (தமது) கதுப்பினை நெரிப்பதாக, கூன் - வளைந்த, கையரல்லாதவர்க்கு - கையினையுடைய ரல்லாதவர்க்கு, ஈர்ங்கை - (தாம் உண்டு) பூசியகையை, (தெறிக்க வேண்டுமென்று இரந்தாலும்), விதிரார் - தெறியார், (எ - று).

வளைந்தகை-முறுக்கியகை. கீழ்மக்கள் மெலிவார்க்கு ஒன்றுங்கொடார்; தம்மை வருத்துவார்க்கு எல்லாங் கொடுப்பரென்பதாம்.

(க - து.) கீழ்மக்கள் தம்மை வருத்துவார்க்கன்றி மெலிவார்க்கு அவர் யாதுகூறினும் ஒன்றுங் கொடார் என்பது.

* "தளிர்மேலே நிற்பினுந் தட்டாமற் செல்லா, உளிநீரார் மாதோ கயவர் - அளிநீரார்க், கென்னானுஞ் செய்யா ரெனைத்தானுஞ் செய்பவே' இன்னாங்கு செய்வார்ப் பெறின்" என்று நாலடியார் கூறுவதும், "பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில், உற்றா ருகந்தா ரெனவேண்டார் - மற்றோர், இரணங் கொடுத்தா லிடுவ ரிடாரே, சரணங் கொடுத்தாலுந் தான்' என்று நல்வழி கூறுவது மிங்குணர்தற்பாலனவாம்.

‡ கதுப்பினை - கன்னத்தை. † பூசியகை - கழுவியகை.

¶ மெலிவார்க்கு-உணவின்மையால் வருந்தி யாசிப்பவர்க்கு.

7. The degenerate would grudge even to shake off (a bit of rice) that sticks to their hands save to those who would break their jaws with clenched fists.



அ. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

பரி:—(இ - ள்.) மேலியார் சென்று தங்குறையைச்சொல்லிய துணையானே இரங்கிப் பயன்படுவர் மேலாயினார்; மற்றைக்கீழாயினார் கரும்புபோலவலியார்,நையநெருக்கியவழிப் பயன்படுவர், (எ-று)

*பயன்படுதல் - உள்ளதுகொடுத்தல். கீழாயினாரதிழிவுதோன்ற மேலாயினாரையும் உடன் கூறினார். இவை யிரண்டுபாட்டானும் * அவர் கொடுக்குமாறு கூறப்பட்டது.*

**தெளி:**—(இ - ள்.) *சான்றோர் - மேலாயினார், சொல்ல - (மெலியவர் சென்று தங்குறையைச்) சொல்லியவளவிலே, பயன்படுவர்-(இரங்கிப்) பிரயோசனப்படுவர், கீழ் - மற்றைக்கீழாயினார், கரும்புபோல் - கரும்பை (நையநெருக்குவது) போல, கொல்ல-(வலியவர்) நையநெருக்கிய விடத்து பயன்படும் - பிரயோசனப்படுவர், (எ - று).*

*பிரயோஜனப்படுதல் - உள்ளபொருளைக் கொடுத்தல். கீழாயினாரது இழிவுதோன்றச் 'சொல்லப்பயன்படுவர் சான்றோர்' என மேலாயினாரையும் (ஒன்றினை முடித்தல் தன்னினை முடித்தலென்னும் முத்தியால்) உடன் சொல்லினார். இவை இரண்டுபாட்டாலும் அவர் கொடுக்கும் விதம் சொல்லப்பட்டது. வலியவர்—கொடுங்கோல்மன்னர், கள்வர் முதலாயினர்.*

(க-து.) *கீழ்மக்கள் வலியார் தம்மை நைய வருத்தியவிடத்தே அவர்க்குத் தமக்குள்ள பொருளைக் கொடுப்பர் என்பது.*

8. The noble become fruitful (by giving alms on hearing the sufferings of the poor; but the base, like the sugar-cane, only give when tortured.



கூ. உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

பரி:—(இ - ள்.) பிறர் செல்வத்தாற் பட்டுந் துகிலு முடுத்தலையும் பாலோ டடிசி லுண்டலையுங் கீழாயினான் காணுமாயின், † அவற்றைப் பொறாது ‡ அவர்மாட்டு வடுவில்லையாகவும் உண்டாக்க வல்லனாம், ()

* *அவர் - கயவர். † அவற்றை - உடுத்தலையும் உண்டலையும்.*

‡ *அவர்மாட்டு - பிறரிடத்து. "உண்டு குணமிக் கொருவர்க் கெனினிலக்கீழ், கொண்டு புகல்வதவர் குற்றமே" என்று நன்னெறி கூறுவதிங் குணர்தற்பாலதாம்.*

* உடுப்பது உண்பதென்பன ஈண்டவ்வத் தொழின்மே னின்றன; † அவற்றாற் பூண்டல் ஊர்தல் ‡ முதலிய பிறதொழில்களுங் கொள்ளப்படும். ¶ அவற்றைக்கண்ட துணையானே பொறாமையெய்தலிற் 'காணின்' என்றும், கேட்டார் இது கூடுமென் றியையப்படைத்தல் அரிதாகலின் 'வற்றாகும்' என்றுங்கூறினார். இதனாற் | கயவர் பிறர்செல்வம் பொறாமை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) கீழ் - கீழாயினோன், (பிறர்செல்வத்தால்), உடுப்பதூஉம் - (பட்டுடுத்திலும்) உடுத்தலையும், உண்பதூஉம் - (பாலுடன்சோறு) உண்ணுதலையும், காணின் - கண்பானாயின், (அவற்றைப்பொறாமல்), பிறர்மேல் - அவரிடத்து, (குற்றமில்லையாகவும்), வடுக்காண - குற்றமுண்டாக்க, வற்றாகும் - வல்லவனாவன், (எ - று).

உடுப்பது உண்பது என்பன இங்கு அவ்வத்தொழிலின்மேல் நின்றன; அவற்றால் ஆபரணம் பூணுதல் வாகனமேறுதல் முதலிய பிறதொழில்களும் கொள்ளப்படும். கீழாயினோன் அவற்றைக் கண்டவளவாலே பொறாமையடைதலால் 'காணின்' என்றும், கேட்டவர் இக்குற்றம் இவரிடத்திருக்கலாமென்று உடன்படச்செய்தல் அரிதாகலால் 'வற்றாகும்' என்றும், சொல்லினார். இதனால் கயவர் பிறர்செல்வம் பொறாமை சொல்லப்பட்டது.

(க - து.) கீழ்மக்கள் பிறருடுப்பதையும் உண்பதையும் காண்பாராயின், பொறாமையடைந்து, அவரைப்பழித்துக்கூறுவர்.

9. The vile man will bring an evil accusation against others when he sees them well clothed & fed.



க0. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

* உடுப்பது உண்பது என்னும் வினைமுற்றுக்கள் இங்கு உடுத்தல் உண்டல் என அந்தந்தத் தொழிலின்மேல் நின்றன. "உலகந் தழீஇய தொட்பம்" என்னுங் குறளின் விசேடவுரையில் "தழீஇயது இல்லது என்பன அவ்வத்தொழின்மே னின்றன" என்று வரைந்திருப்பதும் இங்குணர்தற்பாலதாம்.

† அவற்றால் - உடுத்தல் உண்டல்களால்.

‡ முதலிய என்றமையின், கலவைபூசுதல், பூச்சூடுதல் முதலியவற்றையுங் கொள்க.

¶ அவற்றை - உடுத்தல் உண்டல் முதலியவற்றை.

| கயவர் பிறர்செல்வம் பொறாமை - கீழ்மக்கள் பிறர் செல்வமுடையவராயிருத்தலைக்கண்டு பொறாமையடைதல்.

பரி:—(இ - ள்.) கயவர் தம்மை யாதானுமோரு துன்ப முற்றக்கால் அதுவே பற்றுக்கோடாக விரைந்து தம்மைப் பிறர்க்கு விற்றற்குரியர்; அதுவன்றி வேறெத்தொழிற்குரியர், (எ-று).

உணவின்மையாகப் ‡ பிறிதாக ஒன்றுவந் துற்றதுணையானென்பது தோன்ற 'ஒன்றுற்றக்கால்' என்றும், கொள்கின்றார் தங் கயமையறிந்து வேண்டா வென்றதற்குமுன்னே விற்று நிற்றலின் 'விரைந்து' என்றுங் கூறினார். ஒரு தொழிற்கு முரியரல்லரென்பது குறிப்பெச்சம். இதனாற் கயவர் தாம்பிறர்க்கடிமையாய் நிற்பரென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) கயவர் - கீழ்மினோர், ஒன்று-(தம்மையாதாகிலும்) ஒரு துன்பம், உற்றக்கால் - அடைந்தவிடத்து, (அத்துன்பமேசார்பாக), விரைந்து—, விற்றற்குரியர் - (தம்மைப் பிறர்க்கு) விலைசெய்தற்கு உரியவராவர், எற்றிற்குரியர் (அதுவல்லாமல் வேறு) எத்தொழிற்கு உரியவராவர், (எ-று).

உணவில்லாமையாகவாவது வேறாகவாவது ஒருதுன்பம் வந்தடைந்த அளவாலென்பது தோன்ற 'ஒன்றுற்றக்கால்' என்றும, கீழாயினர் தம்மைக்கொள்ளுகின்றவர் தமது கீழ்மையை அறிந்து வேண்டாமென்றற்கு முன்னே விற்று நிற்றலால் 'விரைந்து' என்றும் சொல்லினர். (கயவர்) ஒரு தொழிலுக்கும் உரியரல்லரென்பது குறிப்பெச்சமாம். இதனால் கயவர் தாம் பிறர்க்கு அடிமையாய் நிற்பரென்பது சொல்லப்பட்டது.

(க-து.) கீழ்மக்கள் தாங்கொரு துன்பம் சேர்ந்தவிடத்து, அதுவே சார்பாகத்தம்மைப் பிறர்க்கு விற்றற்குரியவராவரன்றி வேறெதற்கு முரியவராகார் என்பது

10. The ignoble will quickly sell themselve as soon as a calamity befalleth them. For what else are they fitted ?

ஒழிபியல் முற்றிற்று.

பொருட்பால் முற்றிற்று.

பொருட்பாலின் அதிகாரத்தொகை 70; அவற்றுள்,அரசியல் 25, அங்கவியல் 32, ஒழிபியல் 13 ஆம்.

திருவள்ளுவமாலையில் பொருட்பால் எழுவகைப்படுமென்று கூறப்பட்டிருக்கின்றது. பரிமேலழகர் அவ்வேழும் அரசியல், அங்கவியல், ஒழிபியல் என் னுமூன்றனுளடங்குமென்றுட்கொண்டு, பொருட்பால் அரசியல், அங்கவியல், ஒழிபியலென மூன்றுவகைப்படுமென்று, அதனைவகுத்துக்கொண்டாரென்பது இங்குணர்தற்பாலதாம். அவ்வேழாவன:(1)அரசியல், (2)அமைச்சியல், (3) அரண், (4) கூழ் (பொருள்), (5) படை, (6) நட்பு, (7) குடியென்பனவாம். போக்கியார் திருவள்ளுவமாலையில் "அரசிய லையைந் தமைச்சிய லீரைந், துருவல் லரணிரண்டொன் றொண்கூழ்—இருவியல்திண் படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன், றெண்பொருள் ளேழா மிவை". என்று கூறியிருப்பதிங்குணர்தற்பாலதாம்.

‡ பிறிதாக-உட்பகை முதலியவற்றுள் ஒன்றில்லாமையாலாவது.

# 3. காமத்துப்பால்—ON LOVE.

## † 1—களவியல்—In Union.

பரி:—‡ இனி அப்பொருளைத் துணைக்காரணமாகவுடைத்தாய் இம்மையே பயப்பதாய வின்பங் கூறுவா னெடுத்துக்கொண்டார். இன்பமென்றது ஒருகாலத்தொருபொருளானைம்புலனுநுகர்தற்சிறப்புடைத்தாய காமவின்பத்தினை. இச்சிறப்புப்பற்றிவடநூலுட் ¶ போச

† "களவு கொலை காமம் இணைவிழைச்சு என்பனவன்றே சமயத்தாரானும் உலகத்தாரானுங் கடியப்பட்டன? அவற்றுள் ஒன்றன்றேலோ இஃதெனின், அற்றன்று; களவெனுஞ் சொற்கேட்டுக்களவு தீதென்பதூஉங் காமமெனுஞ் சொற்கேட்டுக் காமந்தீதென்பதூஉமன்று; மற்றவை நல்லவாமாறுமுண்டு; என்னை? ஒரு பெண்டாட்டி தமரொடு கலாய்த்து நஞ்சுண்டு சாவலென்னும் உள்ளத்தாளாய் நஞ்சுகூட்டிவைத்து விலக்குவார் இல்லாதபோழ்து உண்பலென்று நின்றவிடத்து, அருளுடையான் ஒருவன் அதனைக்கண்டு, இவள் இதனையுண்டுசாவாமைக்கொண்டுபோய் உகுப்பலென்று அவளைக்காணாமே கொண்டுபோய் உகுத்திட்டான்; அவளுஞ் சனநீக்கத்துக்கண் நஞ்சுண்டு சாவான் சென்றாள்; அதுகாணாளாய்ச் சாக்காடு நீங்கினாள். அவன் அக்களவினான் அவளை உயக்கொண்டமையான் நல்லூழிச் செல்லுமென்பது. மற்றும் இதுபோல்வன களவாகா, நன்மை பயக்குமென்பது." என்றும், "சிறப்பினாற் பெயர்பெற்றது களவியலென்பது என்னை? களவு கற்பு என்னும் கைகோள் (ஒழுக்கம்) இரண்டனுள் களவினைச் சிறப்புடைத்தென்று வேண்டும் இவ்வாசிரியன்; என்னை? 'முற்படப்புணராதசொல் லின்மையிற், கற்பெனப் படுவது களவின் வழித்தே' என்று வேண்டுதலின். கற்புக் களவுபோல ஒருதலையான அன்பிற்றன்று" என்றும், இறையனாரகப் பொருளின் முதற்சூத்திரவுரையிற் கூறப்பட்டிருத்தலிற்குக் கவனித்தற்பாலதாம்.

‡ இலக்கணவிளக்கநூலார் "இன்பமாவது பொருள் துணைக்காரணமாக ஒருகாலத்து ஒரு பொருளான் ஐம்புலன்களும் நுகர்தற்சிறப்புடையதாம்" என்றனர்.

¶ போஜராஜனென்பவன் தாராநகரத்தை யாண்டவரசர்களுள் ஒருவன். இவ்வரசன் சிறுவயதிலேயே தந்தையையிழந்து, தனது சிறியதந்தையாகியமுஞ்சன் செய்யவெண்ணிய கொலையினின்றுந் தப்பிச் சிம்மாசனமேறி, காளிதாசன், வரருசி, பாணன் முதலிய பண்டித இரத்தினங்கள் சூழுமாறிருந்து, புலவர்களுக்கு வரையாதுகொடுத்துப் பெரும்புகழ்பெற்று வாழ்ந்து வந்தானென்பது கதை.

ராசனும் * சுவைபலவென்று கூறுவார் கூறுக; யாங்கூறுவ † தின்பச்சுவை யொன்றனையுமே' என இதனையே மிகுத்துக் கூறினான். இது ‡ புணர்ச்சி பிரிவென இருவகைப்படும். ஏனையிருத்தல், இரங்கல், ஊடலென்பனவோவெனின், இவர் ¶ பொருட்பாகுபாட்டினை அறம் பொருளின்பமென வடநூல்வழக்குப்பற்றி யோதுதலான், அவ்வாறே § யவற்றைப் பிரிவின்க ணடக்கினாரென்க. இனி | அவை தம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும் பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மைபற்றி வகுத்து' () அவற்றைச் சுவை மிகுதிபயப்ப உலகநடையோடு ஒப்பு மொவ்வாமையு முடையவாக்கிக் கூறுகின்றார். ○ அக்கைகோளிரண்டினுள்ளுங் களவாவது பிணிமூப்பிறப்புக்களின்றி எந்நான்று மொருதன்மையவாய் உருவுந் திருவும் பருவமுங் குலனுங் குணனு மன்பு முதலியவற்றுந் தம்மு ளொ

* சுவை - சொற்சுவை, பொருட்சுவையென விருவகையாம். சொற்சுவை-குணம் அலங்காரம் என விருவகையாம்; பொருட்சுவை- காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்தமென ஒன்பது வகையாம். பொருட்சுவை மெய்ப்பாட்டினடியாகப் பிறக்கும் மெய்ப்பாடாவது புறத்துக்கண் ஓர் பொருள் காரணமாக நெஞ்சின்கட் டோன்றிய விகாரத்தின் விளைவாம்.

† இன்பச்சுவையாவது புணர்ச்சிபற்றிய விருப்பம். இதனைச் சிங்காரரசம் என்பர் வடநூலார். இன்பம், காமம், சிங்காரம் என்பன ஒரு பொருட்கிளவி.

‡ முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்னும் மூன்றனுள் புணர்ச்சி முதலியன உரிப்பொருளாம் குறிஞ்சித்திணைக்குப் புணர்தலும் புணர்தல் நிமித்தமும், பாலைத்திணைக்குப் பிரிதலும் பிரிதல நிமித்தமும், முல்லைத்திணைக்கு இருத்தலும் இருத்தல் நிமித்தமும், மருதத்திணைக்கு ஊடலும் ஊடல் நிமித்தமும், நெய்தற்றிணைக்கு இரங்கலும் இரங்கல் நிமித்தமும் உரிபொருளா மென்பதிங் கறிதற்பாலதாம்.

¶ பொருட்பாகுபாட்டினைத் தமிழ்நூலார் அகப்பொருள் புறப்பொருள் என இருவகைப்படுத்திக் கூறுவர் [அகத்தை (மனத்தை)ச் சார்ந்து வரும் பொருள் அகப்பொருளாம்; புறத்தைச்சார்ந்து வரும் பொருள் புறப்பொருளாம்] "போக்கறு மரபிற் பொருளெனப் படுவது" என்னுஞ் சூத்திரத்தினுரையில் இலக்கண விளக்கநூலார் "உலகநடையானும் வேதநடையானும் அறமும் பொருளு மின்பமுமென மூன்று வகைப்படும். அங்ஙனம் விரித்துக்கூறப்படும் பொருளே சுருக்கிக் கூறுந் தமிழ்நடையான் அகப்பொருளும் புறப்பொருளுமென இரண்டு வகைத்தாய்" என்று கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

§ அவற்றை-இருத்தல், இரங்கல், ஊடலென்பனவற்றை.

| அவைதம்மையே-புணர்ச்சி, பிரிவுகளையே.

() அவற்றை-புணர்ச்சி பிரிவுகளை.

○ களவு கற்பென்னும் கைகோள் (ஒழுக்கம்) இரண்டனுள்ளும்.

ப்புமையுடையாராய தலைமகனுந் தலைமகளும் பிறர்கோடுப்பவு மடுப்பவுமன்றிப் பால்வகையாற் றாமே யெதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது. அதனை யேழதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கட் டகையணங் குறுத்தல் கூறுகின்றார்

தெளி:—இனி அப்பொருளைத் துணைக்காரணமாக வுடையதாய் இம்மைப் பயனையே தருவதாகிய இன்பத்தைச்சொல்லும்படி யெடுத்துக்கொண்டார். இங்கு இன்பமென்றது ஒருகாலத்தில் ஒருபொருளால் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புலன்களையும் ஐம்பொறிகளாலும் அனுபவித்தற் சிறப்புடையதாகியகாமவின்பத்தினை இச்சிறப்புப்பற்றி வடநூலுள் போசராசனும் 'சுவைபலவென்று சொல்லுவார் சொல்லுக; யாம் சொல்வது இன்பச்சுவை யொன்றனையுமே' என்று இதனையே மிகுதியாகக் கூறினான். இவ்வின்பச்சுவை புணர்ச்சி பிரிவு என இருவகைப்படும். மற்றை இருத்தல் இரங்கல் ஊடல் என்பனவோ வென்றால், இவர் பொருட்பாகுபாட்டினை அறம்பொருளின்பமென வடநூல் வழக்குப்பற்றிச் சொல்லுதலால், அவ்வாறே அவற்றைப்பிரிவினிடத் தடக்கினாரென்றறிக. இனி அவற்றையே தமிழ்நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக்களவென்றும் பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவற்றைச் சுவைமிகுதி தோன்ற உலக நடையோடு ஒத்தலும் ஒவ்வாமையுமுடையனவாக்கிச் சொல்லுகின்றார். அக்களவொழுக்கத்தினுள் களவாவது பிணி மூப்பு இறப்புக்களில்லாமல் எப்போதும் ஒருதன்மையராய் உருவும், திருவும், பருவமும், குலமும், குணமும், அன்பும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமை யுடையவராகிய தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவும் இல்லாமல் ஊழ் வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது. அதனை ஏழதிகாரத் தாற் சொல்லத்தொடங்கி, முதலில் தகையணங்குறுத்தல் சொல்லுகின்றார்.

ஐம்பொறி-ஐந்து இந்திரியங்கள்; ஊழ்வகையால் - விதிவசத்தால்.

## முதல் அதிகாரம்

## தகையணங்குறுத்தல்—Pain at the sight of Beauty.

பரி:—அஃதாவது * பொழில்விளையாட்டு விருப்பின் ஆயம் நீங்க அதன்கட் டமியளாய் நின்றாளை வேட்டைவிருப்பான் இளையாரை நீங்கித் தமியனாய்வந்து கண்ணுற்ற தலைமகன் அவள் வனப்புத் தன்னை வருத்தமுறுவித்தலைச் சொல்லுதல். இது கண்ணுற்றபொழுதே நிகழ்வதாகலின், முதற்கட் கூறப்பட்டது

* "ஒன்றே வேறே" என்னுஞ் சூத்திரத்தினுரையில் இலக்கண விளக்கநூலார் "அதவே, தானே யவனே" என்னும் இறையனாரகப்பொருட் சூத்திரத்தினுரையை யனுசரித்து, "இக்களவொழுக்கங் கொடுப்போரும் அடுப்போரும் இன்றித் தாமே தனியிடத்து எதிர்ப்பட்டுப் புணருங் கந்தருவத்தோடு ஒக்குமென்றலின், இவரும் அவ்வாறு ஓரிடத்தும் வேறிடத்துங்

காண்புழித் தனித்துக் காண்பரென்பதூஉம் பெற்றாம்; பெறவே, இருவரும் முட்டில் செல்வத்தாராதலின் தலைவனுங் கறங்குங் கந்துகத்தேரேறிப் போத்துங் கடுங்கண்யானையுந் தறுகட் பன்றியும் கருவரையும் இருநிலனும் பெருவிசும்பும் அனையார் ஆளிமொய்ம்பின் அரிமானற்றப்பினோர், பற்பன்னூறாயிரவர் கூர்வேலிளைஞர் தற்சூழ வேட்டை விருப்பாற் செல்வானென்பது முடிந்தது. தலைவியும் உடன்பிறந்து உடன் வளர்ந்து சீர் உடனுடைச் சீர் உடன்பெருகி ஒல் உடனூட்டப் பால் உடனுண்டு பல் உடனெழுந்து சொல் உடன் கற்றுப் பழைமையும் பயிற்சியும் பண்பும் நண்பும் விழுப்பமும் ஒழுக்கமும் மாட்சியும் உடையார் பற்பன்னூறாயிரவர் கண்ணும் மனமுங்கவரும் ஒண்ணுதன் மகளிர் தற்சூழத் தாரகை நடுவண் தண்மதிபோலப் பொழில் விளையாட்டு விருப்பாற் செல்வாளென்பது முடிந்தது. முடியவே, தனித்துக் காண்டல் முடியாதெனின், முடியும்; என்னை? அவள் ஆயங்களும் பொழிலிடம் புகுதலும் விளையாட்டு விருப்பினால் ஒவ்வொருவரின் முன்னர்த் தழைவிழைந்தன கொடுத்து மென்றும், கண்ணிதண்ணறு நாற்றத்தனசெய்து மென்றும், போதுமேதக்கன கொய்து மென்றும், மயிலொடு மாறாடுது மென்றும், குயிலொடு மாறு கூறுதுமென்றும், அருவியாடி ஆஞ்சுனைகுடைகுது மென்றும், வாசமலர்க் கொடியினூசலாடுது மென்றும் பரந்து, அப்பாலுள்ளார் இப்பாலுள்ளார் கொல்லோ வென்றும், இப்பாலுள்ளார் அப்பாலுள்ளார் கொல்லோவென்றும், இவ்வண்ணம் நினைத்துப் பிரிவரென்க. இவவகை தம்யளாகப் பிரிவரோவெனின், எட்டியுஞ் சுட்டியுங்காட்டப்படுங் குலத்தாள்ளாளல்லாளாதலானும், பான்மை அவ்வகைத்தாதலானும், பிறவாறு நினையார் பிரிவரென்க ஆயின், இவ்வகைப்பட்ட ஆயத்திடை மேனாட் பிரிந்தறியாதாள் தமியளாய் நிற்குமோ வெனின், நிற்கும்; தான் பயின்ற இடமுந் தன்னையத்தோடு ஒக்குமாதலானென்க. யாங்ஙனம் நிற்குமோவெனின், சந்தனமுஞ் சண்பகமுந் தேமாவும் தண்பலாவும் ஆசினியும் அசோகமும் கோங்கமும் வேங்கையுங் குரவமும் விரிந்து, நாகமுந் திலகமும் நறவும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌவலொடு மணநாகமழ்ந்து, பாதிரியும் பரவைஞாழலும் பைங்கொன்றையொடு பிணியவிழ்ந்து, பொரிப்புன்கும் புன்னாகமும் முருக்கினொடு முகை திறந்து, வண்டறைந்து தேனார்த்து வரிக்குயிலினம் வரிபாடச் சிறுதென்றல் இடை விராய்த் தனியவரை முனிவு செய்யும் பொழில் தன்றி, அவணதோர் மாணிக்கச் செய் குன்றின்மேல் விசும்பு துடைத்துப் பசும்பொன் பூத்து வண்டுதுவைப்பத் தண்டேன் துளிப்பதோர் வெறியுறும் நறுமலர் வேங்கை கண்டாள்; கண்டுபெரியதோர்காதற்களிகூரத்,தன்செம்மலர்ச்சீறடிமேற் சிலம்பு கிடந்து சிலம்பு புடைப்ப அம்மலரணி கொம்பர் நடை கற்பதென நடந்து சென்று, நறுவிய வேங்கை நாண்மலர் கொய்தாள்; கொய்தவிடத்து மரகத விளிம்படுத்த மாணிக்கச் சுனைமருங்கின் ஒருமாதவியல்லிமண்டபத்திற் போதுவேய்ந்த பூநாறும்பொழில் நிழற்றக், கடிக்குருக்கத்திக் கொடிப்பிடித்துத் தகரீபடு பசும்பொற்சிகரங்களின் முகடுதோறும் ஞான்று வந்து இழியும் மணியருவிபொன்கொழித்து மணிவாரன்றி மாணிக்கத்தோடு

தெளி:—அஃதாவது பொழில்விளையாட்டு விருப்பால் மகளிர் கூட்டம் நீங்க அப்பொழிலிடத்துத் தனிமையளாய் நின்றவளை வேட்டை விருப்பால் இளையார்நீங்கத் தனிமையனாய்வந்து கண்ட தலைமகன் அவளழகு தனக்கு வருத்தமுண்டாக்குதலைச் சொல்லுதல். இது கண்டபொழுதே தோன்றுவதாகலால், முதலில் சொல்லப்பட்டது.

க. அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு.

[தலைமகளுருவு முதலியன முன்கண்டறிவனவன்றிச் சிறந்தமையின், அவளைத் தலைமகனையுற்றது].

**பரி:—(இ - ள்.) இக்கனவிய குழையையுடையாள் இப்பொழிற் கணுறைவாளோர் தெய்வமகளோ, அன்றி யோருமயில்விசேடமோ, அன்றியோருமானுடமாதரோ, இவளையின்னளென்று துணியமாட்டாது என்னெஞ்சு மயங்காநின்றது. (எ - று)**

ஓ - அசை. ஆய்மயில் - படைத்தோன் விசேடமாக வாய்ந்து படைத்த மயில்; மயிற்சாதியுட்டெரிந்தெடுத்த மயிலென்றுமாம். * கனங்குழை -

வயிரம் உந்தி அணிகிளர் அருவி ஆடகப்பாறைமேல் அதிர்குரன்முரசின் இரட்ட, வண்டுந்தேனும் யாழ்முரல, வரிக்குயிலும் கிளியும் பாடத், தண்டாது தவிசுபடப்போர்த்ததோர் பளிக்குப்பாறை மணித்தலத்துமிசை ஆலவட்டம் விரித்தாற்போலத் தன் கோலக்கலாபம் விரித்து இளஞாயிற்றின் எதிர் கதிர் எறிப்ப ஓர் இளமயில் ஆடுவது கண்டு நின்றாளென்க. அப்பால் தலைவனும் பற்பன்னூறுயிரவர் கூர்வேலிளைஞரொடு குளிர்மலைச் சாரல் வேட்டம்போய் விளையாடுகின்றான் ஆண்டெழுந்ததோர் கடமானின் பின்னோடிக் காவலிளைஞரைக்கையகன்று, நெடுமான்றேரொடு பாகனை நிலவு மணற்கான்யாற்றில் நிற்கச்செய்து, தொடுகழல் அடியதிரச் சுருளுறு குஞ்சி பொன்னூணிற் பிணித்துக்கட்டிக் கமழ்நறுங்கண்ணிக்கண் வண்டு மணமயர, அஞ்சாந்தின் நறுநாற்றந் தண்பொழிலிடைப் பரந்துநாற, வரிசிலை எதிர்கணை ஏந்தி வடிவுகொண்ட காமன்போலச் சென்று அவள் நின்ற இரும்பொழில்புகும். அஃது யாங்ஙனமோவெனின், வடகடலிட்ட ஒருநுகம் ஒருதுளை தென்கடலிட்ட ஒருகழிசென்று கோத்தாற்போலவும், வெங்கதிர்க்கனலியுந் தண்கதிர்மதியமுந் தங்கதிவழுவித் தலைப்பெய்தாற் போலவும், புகுமென்க. அதனால் ஒருவர் ஒருவரைத்தலைப்பெய்து காண்ப ரென்பது. 'அதுவே,தானே யவளே தமியர் காணக்,காமப் புணர்ச்சி யிருவயி னொத்தல்' என்றார் ஆசிரியர் இறையனாரு மெனக்கொள்க" என்று வரைந்திருப்பது இங்குணர்தற்பாலதாம்.

* கனம் என்னும் அடையடுத்த குழை யென்னுந் தானியின் பெயர் அதற்குத் தானமாகிய பெண்ணையுணர்த்துதலால், அடையடுத்த தானியாகு பெயராம்; குழையென்பதனைப் புறத்துறுப்பாகக் கொண்டால்,அடையடுத்த சினையாகு பெயராம். கனங்குழையென்பது தொல்கநோக்கத்தில் அன்

ஆகுபெயர். ‡ கணங்குழையென்று பாடமோதிப் பலவாய்த் திரண்ட குழையென்றுரைப்பாருமுளர். எழுதலாகா வுருவுந் தன் வருத்தமும்பற்றி 'அணங்குகொல்' என்றும், சாயலும் பொழில்வயி னிற்றலும் பற்றி 'ஆய் மயில்கொல்' என்றும், தன்னெஞ்சஞ் சென்றமையும் அவளெதிர்நோக்கிய வாறும் பற்றி 'மாதர்கொல்' என்றுங் கூறினான்.

தெளி:—(தலைமகளது உருவுமுதவியன முன்கண்டறிவனவல்லாமல் சிறந்திருத்தலால், அவளைத் தலைமகன் ஐயுற்றது.) (இ - ள்.) கனங்குழை - இக்கனமாகிய குழையையுடையவள், அணங்குகொல் - (இச் சோலையில் வசிப்பவளாகிய ஒரு) தெய்வப்பெண்ணோ, (அல்லாமல்), ஆய் மயில்கொல் - ஒருமயில் விசேஷமோ, (அல்லாமல்), மாதர்கொல் - (ஒரு) மானுடமாதரோ, என்னெஞ்சு — என்மனம், மாலும் - (இவளை இன்னளென்று துணியமாட்டாமல்) மயங்காநின்றது, (எ - று).

ஒ - அசை. ஆய்மயில் - படைப்புக்கடவுள் (பிரமன்) விசேஷமாக ஆராய்ந்து படைத்த மயில்; மயிற்சாதிகளுள் ஆராய்ந்தெடுத்த மயிலெனினும் ஒக்கும். கனங்குழை - அடையடுத்த தானியாகுபெயர்; பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையுமாம். தலைமகன் தெய்வப்பெண்போல எழுதலாகாதவுருவும் தன் வருத்தமும்பற்றி 'அணங்குகொல்' என்றும், மயில் போல்சாயலும் பொழிலிடத்து நிற்றலும் பற்றி 'ஆய்மயில்கொல்' என்றும், தன்மனம் சென்றமையும் அவள் எதிர் நோக்கிய விதமும்பற்றி 'மாதர் கொல்' என்றும் சொல்லினான். சாயல்-ஐம்பொறியால் நுகரும் மென்மை.

(க-து.) தலைமகள் தனித்து நிற்றலைக் கண்ட தலைமகன் அவளை இன்னளென்று துணிந்தறியமாட்டாது மயங்கினான். ()

1. Is this jewelled female a celestial maiden, a choice peahen, or a human being ? my mind is bewildered.

உ. நோக்கினா ணோக்கெதிர் நோக்குதல் ¶ தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து.

மொழித்தொகையாம்; பெயர்நோக்கத்தில் ஆகுபெயராம். பரிமேலழகர் பெயர்நோக்கம்பற்றி ஆகுபெயரென்றார். சிலப்பதிகாரம் புறஞ்சேரியிறுத்த காதையினுரையில் அடியார்க்கு நல்லார் "அருந்திறல் - இராமன்; அன்மொழித்தொகையாகுபெயர்" என்று கூறியிருப்பது மிந்துணர்தற்பாலதாம். இதுபற்றி விரிவாயறிய விரும்புவோர் "முதலிற் கூறுஞ் சினையறி கிளவியும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தின் சேனாவரையருரையிலும், "பொருள் முதலாறோ" என்னும் இலக்கண விளக்கச் சூத்திரத்தினுரையிலும் கண்டுகொள்க. இஃதறியாது பரிமேலழகரை வாளாபுறங்கூறுவாருமுண்டு.

‡ கனங்குழை யென்பதனைக் கணங்குழை யெனவும் பாடங்கூறி, அதற்குப் பலவாய்த்திரண்டகுழை யென்று பொருள் கூறுவாருமுண்டு.

¶ அணங்கு - காமநெறியான் உயிர்கொள்ளும் தெய்வமகள்; தாக்குதல் - தீண்டுதல்.

[மானுடமாதராதல் தெளிந்த தலைமகன் அவணோக்கினுனைய வருத்தங் கூறியது].

பரி:—(இ - ள்.) இப்பெற்றித்தாய வனப்பினையுடையாள் என்னோக்கிற் கெதிர்நோக்குதல் தானே தாக்கி வருத்துவதோரணங்கு தாக்குதற்குத் தானையையுங் கொண்டு வந்தாற்போலுந் தன்மையையுடைத்து, (எ - று).

மேலும் 'அணங்குகொ லாய்மயில்கொல்' என்றமையான், * இகரச் சுட்டு வருவிக்கப்பட்டது 'எதிர்நோக்குதல்' என்றமையின், அது குறிப்பு நோக்காயிற்று. வனப்பால் வருந்துதன் மேலுங் குறிப்புநோக்கால் வருந்துதல் கூறியவாறு. † நோக்கினு ளென்பதற்கு என்னு னோக்கப்பட்டாளென்றுரைப்பாருமுளர்.

தெளி:—[மானுடமாதராதலைத் தெளிந்தறிந்த தலைமகன் அவள் நோக்கினாலாகிய வருத்தத்தைச் சொல்லியது.] (இ-ள்.) நோக்கினாள் - இத்தன்மையதாய அழகினையுடையவள், நோக்கு-(என்) நோக்கிற்கு, எதிர்நோக்குதல் - எதிரே நோக்குதல், தாக்கணங்கு - (தானே) தாக்கிவருத்துவதொரு தெய்வப்பெண், தானைக்கொண்டன்னது - (தாக்குதற்குச்) சேனையையுங் கொண்டுவந்தாற் போலுந் தன்மையை, உடைத்து - உடையதாம், (எ - று).

மேற் செய்யுளிலும் 'அணங்குகொ லாய்மயில்கொல்'என்றமையால்,இகரச் சுட்டு வருவிக்கப்பட்டது. 'எதிர்நோக்குதல்' என்றமையால், அந்நோக்கு குறிப்பு நோக்காயிற்று. தலைமகன் அழகால் வருந்துதல்மேலும் குறிப்பு நோக்கால் வருந்துதல் சொல்லியபடியாம்.

(க - து.) கால்நிலந் தோய்தல் கண்ணிமைத்தல் முதலியகுறிகளால், இவள் மானுடப்பெண்ணென் றறிந்த தலைமகன் அவளது குறிப்புப் பார்வையால் வருந்தினன் என்பது.

2. This beauty returning my looks (by her glance) is like a celestial maiden leading an armed band to war against me.



௩. பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) கூற்றென்று நூலோர் சொல்வதனைப் பண்டுகேட்டறிவதல்லது கண்டறியேன்; இப்பொழுது கண்டறிந்தேன்; அது பெண்டகையுடனே பெரியவாய் அமர்த்த கண்களை யுடைத்து, (எ - று).

* இகரச்சுட்டுச் சமீபத்திலுள்ளபொருளைக் குறித்துக்காட்டும்;அஃது இந்நோக்கினாள் (இப்பெற்றித்தாய வனப்பினையுடையாள்) என்பதாம்.

† நோக்கினாள் என்பதற்கு என்னால் நோக்க (பார்க்க)ப்பட்டாள் என்றுரைகூறுவாரு முண்டு.

பெண்டகை: * நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னுங் குணங்கள் அவை அவ்வக்குறிகளா னறியப்பட்டன. அமர்த்தல் - அமர்செய்தல்; † பெயரடியாய வினை. பெண்டகையால் இன்பம் பயத்தலு முண்டேனும் துன்பம் பயத்தன் மிகுதிபற்றிக் ‡ கூற்றாக்கிக் கூறினான்.

தெளி:—(இதுவுமது.) (இ - ள்.) கூற்றென்பதனை - கூற்றுவனென்று (நூலோர்) சொல்லுவதை, பண்டறியேன்-முன் (கேட்டறிவதல்லாமல் கண்டு) அறிந்திலேன், இனியறிந்தேன்-இப்பொழுது கண்டறிந்தேன், (அது), பெண்டகையால் - பெண்டகையுடனே, பேரமர்-பெரியவாயமர்த்த, கட்டு-கண்களையுடையது, (எ - று).

பெண்டகை: நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னுங் குணங்கள். அக்குணங்கள் அந்தந்தக் குறிகளால் அறியப்பட்டன. அமர்த்தல் - போர் செய்தல்; இஃது அமர் என்னும் பெயரடியாகப்பிறந்தவினைச்சொல். தலைமகன் பெண்டகையால் இன்பந்தருதலும் உண்டாயினும் மிகுதியாகத் துன்பந்தருதல் பற்றித் தலைமகள் கண்களைக்கூற்றாக்கி(யமனாக்கி)ச் சொல்லினான்.

(க - து.) வருத்தமிகுதிபற்றித் தலைமகன் தலைமகளது கண்களைக் கூற்றாக்கிக் கூறினான் என்பது.

3. I knew not death's form before; I see it now coming in lovely maiden's guise with fascinating eyes.



ச. கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்.

* இறையனாரகப்பொருளிரண்டாஞ் சூத்திரத்தி னுரையில் "தலைமகட்கு நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்பன குணம். அவற்றுள், நாணென்பது பெண்டிர்க்கு இயல்பாக வுளதொருதன்மை; மடமென்பது கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை; அச்சமென்பது பெண்மையிற் றன் காணப்படாததோர் பொருள் கண்டவிடத்து அஞ்சுவது; பயிர்ப்பென்பது பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை" என்று கூறப்பட்டிருத்தலிஇங்குணர்தற்பாலதாம்.

† அமர்த்தல் என்பது அமர் என்னும் பெயரடியாகப் பிறந்த செயற்கை வினை. வினையடியாகப் பிறந்த வினைச்சொல் இயற்கைவினையென்றும், பெயர், இடை, உரி அடியாகப்பிறந்த வினைச்சொல் செயற்கைவினை யென்றுஞ் சொல்லப்படும்.

‡ 'பண்டறியேன் கூற்றென்பதனை' எனக் கண்களைக் கூற்றாக்கிக் கூறினான். கூற்று - யமன்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) பெண்டகைமையுடைய விப்பேதைக்கு உளவாய கண்கள் தம்மைக்கண்டா ருயிருண்ணுந் தோற்றத்துடனேகூடி அமர்த்திருந்தன, (எ - று).

அமர்த்தல் - மாறுபடுதல். குணங்கட்கும் பேதைமைக்கு மேலாது கொடியவாயிருந்தன வென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) பெண்டகை - பெண்தகையை யுடைய, பேதைக்கு - இப்பேதைக்கு, கண்-(உளவாய) கண்கள், கண்டார் - (தம்மைக்) கண்டவரது, உயிருண்ணுந் தோற்றத்தால் - உயிரையுண்ணுந்தோற்றத்துடனேகூடி, அமர்த்தன - அமர்த்திருந்தன, (எ - று).

அமர்த்தல் - (கண்கள்) மாறுபட்டிருத்தல். கண்கள் நாணமுதலியகுணங்களுக்கும் பேதைமைக்கும் பொருந்தாது கொடியனவாயிருந்தன வென்பதாம்

(க - து.) தலைமகன் இவள் கண்கள் தம்மைக் கண்டாரைக் கொல்லுந் தோற்றத்துடனே கூடியிருக்கின்றன வென்று கூறினன் என்பது.

4. These eyes that apparently drink the life of those who look at them are at strife with this feminine simplicity.



ரு. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
ல்நோக்கமிம் மூன்று முடைத்து.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) என்னை வருத்துதலுடைமையாற் கூற்றமோ, என்மேலோடுத லுடைமையாற் கண்ணோ, இயல்பாக வெருவுத லுடைமையாற் பிணையோ, அறிகின்றிலேன்; இம் † மடவரல் கண்களி னோக்கம் ¶ இம்மூன்றன் றன்மையையு முடைத்தாயிரா நின்றது, (எ - று).

இன்பமுந் துன்பமும் ஒருங்கு செய்யாநின்ற தென்பதாம். தொழில் பற்றிவந்த O ஐயநிலையுவமம்.

† மடவரல் - மடமைவரப்பெற்றவள். மடமை - யௌவனப்பருவம்.

¶ இம்மூன்றன் றன்மையையும் - வருத்துதல், ஓடுதல், வெருவுதல் என்னு மிம்மூன்றன் றன்மையையும்.

O உவமானத்தையும் உவமேயத்தையும் ஐயமுற்றுரைப்பது ஐயநிலையுவமையாம். (ஐயம் - சந்தேகம்).

தெளி:—(இதுவுமது.) (இ - ள்.) கூற்றமோ - (என்னை வருத்துத லுடைமையால்) கூற்றமோ, கண்ணோ - (என்மேலோடுதலுடைமையால்) கண்ணோ, பிணையோ - (இயல்பாக அஞ்சுதலுடைமையால்) பெண்மானோ, (அறிகின்றிலேன்), மடவரனோக்கம் - இம்மடவாலது (கண்களின்) நோக்கம், இம்மூன்றும் - இம்மூன்றன் தன்மையையும், உடைத்து-உடைய தாயிருக்கின்றது, (எ - று).

நோக்கம் இன்பமும் துன்பமும் ஒருசேரச் செய்யாநின்றதென்பதாம் இது வருத்துதல் முதலிய தொழில்பற்றிவந்த ஐயநிலை யுவமையணி.

(க - து.) தலைமகன் இன்பமுந் துன்பமுஞ் செய்தல்பற்றித் தலைமகளது கண்களைக் கூற்றமோ, கண்ணோ, பிணையோ வென்றைய முற்றுக் கூறினன் என்பது.

5. Is it death's dart, eye's bright beams or a hind's glance? I know not; these three are in the looks of this maiden.

சுா. கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) பிரியாநட்பாய கொடும்புருவங்க டாந் † செப்ப முடையவாய் விலக்கினவாயின், அவற்றைக் கடந்து இவள் கண்கள் எனக்கு நடுங்குந் துயரைச் செய்யமாட்டா, (எ - று).

நட்டாரைக் ‡ கழறுவார்க்குத் தாஞ் செம்மையுடையராதல் வேண்ட லிற் 'கோடா' என்றும், செய்கின்ற அவற்றிற்கும் உறுகின்ற தனக்கும் இடை நின்று விலக்குங்காலுஞ் சிறிதிடைபெறின் ¶ அது வழியாக வந்து அஞர் செய்யுமாகலின் 'மறைப்பின்' என்றுங் கூறினான். நடுங்கஞர் - நடுங் கற்கேதுவாய வஞர். | தாமிபல்பாகக் கோடுதலுடைமையான் ‖ அவற்றை ⁝ மிகுதிக்கண் மேற்சென்றிடிக்க மாட்டாவாயின வென்பதுபட நின்ற மையின், மன் ஒழியிசைக்கண் வந்தது

† செப்பம் - நடுவுநிலைமை யுடைமை; அஃதாவது மாறுபடாமை.

‡ கழறுதல்-இடித்துக்கூறல்; அஃதாவது உறுதிச்சொல்லுரைத்தல்.

¶ அதுவழியாக - சிறிதிடைபெறுதல் வாயிலாக.

| தாம் - புருவங்களாகியதாம்.

‖ அவற்றை - கண்களை.

⁝ மிகுதிக்கண் மேற்சென்றிடித்தல் - தகாதசெய்கை யுண்டான விடத்து முற்பட்டுச்சென்று கண்டித்துப் புத்திசொல்லுதல். "நகுதற் பொருட் டன்று நட்டல் மிகுதிக்கண், மேற்சென் றிடித்தற் பொருட்டு" என்னுங் குற ளிங்குணர்தற்பாலதாம்.

தெளி:—(இதுவுமது) (இ - ள்.) கொடும்புருவம்-(பிரியா நட்பாகிய) கொடும் புருவங்கள், கோடா-(தாம்) செப்பமுடையனவா யிருந்து, மறைப்பின்-விலக்கினவாயின், (அப்புருவங்களைக் கடந்து), இவள்கண் - இவளது கண்கள், நடுங்கஞர் - (எனக்கு) நடுங்கும் துன்பத்தை, செய்யல - செய்ய மாட்டா, (எ-று).

நட்பினரைக் கண்டித்துப் புத்திசொல்வார்க்குத் தாம் செம்மையுடையவராதல் வேண்டுதலால் 'கோடா' என்றும், துன்பத்தைச் செய்கின்ற அக் கண்களுக்கும் துன்பத்தை யடைகின்ற தனக்கும் நடுநின்று விலக்கும்போது சிறிதுசந்துகிடைக்கப்பெறாமல்அதுவழியாகவந்து துன்பஞ்செய்யுமாகலால் 'மறைப்பின்' என்றும், தலைமகன் சொல்லினான். நடுங்கஞர்-நடுங்குதற்குக் காரணமாகிய அஞர்; இது நான்காம் வேற்றுமையுருபும் பொருளுமுடன்தொக்க தொகையாம். தாம் இயல்பாகக்கோணுதலுடைமையால் அவற்றை மிகுதிக்கண் மேற்சென்றிடிக்க மாட்டாவாயின வென்பதுதோன்ற நின்றமையால், மன்னென்னுமிடைச்சொல் ஒழியிசைப்பொருளில் வந்தது.

கொடும்புருவம்-வளைந்தபுருவம்.

(க - து) இவள் கண்கள் புருவங்களால் விலக்கப்பட்டால், எனக்குத் துன்பஞ் செய்யமாட்டாவென்று தலைமகன் கூறினான்.

6. Her eyes will cause no trembling sorrow if their glances are properly veiled by her cruel arched eyebrows.

எ கடாஅக் களிற்றின்மேற் கட்படாம் மாதர்
படாஅ முலைமேற் றுகில்.

[அவண் முலைகளினுய வருத்தங் கூறியது].

பரி:—(இ - ள்.) இம்மாதர் படாமுலைகளின் மேலிட்ட துகில், * அவைகொல்லாமற் காத்தலின், கொல்வதாய மதக்களிற்றின்மேலிட்ட முகபடாத்தினையொக்கும், (எ - று).

† கண்ணை மறைத்தல் பற்றிக் 'கட்படாம்' என்றான். துகிலான் மறைத்தல் நாணுடை மகளிர்க் கியல்பாகலின், அத்துகிலோடு அவற்றின் ‡ வெம்மையும் பெருமையுங் கண்டு இத்துணையாற்றலுடையன இனியென்றுஞ் சாய்விலவெனக் கருதிப் 'படாஅமுலை' என்றான். ¶ உவமை சிறிதுமறையாவழி உவை கொல்லுமென்பது தோன்றநின்றது.

* அவைகொல்லாமல் - அம்முலைகள் (என்னைக்) கொல்லாமல்.

† யானைமுகத்திடும் படாம் (ஆடை) அதனது கண்ணைமறைத்தல் பற்றி, கட்படாம் என்று கூறப்பட்டது.

‡ வெம்மையும் - உக்கிரத்தையும்.

¶ உவமை - கடாஅக் களிற்றின்மேற் கட்படாம் என்னும் உவமானம்.

தெளி:—(அவளது முலைகளினலாகிய வருத்தத்தைச் சொல்லியது.) (இ-ள்.) மாதர்-இம்மாதர், படாஅ முலைமேற்றுகில் - சாய்தலில்லாத முலைகளின்மேலிட்ட ஆடையானது, (அவை கொல்லாமற் காத்தலால்), கடாஅக் களிற்றின்மேல் - (கொல்வதாகிய) மதயானையின்மேல், (இட்ட), கட்படாம்-முகபடாத்தினை, (ஒக்கும்), (எ - று).

*கண்ணைமறைத்தல்பற்றிக் 'கட்படாம்' என்றான். (தமது முலைகளை) ஆடையால் மறைத்தல் நாணமுடைய மகளிர்க்கு இயல்பாகலால், தலைமகன் அவ்வாடையோடு அம்முலைகளின் வெம்மையையும் பெருமையுங்கண்டு இவ்வளவு வலிமையுடையன இனி என்னாகுமோ சாயாவென்று நினைத்தப் 'படாஅமுலை' என்றான். உவமானம் ஆடையால் சிறிது மறையாதவிடத்து இம்முலைகள் கொல்லுமென்பது தோன்ற நின்றது*

(க - து.) இவள் தனது ஸ்தனங்களை ஆடையால மறைக்காதவிடத்து, அவை என்னை நிச்சயமாகக் கொல்லுமென்று தலைமகன் கூறினன் என்பது.

7. The cloth which covers the unbending breast of this maiden is like the veil which covers the eyes of a raging elephant.



அ * ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு.

(நுதலினைய வருத்தங் கூறியது.)

பரி:—(இ-ள்.) போர்க்களத்து வந்து நேராத பகைவரும் நேர்ந்தார் வாய்க்கேட்டஞ்சுதற்கேதுவாய என்வலி இம்மாதர் தொள்ளிய நுதலொன்றற்குமே அழிந்துவிட்டது, (எ-று).

*மாதரென்பது அதிகாரத்தான் வந்தது. 'ஞாட்பினுள்' என்றதனாற் பகைவராதல் பெற்றாம். † பீடென்ற பொதுமையான் மனவலியுங் காயவலியுங் கொள்க. ‡ ஓ வென்னும் வியப்பின்கட் குறிப்பு ¶ அவ்வலிகளது*

* "கோம்பிக் கொதுங்கிமே யாமஞ்ஞை குஞ்சரங் கோளிழைக்கும், பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கப் பணைமுலைக்கே, தேம்பற் றுடியிடை மான்மடனோக்கிதில் லைச்சிவன்றா, ளாம்பொற் றடமலர் சூடுமென் னாற்ற லகற்றியதே" என்று திருக்கோவையார் கூறுவ திங்குணர்தற்பாலதாம்.

† இன்னபீடென்று சிறப்புவகையாற் கூறாது, பொதுவகையால்பீடு என்றமையின், இருவகைப்பீடுங் கொள்ளவேண்டு மென்பதாம். அவை மனவலி, காயவலி என்பனவாம்.

‡ ஓ என்பது வியப்புப் பொருளில்வந்த குறிப்பிடைச்சொல்.

¶ அவ்வலிகளது - மனவலி காயவலிகளது.

பெருமையும் நுதலது சிறுமையுந் தோன்ற நின்றது. * கழிந்ததற் கிரங் கலிற் † றற்புகழ்த லன்றாயிற்று.

தெளி:—(நெற்றியாலாகிய வருத்தத்தைச் சொல்லியது.) (இ - ள்.) ஞாட்பினுள் - போர்க்களத்தில், நண்ணாரும் - (வந்து) எதிர்க்காதபகைவரும், உட்கும்-(எதிர்த்துநின்றவர் வாய்ச்சொற்கேட்டு) அஞ்சுதற்குக்காரணமாகிய, என்பீடு-என்வலி, ஒண்ணுதற்கோஒ - (இம்மாதருடைய) ஒளிபொருந்திய நெற்றி யொன்றற்குமே, உடைந்தது - அழிந்து விட்டது, (எ - று).

மாதரென்பது தகையணங் குறுத்த லென்னும் அதிகாரத்தால் வந்தது. 'ஞாட்பினுள்' என்றதனால் 'நண்ணாரும்' என்பது பகைவராதல் பெற்றாம். பீடென்ற பொதுமையால் மனவலியும் காயவலியும் கொள்க. ஒ வென்னும் வியப்பினிடைச்சொற் குறிப்பு அவ்வலிகளின் பெருமையும் நெற்றியின் சிறுமையும் தோன்ற நின்றது. தலைமகன் கழிந்ததற் கிரங்கலால் இது தற்புகழ்த லன்றாயிற்று.

(க - து.) தலைமகன் என்னுடைய சிறந்த வலிமை இவளது நெற்றியொன்றற்குமே அழிந்துவிட்டதென்று கூறினன்.

8. Even my might which awed the most fearless foes in the battlefield is destroyed by the lustre of her beaming brow.

கூ. பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

(அணிகலத்தாலாய வருத்தங் கூறியது.)

பரி:—(இ-ள்.) புறத்து மான்பிணையோத்த மடநோக்கினையும் அகத்து நாணினையுமுடையாளாய விவட்கு ஒற்றுமையுடைய இவ்வணிகளே யமைந்திருக்க வேற்றுமையுடைய வணிகளைப் படைத்தணிதல் என்னபயனுடைத்து, (எ-று).

மடநோக்கு - வெருவுதலுடையநோக்கு. இவட்குப் பாரமாதலும் எனக் கணங்காதலுங் கருதாமையின், அணிந்தார் அறிவில ரென்பதாம்.

தெளி:—(அணிகலத்தினாலாகிய வருத்தத்தைச் சொல்லியது.)(இ-ள்.) பிணையேர் - (புறத்தில்) பெண்மானையொத்த, மடநோக்கும் - மடநோக்கினையும், நாணும் - (அகத்தில்) நாணினையும், உடையாட்கு - உடையவளாய இவளுக்கு, (ஒற்றுமையுடைய நோக்கமும் நாணமும் ஆகிய இவ்வணிகளே பொருந்தி யிருக்க), ஏதிலதந்து - வேற்றுமையுடைய அணிகளைச்செய்து, அணி - அணிதல், எவன் - என்னபயனுடையது, (எ - று).

* கழிந்ததற் கிரங்கலின் - கழிந்தொழிந்த தனது வலியை யெண்ணி அதற்கு வருந்துதலால்.

† தற்புகழ்தல் - ஒருவன் தன்னைத் தானே யுயர்த்திப் பேசுதல்.

ஒ - அசை. மடநோக்கு - அஞ்சுதலுடைய பார்வை. இவ்வேற்றுமையுடைய அணிகள் இவளுக்குப் பாரமாதலையும் எனக்கு வருத்தமாதலையும் எண்ணாமையால், அவ்வணிகளை அணிந்தார் அறிவிலா ரென்பதாம்.

(க - து.) தலைமகன் இவளுக்கு நோக்கும் நாணும் ஆபரணங்களாயிருக்க, இவற்றையறியாது, வேறு ஆபரணங்களை அணிந்தவர் அறிவிலாரவரென்று கூறினன் என்பது

9. What added beauty can be lent by alien jewels to her who is clothed with modesty and tender looks of a hind.

---

க0. உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

(தலைமகள் குறிப்பறிதலுற்றான் சொல்லியது.)

பரி:—(இ-ள்.) அடப்படும் * நறு தன்னையுண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்வதல்லது காமம்போலக் கண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்த லுடைத்தன்று, (எ-று).

† அடுநறா - வெளிப்படை. ‡ காமமென்றது கண்டு அது நுகர்தற்கிடனாகிய மாதை. ¶ கண்டார்கணென்னுமேழாவது இறுதிக்கட்டொக்கது. மகிழ்செய்தற்கட் காமம் நறவினுஞ் சிறந்ததே யெனினும் இவள் குறிப்பாராய்ந்தறியாமையின் ⁝ யானது பெற்றிலேனெனக் குறிப்பெச்சம் வருவித்துரைக்க; ‖ "அரிமயிர்த்திரண்முன்கை" என்னும் புறப்பாட்டிற் குறிப்புப்போல.

தெளி:—(தலைமகளது குறிப்பறியலுற்ற தலைமகன் சொல்லியது.) (இ - ள்.) அடுநறா - காய்ச்சப்பட்ட மதுவானது. உண்டார்கணல்லது - (தன்னை) உண்டவரிடத்து மகிழ்ச்சியைச் செய்வதல்லாமல், காமம்போல் - காம

* நறா - கள். † அடுநறா-காய்ச்சியகள்; அம்சாவது சாரயம். வெளிப்படை - வெளிப்படைச் சொல்

‡ காமம் என்னும் தானியின் பெயர் அது நுகர்தற்குத் தானமாகிய மகளிரை யுணர்த்துதலால், தானியாகு பெயராம். தானி - தானத்தையுடையது ; தானம் - இடம்.

¶ கண்டார் என்பதன் இறுதியில் கண் என்னும் ஏழனுருபு தொக்கு நின்றது.

⁝ யானது - யான் அம்மகிழ்ச்சியை.

‖ புறநானூறு. 11 இதன்பொருள். அழகிய மயிரையுடைய திரண்ட முன்கை என்பது. 'அரிமயிர்த்திரண்முன்கை' என்னும் பாட்டின் விசேடவுரையில் 'பாடினி இழைபெற்றாள்; பாணனபூப்பெற்றான்; யான் அது பெறுகின்றிலேன்'எனக் குறிப்பெச்சம்வருவித்துரைக்கப் பட்டிருக்கின்றது.

த்தைப்போல, கண்டார் - கண்டவரிடத்து, மகிழ்செய்தல் - மகிழ்ச்சியைச் செய்தல், இன்று - உடையதன்று, (எ - று.)

காமமென்றது இங்கு அக்காமத்தை யனுபவித்தற்கு இடமாகிய மகளிரை. கண்டாரிடத்து என்னும் ஏழனுருபு இறுதியில் தொக்குநின்றது. மகிழ்ச்சியைச் செய்தலில் காமமானது மதுவினும் சிறந்ததே யெனினும் இவள் குறிப்பை ஆராய்ந்தறியாமையால் யான் அது பெற்றிலேனெனக் குறிப்பெச்சம் வருவித்துரைத்துக்கொள்க.

(க - து.) தலைமகளது குறிப்பறிந்த தலைமகன் மகிழ்ச்சிசெய்வதில் கள்ளினுங் காமஞ் சிறந்த தென்றான் என்பது.

10. Unlike boiled honey which gives delight only when it is drunk, love hath great felicity for those that only look at.



## 2 - வது அதிகாரம்.

## * குறிப்பறிதல்—

## Recognition of the signs (of mutual love).

பரி:—அஃதாவது தலைமகன் தலைமகள் † குறிப்பினை யறிதலும், தோழி குறிப்பினை யறிதலும், அவட்டான் அவ்விருவர் குறிப்பினையு மறிதலுமாம். தகையணங்குறுத்த தலைமகன் றலைமகளைக் கூடுங்கால் ‡ இது வேண்டுமாகலின், தகையணங்குறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது தலைமகன் தலைமகளது குறிப்பினை யறிதலும், பாங்கியின் குறிப்பினை யறிதலும், அப்பாங்கி அவ்விருவர் குறிப்பினையும் அறிதலுமாம். தலைமகளது அழகைக்கண்டு வருந்திய தலைமகன் தலைமகளைக் கூடும்போது இது வேண்டுமாகலால், தகையணங்குறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

க. ¶ இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

(தலைமகன் றலைமகளுளப்பாட்டுக் குறிப்பினை அவணோக்கினு னறிந்தது.)

பரி:—(இ-ள்.) இவளுடைய வுண்கணகத்ததாய நோக்கு இதுபொழுது என்மே லிரண்டு நோக்காயிற்று; அவற்றுள் ஒருநோக்கு என்கணோய்செய்யு நோக்கு, ஏனையது அந்நோய்க்கு மருந்தாய நோக்கு, (எ-று).

---

* குறிப்பறிதல் - பிறர் கருதியதனை அவர் கூறாமலறிதலாம்.

† குறிப்பு - கருத்து. ‡ இது - குறிப்பறிதல்.

¶ "பிணியு மதற்கு மருந்தும் பிறழப் பிறழுமின்னும், பணியும் புனைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே" என்று திருக்கோவையார் கூறின்றது.

உண்கண் - * மையுண்டகண். நோய் செய்புநோக்கு - அவன் மனத்தினுய காமக்குறிப்பினை வெளிப்படுக்கின்றநோக்கு: மருந்தாயநோக்கு -† தன்கணிகழ்கின்ற அற்புநோக்கு நோய்செய்யு நோக்கினைப் பொதுநோக்கென் பாருமுளர்; ‡ அது நோய்செய்யிற் ¶கைக்கிளையாவதல்லது +அகமாகாமையறிக. () இவ்வருத்தந் தீரும் | வாயிலு முண்டாயிற் றென்பதாம்.

தெளி:—(தலைமகன் தலைமகளது உளப்பாட்டுக் குறிப்பினை அவள்நோக்கினுல் அறிந்தது.) (இ - ள்.) இவளுண்கண் - இவளுடைய (மை) உண்டகண்களில், உள்ளது - இருப்பதாகிய நோக்கம், இருநோக்கு - (இப்பொழுது என்மேல்) இரண்டு நோக்கமாயிற்று, (அவற்றுள்), ஒருநோக்கு - ஒரு நோககமானது, நோய்நோக்கு - (என்னிடத்து) நோய்செய்யும் நோக்கமாம், ஒன்று - மற்றொருநோக்கு, அந்நோய் மருந்து - அந்நோய்க்கு மருந்தாய நோக்கமாம், (எ - று).

நோய்செய்யும்நோக்கு-அவளது மனத்தில் உண்டாகியகாமக்குறிப்பினை வெளிப்படுத்துகின்ற நோக்கு; மருந்தாயநோக்கு - தன்னிடத்து உண்டாகின்ற அன்பு நோக்கு. எனக்கு இவ்வருத்தம் தீரும்வழியும் உண்டாயிற் றென்பதாம். நோக்கு - பார்வை. உளப்பாட்டுக் குறிப்பு - மனத்தின்கணுண்டாகிய காமக் குறிப்பு.

(க - து.) தலைமகளது கருத்தினையறிந்த தலைமகன் இவளது நோக்கு எனது வருத்தத்தைத் தீர்ப்பதற்கு வாயிலாயிற் றென்று கூறினன் என்பது

* மையுண்டகண் - மையிட்டகண்.

† தன்கண் - தலைமகனிடத்து ‡ அது - அந்நோக்கு.

¶ கைக்கிளை - ஒருதலைக்காமம்; அஃது ஆண்பெண் என்னுமிருவருள் ஒருவரிடத்துண்டாய புணர்ச்சி பற்றிய விருப்பமாம். "கையென்பது சிறுமை; கிளையென்பது உறவு; ஆகலின் சிறுமையுற வென்பது கைக்கிளையென்று பெயராயிற்று" என்பர் சொக்கப்பநாவலர்.

"மெய்க்கிளை யாழோர்(கந்தருவர்)வேண்டும் புணர்ச்சிமுன், கைக்கிளை நிகழ்தல் கடனென மொழிப" என்பது விதியாதலால், களவொழுக்கத்திற்கு முன்னர்க்கைக்கிளை நிகழவேண்டுமென்க. கைக்கிளையில் காட்சி, ஐயம், துணிவு, குறிப்பறிதல் என்பன நிகழும்; "காட்சி யையந் துணிவுகுறிப் பறிவென, மாட்சி நான்கு வகைத்தே கைக்கிளை" என்பது விதியாதலாலென்க.

+ ஒருவனும் ஒருத்தியும தம்முள் ஒத்த அன்பினராய்க் கூடுங் கூட்டத்தின்கண் பிறந்த இன்பம் அகமெனப்படுமென்க. 'அகமெனப் படுவது வகையொரு மூனறனுள், இன்ப மென்னு மியல்பிற் ருகி, யகத்துநிக ழொழுக்க மாதல் வேண்டும்" என்பது இலக்கண விளக்கம்.

() இவ்வருத்தம் - (அவளழகா லுண்டாகிய)இக்காமத் துன்பம். | வாயில் - இருவகைநோக்கு.

1. The glances in the dyed eyes of this maiden have a double witchery; one causes pain and the other is the cure thereof.



உ. கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது

[இ து வு ம து.]

பரி:—(இ-ள்.) இவள்கண்கள் யான்காணாமல் என்மேனோக்கு கின்ற அருகிய நோக்கம் † மெய்யுறு புணர்ச்சியின் ஒத்த பாதியள வன்று, ‡ அதனினுமிகும், (எ-று).

தானோக்கியவழி நாணியிறைஞ்சியும் நோக்காவழி உற்று நோக்கியும் வருதலாற் 'களவுகொள்ளும்' என்றும், ¶அஃதுளதாங் காலஞ் சிறிதாகலிற் 'சிறு நோக்கம்' என்றும், அஃது உளப்பாடின்வழி நிகழ்வதாகலின் இனிப் புணர்தல் ஒருதலை யென்பான் 'செம்பாகமன்று பெரிது'என்றுங்கூறினான்.

தெளி:—(இதுவுமது) (இ - ள்) கண் - (இவளது) கண்கள், களவு கொள்ளுஞ் சிறு நோக்கம் - யான் காணாமல் என்மேல் நோக்குகின்ற அரு கியநோக்கம், காமத்தில் - மெய்யுறுபுணர்ச்சியில், செம்பாகமன்று - ஒத்த பாதியளவன்று, பெரிது - (அதனிலும்) மிகும், (எ - று).

தான் நோக்கியபோது நாணித் தலை குனிந்தும் நோக்காவிடத்து உற்று நோக்கியும் வருதலால் 'களவு கொள்ளும்' என்றும், அஃது உண்டாகுங் காலம் சிறிதாகலால் 'சிறுநோக்கம்' என்றும், அச்சிறுநோக்கம் உளப்பாடு உள்ளவிடத்து உண்டாவதாகலால் இனி இவளைக் கூடுதல்நிச்சயமென்பான் 'செம்பாக மன்று பெரிது' என்றும் சொல்லினான். அருகிய நோக்கம் - சுருங்கிய பார்வை. உளப்பாடு - சம்மதம்

(க - து.) தலைமகன் இவளது அருகிய நோக்கம் எனக்கு அளவுகடந்த மகிழ்ச்சியைச் செய்கின்றதென்று கூறினானென்பது.

2 The furtive glance that gleams bright one instant from her eyes is more than half the pleasure of sexual embrace.



† மெய்யுறு புணர்ச்சி - மெய் (உடம்பு) தொட்டுப் புணரும் புணர்ச்சி உள்ள புணர்ச்சியென் றொன்றிருத்தலால், அதனினும் வேற்றுமைதோ ன்ற (புணர்ச்சி யென்று வாளா கூறாது மெய்யுறு என்னும் விசேடணந் தந்து) மெய்யுறு புணர்ச்சி என்று கூறப்பட்டது. "உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு புணர்ச்சியுங், கள்ளப் புணர்ச்சியுட் காதலர்க் குரிய" என்பது அகப்பொருள் விளக்கம்.

‡ அதனினும் - மெய்யுறு புணர்ச்சியினும்.

¶ அஃது - கண் களவு கொள்ளுதல்.

௩. நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.

[நோக்கினானும் நாணினானு மறிந்தது.]

பரி:—(இ-ள்.) யானோக்காவளவிற் றனென்னை யன்போடு நோக்கினாள், நோக்கி * ஒன்றனை யுட்கொண்டு நாணி இறைஞ்சினாள், அக் குறிப்பு † இருவேமிடையுந் தோன்றிய அன்புப் பயிர்வளர ‡ அதன்கணவள் வார்த்த நீராயிற்று, (எ - று).

அஃதென்னுஞ் சுட்டுப்பெயர் ¶ அச்செய்கைக் கேதுவாய குறிப்பின் மேனின்றது. + யாப்பினு ளையதனை யாப்பென்றார். ()ஏகதேசவுருவகம்.

தெளி:—(தலைமகன் தலைமகளது குறிப்பை அவளதுநோக்கினாலும் நாணினாலும் அறிந்தது.) (இ - ள்.) நோக்கினாள்-(யான் நோக்காதவளவில் தான் என்னை அன்போடு)பார்த்தாள், நோக்கி-பார்த்து, இறைஞ்சினாள்-(ஒன்றனை உட்கொண்டு நாணித்) தலை குனிந்தாள், அஃது-அக்குறிப்பு, யாப்பினுள் - (இருவே மிடத்தும் தோன்றிய) அன்பாகிய பயிருள்,(அது வளரும் படி), அவள் அட்டியநீர் - அவள் வார்த்த நீராயிற்று, (எ - று).

யாப்பு - கட்டு. அஃதென்னுஞ் சுட்டுப்பெயர் அச்செய்கைக்குக் காரணமாகிய குறிப்பின்மேல் நின்றது யாப்பினுலாகிய அன்பையாப்பென்றார். இஃது ஏகதேச வுருவகவணி.

(க - து.) இவளது குறிப்பு நோக்கு எம்மிருவரிடத்துந் தோன்றிய காமப்பயிரைவளர்ப்பதற்கு நீராயிற்றென்று கூறினான்.

3. She looked at me and looking drooped her head, and that sign waters as it were the corn of our love.

௪. யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்.

[நாணினானும் மகிழ்ச்சியினானு மறிந்தது.]

* ஒன்றனை யென்றது புணர்ச்சியை.

† இருவேமிடையும் - எம்மிருவரிடத்தும்.

‡ அதன்கண் - அன்பாகிய பயிரில்.

¶ அச்செய்கைக்கு - நோக்கி யிறைஞ்சுதலாகிய அச்செய்கைக்கு.

+ யாப்பினுலாகிய அன்பை யாப் பென்றமையின், இது கருவியாகு பெயராம். யாப்பு-ஒருவர்க்கு மற்றொருவரிடத்துண்டாய சம்பந்தம்.

() நோக்கித் தலைகுனிதலுக்குக் காரணமாகிய குறிப்பினை நீராக வுருவகஞ்செய்தவர் அதற்கிணைய, யாப்பினை (யாப்பினுலாகிய அன்பைப்)பயிராக வுருவகஞ் செய்யாமையின், இஃது ஏகதேசவுருவகமாயிற்றென்க.

பரி:—(இ - ள்.) யான் றன்னை நோக்குங்காற் றனெதிர் நோக்காது இறைஞ்சி நிலத்தை நோக்காநிற்கும்; அஃதறிந்தியா னோக்காக்காற் றனென்னை நோக்கித் தன்னுள்ளே மகிழாநிற்கும், (எ - று).

மெல்ல—வெளிப்படாமல். மகிழ்ச்சியாற் புணர்தற்குறிப்பினிதுவிளங்கும். மெல்ல நகு மென்பதற்கு †முறுவலிக்குமென் றுரைப்பாருமுளர்.

தெளி:—(தலைமகன் தலைமகளது குறிப்பை அவளதுநாணினாலும்மகிழ்ச்சியினாலும் அறிந்தது.)(இ-ள்.) யானோக்குங்காலை-(தன்னை)யான் நோக்கும்போது, நிலனோக்கும் - (தான் எதிர்நோக்காமல் நாணித் தலைகுனிந்து)நிலத்தை நோக்கி நிற்கின்றாள், நோக்காக்கால் - (அதனையறிந்து யான்)நோக்காதபோது, தானோக்கி - தான் (என்னை) நோக்கி, மெல்லநகும் - (தன்னுள்ளே) வெளிப்படாது மகிழா நிற்பள், (எ-று).

மெல்ல நகுதல் - வெளிப்படாமல் மகிழ்தல். அம்மகிழ்ச்சியால் (தலைமகளது) புணர்தற் குறிப்பு இனிது விளங்கும்.

(க - து.) இவள் யான் பார்க்கும்போது நிலத்தைப்பார்க்கின்றாள்; பாராதபோது என்னைப் பார்த்து மெல்ல மகிழ்கின்றாளென்று கூறினான் தலைமகன் என்பது.

4. When I look at her, she looks down ; when I look away she looks on me with timid smile.



ரு. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

[இதுவுமது]

பரி:—(இ - ள்.) நேரே குறிக்கொண்டு நோக்காத துணையல்லது ஒரு கண்ணைச் சிறங்கணித்தாள்போல என்னை நோக்கிப் பின் றன்னுள்ளே மகிழா நிற்கும், (எ - று).

சிறக்கணித்தா ளென்பது செய்யுள்விகாரம். சிறங்கணித்தல் - சுருங்குதல். ‡ அதுதானும் வெளிப்பட நிகழாமையிற் 'போல' என்றான். நோக்கி யென்பது சொல்லெச்சம். இனி இவளை யெய்துதல் ஒருதலை யென்பது குறிப்பெச்சம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) குறிக்கொண்டு - (நேரே) குறிக்கொண்டு நோக்காமையல்லால் - நோக்காத அளவல்லது, ஒருகண் - ஒரு கண்ணை, சிறக்கணித்தாள்போல - சுருங்கினவள்போல, நகும் - (என்னை நோக்கிப் பின் தன்னுள்ளே) மகிழாநின்றாள், (எ - று).

---

† முறுவலிக்கும்-புன்னகைசெய்வாள்.
‡ அதுதானும் - கண் சுருக்குதலும்.

சிறங்கணித்தாளென்பது செய்யுள் விகாரத்தினால் சிறக்கணித்தாளென்றாயிற்று; இது வலித்தல் விகாரமாம். சிறங்கணித்தல் - சுருங்குதல். அது வும் வெளிப்படத் தோன்றாமையால் 'போல' என்றான். நோக்கி என்பது சொல்லெச்சம். இனி இவளை அடைவது நிச்சயமென்பது குறிப்பெச்சம்.

(க - து.) இவள் நேரே பெண்ணை நோக்காது கீழ் நோக்கால் நோக்கிப் பின் தன்னுள்ளே மகிழ்கின்றாளென்று கூறினான்.

5. She seems not to see me direct, but looks with a side-long glance and smiles.



சுஎ உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
லொல்லை யுணரப் படும்.

[* தோழி சேட்படுத்தவழி அவள் குறிப்பறிந்த தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.]

பரி:—(இ - ள்.) புறத்து நொதுமலர்போலக் கடுஞ்சொற் சொன்னாராயினும், அகத்துச் செறுதலிலாதார்சொற் பிற்பயத்தல் குறையுற்றாராற் கடிதினறியப்படும், (எ - று).

கடுஞ்சொலென்பது ஈண்டு இவ்விடங் காவன் மிகுதியுடைத்து;† வாற்பாலிரல்லீரென்றன் ‡ முதலாயின. 'செறாஅர்' எனவே, அருளுடைமை பெறப்பட்டது. தன்குறை முடிக்கக் கருதியே சேட்படுக்கின்றமை குறிப்பானறி

* தோழிசேட்படுத்தலென்பது பாங்கியிற் கூட்டம் பன்னிரண்டனுள் ஒன்று. திருக்கோவையாருரையில் "சேட்படை யென்பது தலைமகளைக் குறைநயப்பித்துத் தன்னினைய கூட்டங் கூட்டலுறுந்தோழி தலைமகளது பெருமையும் தனது முயற்சிபசருமையும் தோன்றுதல் காரணமாகவும், இத்தன்மையருமையுடை யாள் இனி நமக்கெய்துதற் கருமையுடையளென இதுவே புணர்ச்சியாக நீட்டியாது விரையவரைந்துகோடல் (கலியாணஞ் செய்துகொள்ளுதல்) காரணமாகவும், தலைமகனுக்கியையமறுத்துக் கூறாநிற்றல்" என்று கூறப்பட்டிருக்கிறது.

†"விலைரகமழ் சாரல் விளைபுனங் காப்பார்,வரையிடை வாரனீ யைய— வுரைகடியர், வில்லினர் வேலர் விரைசெலு மம்பினர், கல்லிடை வாழ்நரெமர்" என்று திணைமொழிகூறுவ திங்குணர்தற்பாலதாம்.

‡ முதலாயின என்றமையின், பாங்கி குலமுறைகிளத்தல் முதலாயின வெல்லாங் கொள்க. (பாங்கியிற் கூட்டத்தில் தலைமகன் சொல்லுவன வெல்லாம் இரந்து பின்னிற்றற்கும் பாங்கிசொல்லுவனவெல்லாம் சேட்படுத்தற்கும் உரியனவாமென்றுணர்க.)

ந்து, * உலகியன்மே லிட்டுக் கூறியவாறு. இது வருகின்ற பாட்டிற்கு மொக்கும்.

தெளி:—(பாங்கிசேட்படுத்தியவிடத்து அவளது குறிப்பை அறிந்த தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.) (இ - ள்.) உறாஅதவர்போல்- (புறத்து) அயலார்போல, சொலினும் - (கடுஞ்சொல்) சொன்னாராலும், செறாஅர்சொல் - (அகத்து) பகையாதவர்சொல், (பின் பயனைத்தருதல்), ஒல்லைபுணரப்படும்-(குறையுற்றவரால்) கடிதில் அறியப்படும், (எ-று).

கடுஞ்சொலென்பது இவ்விடம் காவல்மிகுதியை யுடையது; வாராதீரென்று சொல்லுதல் முதலாயின. 'செறாஅர்' எனவே, (தோழியின்) அருளுடைமை பெறப்பட்டது. தலைமகன் பாங்கி தன்குறையை முடிக்கானைத் தே சேட்படுத்தலைக் குறிப்பால் அறிந்து,உலகியலின்மேல்வைத்துச் சொல்லியபடியாம், இது வருகின்றபாட்டிற்கும் ஒக்கும். புறம்-வெளி; அகம்-உள்.

பாங்கிசேட் படுத்தலாவது தலைமகளது தோழி தலைமகனுக் கியைய மறுத்துக் கூறுதலாம்.

(க - து.) பாங்கிசேட்படுத்திய விடத்து அவள் குறிப்பினை யறிந்த தலைமகன் அன்புடையார் கடுஞ்சொல்கூறினும் அச்சொல் நன்மையை யுண்டாக்குமென்று கூறினன் என்பது.

6. Though they may speak harshly as if they were strangers, the words of the friendly are soon known.



எ. செறாஅச் † சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு.
முறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

[இ து வு ம து].

பரி:—(இ - ள். பின்னினிதாய் முன்னின்றதாய சொல்லும் அகத்துச் செறநிந்தே புறத்துச் செற்றார்போன்ற வெகுளிநோக்கும் நொதுமலர் போன்று நடபாயிரார்க்கு ஒரு குறிப்புப்பற்றி வருவன. ()

குறிப்பு:— ‡ ஆகுபெயர். ¶ இவைஉள்ளே யொருபயன் குறித்துச் செய்கின்றன; இயல்பல்லவாகலான், இவற்றிற் கஞ்சவேண்டா வென்பதாம்.

* தலைமகன் 'உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ,லொல்லை புணரப் படும்' என்றுலகியல்மேல்வைத்துக் கூறியவாறும்.

† சிறுசொல் - கடுஞ்சொல்.

‡ குறிப்புப்பற்றி வருவனவற்றைக் குறிப்பு என்றமையின், இது கருவியாகுபெயராம். குறிப்பு - காரணம் ; வருவன - காரியம்.

¶ இவை- செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்.

தெளி:—(இதுவுமது.) (இ - ள்.) செறாஅச் சிறுசொல்லும் - பின் இனி தாவதாய் முன்னே இன்னாததாகியசொல்லும், செற்றார்போனோக்கும்- (அகத்துப் பகையாதிருந்தே புறத்து) பகைத்தவர்போன்ற கோபப்பார்வை யும், உறாஅர்போன்றுற்றார்-அயலார்போலிருந்து நட்பாயினவர்க்கு, குறிப்பு- ஒருகுறிப்புப் பற்றி வருவனவாம், (எ - று).

குறிப்பு - கருவியாகுபெயர். இவை உள்ளே ஒருபயன் குறித்துச் செய்கின்றன; இயல்பல்லவாகலால், இவற்றிற்கு அஞ்சவேண்டா மென் பதாம். இன்னாதது-துன்பஞ்செய்வது.

(க - து.) அன்புடையாரிடத்து ஒரு குறிப்புப்பற்றிக் கடுஞ் சொல்லும் வெகுளிநோக்கு முண்டாமென்று கூறினன் என்பது.

7. Slighting words that are harsh and looks that are hateful are but the feigned expressions of lovers who wish to act like strangers.



அ. அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும்.

[தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக் கண்டு தலைமகன் கூறியது.]

பரி:—(இ - ள்.) என்னைப் பற்றுக்கோடு சோர்ந்தாற்றது யானிரந்து நோக்கியவழி * அஃதறிந்து நெகிழ்ந்து உள்ளே மெல்ல நகாநின்றாள், அதனால் நுடங்கிய வியல்பினையுடையாட்கு அந்நகையின்கண்ணே தோன்றுகின்றதோர் நன்மைக் குறிப்புண்டு, (எ - று).

ஏர் - † ஆகுபெயர் ‡ அக்குறிப்பு இனிப்பழுதாகா தென்பதாம்.

தெளி:—(தன்னைநோக்கி மகிழ்ச்சி யடைந்த தலைமகளைக்கண்டு தலை மகன்சொல்லியது.) (இ - ள்.) யானோக்க - (என்னை நீக்குகின்ற சொல்லு க்குப் பொறுமல்) யான் (இரந்து) நோக்கியவிடத்து,பசையினள் - (அதனை யறிந்து) இரங்கினவளாகி, பையநகும் - (உள்ளே) மெல்ல நகா நின்றாள், (அதனால்), அசையியற்கு - அசைந்த வியல்பினை யுடையவளுக்கு, ஆண்டு- அந்நகையினிடத்தே, ஓரேஎர் - (தோன்றுகின்றதாகிய) ஒரு நன்மைக் குறிப்பு, உண்டு - உளது, (எ - று).

ஏர் - காரியவாகுபெயர். அக்குறிப்பு இனிப் பழுதாகா தென்பதாம்.

* அஃதறிந்து - யானிரந்து நோக்கியதை யறிந்து.

† ஏர் (நன்மை) என்னும் காரியத்தின் பெயர் அதற்குக் காரணமாகிய குறிப்பினை யுணர்த்துதலால், காரியவாகு பெயராம்.

‡ அக்குறிப்பு-அந்நகையினிடத்தே தோன்றுகின்ற நன்மைக்குறிப்பு.

(க - து.) பாங்கிசேட்படுத்துவதன்பொருட்டு வருந்துகின்ற வென்னைக் கண்டு இவள் நகைத்தலால், இந்நகையினிடத்து ஒரு நன்மைக்குறிப் புண்டென்று கூறினன் தலைமகன் என்பது.

8. When I look, the maid pitying me looks in return with tender smiles; and in that smile there is a sign of her grace.



கூ ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

[† தோழி மதியுடம்படுவோ டன்னுள்ளே சொல்லியது.]

பரி:—(இ-ள்.) முன்னறியாதார்போல ஒருவரை யொருவர் பொது நோக்கத்தா னோக்குதல் இக்காதலை யுடையார்கண்ணே யுளவாகா நின்றன, (எ - று).

பொதுநோக்கு-யாவர்மாட்டும் ஒரு தன்மைத்தாய நோக்கு. நோக்குதற் றொழில் ஒன்றே யாயினும் இருவர்கண்ணு நிகழ்தலானும், ஒருவர்கட்டா னுங் குறிப்பு வேறுபாட்டாற் பலவா மாகலானும் 'உள' எனப் பன்மையாற் கூறப்பட்டது. ‡ இருவரும் மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சிபோல உள்ளத்துள்ளே மகிழ்தலின் அதுபற்றிக் 'காதலார்' என்றும், ¶ அது புறத்து வெளிப்படாமையின் 'ஏதிலார்போல' என்றுங் கூறினர்.

தெளி:—(பாங்கி மதியுடன்படக் கருதித்தன்னுள்ளே சொல்லியது.) (இ-ள்.) ஏதிலார்போல - முன்னறியாதவர்போல, பொதுநோக்கு நோக்குதல் - (ஒருவரை ஒருவர்) பொது நோக்கத்தால் நோக்குதல், காதலார் கண்ணே - இக்காதலையுடையவரிடத்தே, உள - உண்டாகா நின்றன.

பொதுநோக்கு - யாவரிடத்தும் ஒரு தன்மையதாகிய நோக்கு.நோக்குதல் தொழில் ஒன்றேயாயினும் இருவரிடத்தும் உண்டாதலாலும், ஒருவரிடத்திலேயும் குறிப்புவேறு பாட்டால் பலவாமாகலாலும் (உளது என்று ஒருமை

† தோழி மதியுடம்படுவோ ளாவது பாங்கி தலைமகளது வேறுபாட்டைக் கண்டு புணர்ச்சி யுண்மையை யாராய்ந்தறிந்து தன்மதியை (புத்தியை) யுடன்படுத்துதலாம்.

‡ இருவரும் - தலைமகனும் தலைமகளும். "ஏனல் காவ லிவளு மல்லன், மான்வழி வருகுவ னிவனு மல்லன், நரந்தங் கண்ணி யிவனோ டிவ ளிடைக், கரந்த வுள்ளமொடு கருதியது பிறிதே, நம்மு ணினர் போலத் தம்முள், மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல, வுள்ளத் துள்ளே மகிழ்ப, சொல்லு மாபே கண்ணி னானே." (தொல்-பொரு - கள. 23-உரை) என்னுஞ் செய்யுள் இக்குணர்தற்பாலதாம்.

¶ அது - அம்மகிழ்ச்சி.

யாற் கூறுது) 'உள' என்றுபன்மையாற் சொல்லப்பட்டது. இருவரும் மதுமறைந்துண்டோர் மகிழ்ச்சிபோல உள்ளத்துள்ளே மகிழ்தலால் அது பற்றிக் 'காதலார்' என்றும், அது புறத்து வெளிப்படாமையால் 'ஏதிலார் போல' என்றும்சொல்லினுள். மது-கள்.

(க - து.) பாங்கி இக்காதலை யுடையவரிடத்து முன்னறி யாதவர்போல ஒருவரை யொருவர் பொதுநோக்கத்தால் நோக்குதல் உளவாகா நின்றனவென்று கூறினள் என்பது.

9. The indifferent look that would disguise love is only possible with lovers.



க0. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க ளென்ன பயனு மில.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காமத்திற்குரிய விருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர்கண்கள் நோக்கா லொக்குமாயின், அவர் வாய்மைதோன்ற சொல்லுகின்ற வாய்ச்சொற்கள் ஒருபயனு முடையவல்ல, (எ - று).

நோக்காலொத்தல் - காதனெக்கினவாதல். வாய்ச்சொற்கள் - மனத் தின்கணின்றி வாயளவிற் றோன்றுகின்ற சொற்கள். * இருவர் சொல்லுங் கேட்டு உலகியன்மேல் வைத்துக் கூறியவாறு. இருவர்சொல்லுமாவன;— † அவள் புனங்காவன்மேலும் அவன் வேட்டத்தின்மேலுஞ் சொல்லுவன. பயனில் சொற்களாகலின், இவை கொள்ளப்படா வென்பதாம். இவை ‡ புணர்த நிமித்தம்.

தேளி:—[இதுவுமது.] (இ - ள்.) (காமத்திற்குரிய விருவருள்) கண்ணொடு - (ஒருவரது) கண்களோடு, கண்ணிணை - (ஒருவரது) கண்கள், நோக்கொக்கின்-நோக்கால் ஒக்குமாயின், வாய்ச்சொற்கள் - (அவர் உண்மை

* பாங்கி தலைமகன் தலைமகளென்னும் இருவர் சொல்லையுங் கேட்டு 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க, ளென்ன பயனு மில' என்றுலகியலின்மேல் வைத்துக்கூறியவாறும்.

† "மெய்யே யிவற்கில்லை வேட்டையின் மேன்மன மீட்டிவளும், பொய்யே புனத்தினை காப்ப திறைபுலி யூரனையாள், மையேர் குவளைக் கண் வண்டினம் வாழுஞ்செந் தாமரைவாய், எய்யே மெனினுங் குடைந் தின்பத் தேனுண் டெழிறரும்மே" என்று திருக்கோவையார் கூறுவது இங்குணர்தற்பாலதாம்.

‡ "புணர்தல் பிரிதல்" என்னும் (தொல்காப்பியச்) சூத்திரத்தின் விசேடவுரையில் நச்சினார்க்கினியார் "தலைவன்தோழியைக் குறையுறும் பகுதியும்,ஆண்டுத்தோழி கூறுவனவும், குறை நேர்தலும், மறுத்தலு முதலி யன புணர்ச்சி நிமித்தம்" என்று கூறியதிங் குணர்தற் பாலதாம்.

தோன்றச் சொல்லுகின்ற) வாய்ச்சொற்கள், என்னபயனும் - ஒருபயனும், இல - உடையவனல்ல, (எ - று).

நோக்கா லொத்தல்-(இருவர் கண்களும்) காதல்நோக் குடையனவாதல். வாய்ச்சொற்கள் - மனத்தினிடத்தில்லாமல் வாயளவில் தோன்றுகின்ற சொற்கள். இருவர்சொல்லும்கேட்டு உலகியலின்மேல் வைத்துச் சொல்லிய படியாம். இருவர் சொல்லுமாவன:—அவள் புனங்காவலின்மேலும் அவன் வேட்டத்தின் மேலும் சொல்லுவன. பயனில் சொற்களாகையால், இச் சொற்கள் கொள்ளப்படா வென்பதாம். இவை புணர்தல் நிமித்தம். புனம்-தினைப்புனம்; வேட்டம் - வேட்டை; காதல் - புணர்ச்சிபற்றிய விருப்பம்.

(க - து.) பாங்கி காமத்திற்குரிய விருவர் நோக்கம் தம்முள் ஒக்குமாயின், அவர்தம் பேச்சாற் பயனில்லையென்று கூறினள்.

10. All words uttered through lips will prove useless, when there is perfect agreement between the eyes of lovers.



3 - வது அதிகாரம்.

புணர்ச்சி மகிழ்தல்:—*Rejoicing in sexuality.*

பரி:—அஃதாவது அங்ஙனங் குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப்புணர்ச்சியினை மகிழ்ந்து கூறல். * அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

தெளி:—அஃதாவது அப்படி குறிப்பறிந்து தலைமகளைப்புணர்ந்த தலைமகன் அப்புணர்ச்சியினை மகிழ்ந்து சொல்லுதல். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

க. † கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள.

[‡ இயற்கைப் புணர்ச்சி யிறுதிக்கட் சொல்லியது].

---

* குறிப்பறிதற்குப்பின் புணர்ச்சி மகிழ்தல் வைத்த அதிகார முறைமையும்.

† "கண்டுகேட் டுற்றுமோந் துண்டுழலு மைங்கருவி, கண்டவின்பம் தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பம், ஒண்டொடியா டிருமகளு நீயுமே நிலாநிற்பக், கண்டசதிர் கண்டொழிந்தே னடைந்தேனுன் றிருவடியே" என்று திருவாய்மொழி கூறுகின்றது.

‡ "இயற்கைப்புணர்ச்சி யென்பது பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைமகனும் தலைமகளும் அவ்வாறொரு பொழிலிடத் தெதிர்ப்பட்டுத் தெய்வ மிடைநிற்பப் பான்மை (விதி) வழியோடி ஊாவிற் (பகவிற்) இருசோடு

பரி:—(இ - ள்). கண்ணாற் கண்டும் செவியாற் கேட்டும் நாவா லுண்டும் மூக்கான் மோந்தும் மெய்யாற் றீண்டியும் அனுபவிக்கப்படு * மைம்புலனும் இவ்வொள்ளிய தொடியை யுடையாள்கண்ணே யுள வாயின, (எ - று).

† உம்மை - முற்றும்மை. ‡ தேற்றேகாரம் வேறிடத்தின்மை விளக்கி நின்றது. வேறுவேறு காலங்களில் வேறுவேறு பொருள்களா னனுபவிக் கப்படுவன ஒருகாலத்து இவள்கண்ணே யனுபவிக்கப் பட்டனவென்பதாம். வடநூலார் ¶ இடக்கர்ப் பொருளவாகச் சொல்லிய $ புணர்ச்சித் தொழில் களும் ஈண்டடக்கிக் கூறப்பட்டன.

தெளி:—(தலைமகன் இயற்கைப்புணர்ச்சியின் முடிவில்சொல்லியது.) (இ-ள்.) கண்டு - (கண்ணால்) கண்டும், கேட்டு - (செவியால்) கேட்டும், உண்டு - (நாவால்) உண்டும், உயிர்த்து - (மூக்கால்) மோந்தும், உற்று-(மெய் யால்) தீண்டியும், அறியும் - அனுபவிக்கப்படுகிற, ஐம்புலனும் - ஐந்துவிட யங்களும், ஒண்டொடிகண்ணே - இவ்வொளி பொருந்திய வளையலை யுடை யவளிடத்தே, உள - உளவாயின, (எ - று).

ஐம்புலனுமென்னும் உம்மை - முற்றும்மை. ஒண்டொடிகண்ணே என் னும் தேற்றேகாரம்அவை வேறிடத்தில்லாமையை விளக்கி நின்றது. வேறு வேறுகாலங்களில் வேறுவேறு இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் விடயங் கள் ஒருகாலத்தில் இவளிடத்தே என்னால் அனுபவிக்கப்பட்டன வென்ப தாம். வடநூலார் இடக்கர்ப்பொருளினவாகக் கூறிய புணர்ச்சித்தொழில் களும் இவ்விடத்தடக்கிச் சொல்லப்பட்டன.

---

(கொம்புத்) தோன்றினாற்போலத் தம்முளொத்த வன்பினராய் அவ்விருவ ரொத்தார் தம்முட்டாமே கூடுங் கூட்டம்'' என்று திருக்கோவையாருரை யிற் கூறப்பட்டிருக்கின்றது.

* ஐம்புலனும்-சுவை யொளி யூறோசை நாற்றமென்னும் ஐந்துவிட யங்களும். கண்ணால் காண்டல் உருவம், செவியால் கேட்டல் ஓசை, நாவா லுண்டல் சுவை, மூக்கால் மோத்தல் நாற்றம், மெய்யால்தீண்டல் பரிசம் என்றுகொள்க.* நாற்றம் - வாசனை; மெய் - உடம்பு.

† ஐம்புலனும் என்றவும்மை இனைத்தென்றறிபொருளில் வந்த முற் றும்மையாம்.

‡ ஒண்டொடி கண்ணே என்ற தேற்றேகாரம் ஐந்திந்திரியங்களாலும் சுவைமுதலிய ஐந்து விஷயங்களையும் (வேறு வேறு காலங்களி லல்லாமல்) ஒருகாலத்தி லனுபவித்தல் இவளிடத்தன்றி வேறிடத்தில்லை யென்பதை விளக்கிநின்றது

¶ இடக்கர்ப்பொருளவாக - மறைத்த சொல்லின் பொருளினவாக.

$ புணர்ச்சித்தொழில்கள் - பயோதரங்களை வருடல், ஆடையை நெகி ழ்த்தெறிதல், இறுகத்தழுவல், இதழ் சுவைத்தல் முதலியனவாம் இவற் றின் பாகுபாட்டை மதநூலிற் காண்க.

(க - து.) தலைமகன் இயற்கைப்புணர்ச்சியின் முடிவில் இவள் பஞ்சேந்திரியங்களுக்கும் விடயமாயிருக்கின்றாளென்று கூறினன்.

1. The enjoyment of the five senses of sight, hearing, taste, smell and touch at one and the same time are to be found in this beautious maiden.

உ. பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

(* இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது)

பரி:—(இ - ள்.) வாத முதலிய பிணிகட்கு மருந்தாவன அவற்றிற்கு † நிதானமாயினவன்றி ‡ மாறாகிய பிறவினை யுடையனவாம்; அவ்வா றன்றி இவ்வணியிழையினையுடையாள் தன்னினாயபிணிக்கு மருந்துந் தானேயாயினாள், (எ - று).

இயற்கைப் புணர்ச்சியை நினைந்து முன்வருந்தினானாகலின் 'தன்னோய்' என்றும், அவ்வருத்தந் தமியாளை யிடத்தெதிர்ப்பட்டுத் தீர்ந்தானாகலின் 'தானேமருந்து' என்றுங் கூறினான். ¶ இப்பிணியும் எளியவாயவற்றாற் றீரப்பெற்றிலமென்பது பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது.

தெளி:—(தலைமகன் இடந்தலைப்பாட்டில் சொல்லியது.) (இ - ள்,) பிணிக்கு - (வாதமுதலிய) பிணிகளுக்கு, மருந்து - மருந்தாவன, பிற - அப்பிணிகளுக்குக்காரணமாயின வல்லாமல் மாறாயகுணத்தினை யுடையன வாம், (அவ்வாறல்லாமல்), அணியிழை - இவ்வணியிழையினையுடையவள், தன்னோய்க்கு - தன்னாலாகிய பிணிக்கு, மருந்து - மருந்தும், தானே- தானேயாயினாள், (எ - று).

(தலைமகன்) இயற்கைப்புணர்ச்சியை நினைந்து முன் வருந்தினானாக லால் 'தன்னோய்' என்றும், அவ்வருத்தம் தணித்துவந்து நின்ற தலைமகளை முன் கூடிய விடத்துச் சென்று எதிர்ப்பட்டுத் தீர்ந்தானாகலால் 'தானே மருந்து' என்றும் சொல்லினான். இப்பிணியும் எளியவாய பொருள்களால் தீரப்பெற்றில மென்பதுதோன்ற நின்றமையால், மன் என்னும் இடைச் சொல் ஒழியிசைப்பொருளில் வந்தது. இழை - ஆபரணம்.

* இடந்தலைப்பாடாவது இயற்கைப் புணர்ச்சி புணர்ந்ததலைமகன் மற் றைத் தினத்தில் புணர்ந்தஅவ்விடத்தில் வந்து தலைமகளைக் கூடுதல்.

† "நோய்நாடி" என்னுங்குறளின் விசேடவுரையில் "(நோய்வருதற்) காரணம்-உணவு செயலென முற்கூறியவிரண்டும். அவற்றை ஆயுர்வேத முடையார் நிதானமென்ப" என்றிருப்பதுஇத்தணர்தற்பாலதாம்.

‡ மாறாய - விரோதமாய.

¶ இப்பிணியும் - தலைமகளாலாய இந்நோயும்.

(க - து.) தலைமகன் பிணிக்குமருந்து அது வருதற்குக் காரணமாவதாகாமல் அதற்கு மாறுயதாக விருப்பதாம்; ஆனால் இவள் தன்னாலாகிய காமநோய்க்குத் தானே மருந்துமா யிருக்கின்றாளென்று கூறினான் என்பது.

2. The remedy for a disease is surely something antagonistic to it; but the cure for the disease caused by this maiden is herself.



௩. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு.

(* நிரதிசய வின்பத்திற்குரியதீ இச்சிற்றின்பத்திற் கின்னையாதல் தகாதென்ற பாங்கற்குச் சொல்லியது.)

பரி:—(இ - ள்.) ஐம்புலன்களையு நுகர்வார்க்குத் தாம் விரும்பு மகளிர் மெல்லியதோளின்கட்டுயிலுந் துயில்போல வருந்தாம லெய்த லாமோ; † அவற்றைத் துறந்து தவயோகிகளெய்துந் ‡ செங்கண்மா லுலகம், (எ - று).

¶ ஐம்புலன்களையு நுகர்வார்க்கென்னும் பெயர் அவாய்நிலையான் வந்தது. $ இப்பெற்றித்தாய துயிலைவிட்டுத் || தவயோகங்களான் வருந்த வேண்டுதலின் எம்மனோர்க் காகாதென்னுங் கருத்தால் 'இனிதுகொல்' என்

[illegible]

* இன்பம் அதிசயவின்பம் நிரதிசயவின்பமென விருவகைத்தாம். அதிசயவின்பம் – சிற்றின்பமாம்; நிரதிசயவின்பம் - பேரின்பமாம். அதிசயம் - பேதம்; நிரதிசயம் - பேதமற்றது.

† அவற்றை - சப்தமுதலிய அவ்வைம்புலன்களை.

‡ செங்கண்மாலுலகம் - செந்தாமரைமலர்போலுங் கண்களையுடைய விஷ்ணுமூர்த்தியினது வைகுண்டலோகம்.

"தூஉய்மை யென்ப தவாவின்மை" என்னுங் குறளின் விசேடவுரையில் "வீடாவது உயிர் அவிச்சை முதலிய மாசு நீங்குதலாகலின்" என்று வரையப்பட்டிருப்பது ஈண்டுக் கவனித்தற் பாலதாம்.

¶ துயிலின் என்பது ஐம்புலன்களையு நுகர்வார்க்கு என்னும் பெயரை அவாவி (வேண்டி) நின்றது.

$ இப்பெற்றித்தாய-தாம் விரும்பும்மகளிர் மெல்லிய தோளின்கட்டுயிலுவதாகிய.

|| தவயோகங்களான் வருந்தவேண்டுதலின்-(தாமரைக் கண்ணானுலகினையுடைய) தவத்தைச்செய்வதாலும் யோகத்தைச்செய்வதாலும் வருந்த வேண்டுதலால்.

றான். * இந்திரனுலகென்றுரைப்பாருமுளர்; தாமரைக்கண்ணனென்பது † அவனுக்குப் பெயரன்மையின், அஃதுரையன்மை யறிக.

தெளி:—(பேரின்பத்திற்குரியதீ இச்சிற்றின்பத்திற்கு இத்தன்மையனாதல் தகாதென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது.) (இ - ள்.) (ஐம்புலன்களையும் அனுபவிப்பவர்க்கு) தாம் வீழ்வார் - தாம்விரும்பும் மகளிரது, மென்றோள் - மெல்லிய தோள்களிடத்து, துயிலின் - (துயிலும்) துயில் போல, தாமரைக் கண்ணனுலகு -(அவற்றைத் துறந்த தவயோகிகள் அடையும்)கமலக்கண்ணனது உலகம், இனிதுகொல் - வருந்தாமலடையலாமோ?

ஐம்புலன்களையும் அனுபவிப்பவர்க்கென்னும் பெயர் அவாய்நிலையால் வந்தது. இத்தன்மையதாகிய துயிலை விட்டுத் தவயோகங்களால் வருந்த வேண்டுதலால் (தாமரைக் கண்ணனுலகு) எம்மனோர்க்கு ஆகாதென்னுங் கருத்தால் 'இனிதுகொல்' என்றான். எம்மனோர் - எம்மை யொத்தவர்.

(க - து.) தலைமகன் தாம் விரும்பிய மகளிரது மெல்லிய தோளிற்றுயிலு மின்பம் எளிதிற் பெறப்படுவதாக விருத்தலால், அது தாமரைக் கண்ணனுலகின்பினும் சிறந்ததாகு மென்று கூறினான்.

3. Can the lotus - eyed Vishnu's heaven be attained easily and become as sweet to those who delight to sleep in the delicate embrace of their beloved.



ச, நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

[‡ பாங்கற்கூட்டத்திறுதிக்கட் சொல்லியது,]

பரி:—(இ - ள்.) தன்னை யகன்றுழிச் சுடாநிற்கும், அணுகுழிக் குளிரா நிற்கும், இப்பெற்றித்தாய தீயை யொன்கட் டருதந்த இவ ளொரு வுலகத்துப் பெற்றாள், (எ - று).

கூடாமுன் றுன்புறுதலின் 'நீங்கிற் றெறூஉம்' என்றும், கூடியபின்னின்புறுதலிற் 'குறுகுங்காற் றண்ணென்னும்' என்றும், இப்பெற்றிய தோர்தீ உலகத்தில்லையாமாகலின் 'யாண்டுப்பெற்றாள்' என்றுங் கூறினான். தன் காமத்தீத்தன்னையே அவடந்தாளாகக் கூறினான்; அவளான் ¶ அது வெளிப்படுதலின்.

தெளி:—(தலைமகன் பாங்கனது கூட்டத்துமுடிவில் சொல்லியது.) (இ - ள்.) நீங்கின் - (தன்னை) நீங்குயவிடத்து, தெறூஉம் - சுடாநிற்கும்,

* தாமரைக்கண்ணனுலகு என்பதற்கு இந்திரனுலகென்று பொருள் கூறுவாருமுண்டு. † அவனுக்கு - இந்திரனுக்கு.

‡ பாங்கற்கூட்டமாவது(மூன்றாநாள்) பாங்க (தோழ)னைத் துணையாகக் கொண்டு தலைமகன் தலைமகளைக் கூடுதல். ¶ அது - தனது காமத்தீ.

குறுகுங்கால் - நெருங்கியவிடத்து, தண்ணென்னும் - குளிராநிற்கும், தீ - (இத்தன்மையதாகிய) தீயை, (என்னிடத்துத்தருவதற்கு), யாண்டு - எவ்வுலகத்தில், இவள்-, பெற்றாள்-பெற்றனள், (எ-று).

கூடாமுன் துன்பமடைதலால் 'நீங்கிற்றெறூஉம்' என்றும், கூடிய பின் இன்பமடைதலால் 'குறுகுங்காற் றண்ணென்னும்' என்றும், இத்தன்மையதாயதோர் தீ உலகத்திலின்றாமாகலின் 'யாண்டுப் பெற்றாள்' என்றும் சொல்லினான். தன் காமத்தீயையே அவள் தந்தாளாகச் சொல்லினான்; அவளால் அது வெளிப்படுதலால்.

(க - து.) இவள் தன்னை நீங்கினால் சுடுதலும் நெருங்கினால் குளிர்ந்திருத்தலுமாகிய தீயை யென்னிடத்துத் தருவதற்கு எவ்விடத்துப் பெற்றாளென்று வியந்து கூறினான் தலைமகன் என்பது.

4 Whence has the maiden got this wondrous fire that burns when I withdraw and soothes the pain when I approach.

---

௫ * வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்.

* († தோழியிற்கூட்டத் திறுதிக்கட் சொல்லியது.)

பரி:—(இ-ள்.) மிகவினியவாய பொருள்களைப் பெறுது அவற்றின் மேல் விருப்பங் கூர்ந்த பொழுதின்கண் அவையவை தாமேவந் தின்பஞ்செய்யுமாறுபோல இன்பஞ்செய்யும், எப்பொழுதும் பெற்றுப புணரினும் பூவினையணிந்த தழைந்த கூந்தலினையுடையாள் தோள்கள், (எ - று).

தோடு—ஆகுபெயர். இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டத்துக்கண் முன்னமே நிகழ்ந்திருக்கப் பின்னரும் புதியவாய் நெஞ்சம் பிணித்தலின், அவ் ‡ வாராமைபற்றி ¶ இவ்வாறு கூறினான். § தொழிலுவமம்.

---

* "உணர்ந்தார்க் குணர்வறி யோனில்லைச் சிறறம் பலத்தொருத்தன், குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடியிடைதோள், புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய், மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே' என்று திருக்கோவையார் கூறுவதிங் கொப்பிட்டறிதற் பாலதாம்.

† தோழியிற் கூட்டமாவது தலைமகளைத் தோழி (பாங்கி) கூட்டுவிக்கத் தலைமகன் கூடுங் கூட்டம்.

‡ ஆராமை - விருப்பந் தணியாமை.

¶ இவ்வாறு கூறினான்-'வேட்ட பொழுதி னவையவை போலுமே, தோட்டார் கதுப்பினா டோள்' என்றிவ்வாறு தலைமகன் கூறினான்.

§ வேட்டபொழுதின் அவையவை தாமே வந்து இன்பஞ்செய்யும் தொழிலைத் தோட்டார் கதுப்பினாள் தோள் இன்பஞ்செய்தலுக்கு உவமானமாகக் கூறினமையின், இது தொழிலுவமமாயிற்றென்க.

தெளி:—(தலைமகன் பாங்கியினது கூட்டத்து முடிவில் சொல்லியது.) (இ - ள்.) (எப்பொழுதும் பெற்றுப்புணர்ந்தாலும்) தோடு-மலரினை, (அணிந்த), ஆர் - தழைந்த, கதுப்பினாள்-கூந்தலையுடையவளது, தோள்-தோள்கள், வேட்டபொழுதின் - (மிகவும் இனியவாயபொருள்களைப் பெறாமல் அப்பொருள்களின் மேல்) விருப்பமிகுந்த பொழுதில், அவையவைபோலும் - அவ்வப்பொருள்கள் தாமேவந்து இன்பஞ் செய்யும் விதம்போல இன்பஞ் செய்யும், (எ - று).

தோடு (இதழ்) என்னுஞ் சினைப்பெயர் அதன் முதலாகிய மலரினை யுணர்த்துதலால சினையாகுபெயராம். இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டத்தின்கண் முன்னரே அத்தோள்கள் அனுபவிக்கப்பட்டிருக்கப் பின்னரும் புதியனவாயிருந்து நெஞ்சத்தைப் பிணித்தலால், அவ்வாராமைபற்றி இப்படி சொல்லினான். இது தொழிலுவமையணி.

(க - து.) தலைமகன் இவளது தோள்கள் புணருந்தோறும் புதியனவாயிருக்கின்றனவென்றான் என்பது.

5. The embrace of the maiden whose locks are adorned with flowery wreaths delight me as if it were the very sweets I desired to enjoy.



௬. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்.

(இதுவுமது)

பரி:—(இ - ள்.) தன்னைப்பெறாது வாடிய என்னுயிர் பெற்றுறுந் தோறும் தளிர்க்கும்வகை தீண்டுதலான், இப்பேதைக்குத் தோள்கள் தீண்டப்படுவதோ ரமிழ்தினாற் செய்யப்பட்டன, (எ - று).

* ஏதுவாகலாற் றீண்டல் அமிழ்திற்கு மெய்திற்று. வாடிய வுயிரைத் தளிர்ப்பித்தல்பற்றி, அவை 'அமிழ்தி னியன்றன' என்றான். தளிர்த்தல். இன்பத்தாற் றழைத்தல்.

தெளி:—(இதுவுமது.) (இ - ள்.) உயிர் - (தன்னைப்பெறாதுவாடிய என்) உயிர், உறுதோறும் - (பெற்று) உறுந்தோறும், தளிர்ப்ப - தளிர்க்கும் படி, தீண்டலால் - தீண்டுதலால, பேதைக்கு - இம்மங்கைக்கு, தோள் - தோள்கள், அமிழ்தினியன்றன - (தீண்டப்படுவதோர்) அமிழ்தினால் செய்யப்பட்டன, (எ - று).

---

* உயிர்தளிர்ப்பதற்குத் தோள்களைத் தீண்டுதல் ஏதுவா (காரணமா) யிருத்தலால் அத்தீண்டுதல் அத்தோள்களைச் செய்வதற் கேதுவாகிய அமிழ்திற்கும் பொருந்தியதென்க. தீண்டுந் தோள்களைச் செய்வதற்குக் காரணமா யிருந்த அமிழ்தமும் தீண்டப்படுதலால் 'தோள்கள் தீண்டப் படுவதோரமிழ்தினாற் செய்யப்பட்டன' என்று கூறப்பட்டது.

தீண்டுந்தோளுக்கேதுவாகலால் தீண்டல் அமிழ்திற்கும் பொருந்தியது. வாடிய உயிரைத் தளிர்ப்பித்தல்பற்றி, அத்தோள்களை 'அமிழ்தினியன்றன' என்றான். தளிர்த்தல் - இன்பத்தால் தழைத்தல். உறுந்தோறும் - புணருந்தோறும். (தீண்டப்படாத அமிழ்தம் - மோட்சம்).

(க - து.) இவள் தோள்கள் புணருந்தோறும் என்னுயிரின்பத்தாற் றழைக்குமாறு செய்கின்றன வென்றான் என்பது.

6. The maiden's shoulders are made of ambrosia as they revive me with pleasure every time I embrace them

௭. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு.

(இவளை நீவரைந்துகொண்டு உலகோர் * தம்மிலிருந்து தமது † பாத்துண்ணு மில்லறத்தோடு படவேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது).

பரி:—(இ - ள்.) அழகிய மாமை நிறத்தையுடையாள் அரிவையது முயக்கம் இன்பம் பயத்தற்கண் பாகுபட்ட வில்லின்கணிருந்து உலகோர் தந்தாளான் வந்த பொருளைத் தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் கடகுப பகுத்துத் தங் கூற்றை உண்டாற்போலும், (எ - று).

‡ தொழிலுவமம். இல்லறஞ்செய்தாரெய்தும் துறக்கத்தின்பம் எனக்கிப் புணர்ச்சியே தருமென வரைவுடன்படான் கூறியவாறாயிற்று.

தெளி:—(இவளை நீ கலியாணஞ்செய்துகொண்டு உலகோர் தமது இல்லிலிருந்துதமது பாகத்தை உண்ணும் இல்லறத்தோடுபொருந்தல்வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது) (இ - ள்.) அம்மாவரிவை முயக்கு - அழகிய பொன்னிறத்தையுடைய மங்கையின் புணர்ச்சியானது, (இன்பந்தருதலில்), தம்மிலிருந்து - தமக்குரிய மனையிலிருந்து, தமது—(உலகோர்) தமது (முயற்சியால் வந்தபொருளை), பாத்து - (தென்புலத்தார் தெய்வம் விருந்து சுற்றத்தார் என்னும் இவர்களுக்கு) பகுத்துக்கொடுத்து, உண்டற்று - (தமது பாகத்தை) உண்டாற்போலும், (எ - று).

இது தொழிலுவமையணி. இல்லறஞ் செய்தாரடையும் சுவர்க்க வின்பத்தை எனக்கு இப்புணர்ச்சியே தருமென்று கலியாணத்திற்கு உடன்படாதவன் சொல்லியபடியாயிற்று.

(க - து.) தலைமகன் தலைமகளது புணர்ச்சி உலகோர் தமதில்லிலிருந்து தமது முயற்சியால் வந்த பொருளைத் தென்புலத்

---

* தம்மில் - தமது வீடு.

† பாத்துண்ணுதலைத் "தென்புலத்தார் தெய்வம்" என்னும் குறளினுரையிற் காண்க.

‡ தம்மிலிருந்து தமது பாத்துண்டற்றெழிலை அரிவை முயக்கிற்கு உவமானமாகக் கூறினமையின், இது தொழிலுவமமாயிற்றென்க.

தார் முதலாயினோர்க்குப் பகுத்துக் கொடுத்துத் தமது பாகத்தை யுண்டாற்போலு மின்பத்தைச் செய்வதாமென்றான் என்பது.

7. The embrace of the gold-complexioned maiden is as pleasant as dwelling in one's own house and living in one's own earning, sharing it in charity.



அ. வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

(ஒத்தவன்புடைய நமக்கு ஒருபொழுதும்விடாத முயக்கமே இனியதென வரைவுகடாய தோழிக்குச் சொல்லியது.)

பரி:—(இ - ள்.) நீசொல்லுகின்றதொக்கும். ஒருபொழுது *நெகிழாமையிற் காற்றலிடையறுக்கப்படாத முயக்கம் ஒருவரையொருவர் விழைவாரிருவர்க்கு மினிதே, (எ - று).

முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. ஈண்டு † இருவரில்லை; இன்மையான் ‡ இஃதொவ்வாதென்பது கருத்து. களவிற் புணர்ச்சியை மகிழ்ந்து வரைவுடன்படான் கூறியவாறு.

தெளி:—(ஒத்த அன்புடைய உமக்கு ஒருபோதும் விடாத புணர்ச்சியே இனியதென விவாகஞ் செய்துகொள்ளென்று வினவிய தோழிக்குத் தலைமகன் சொல்லியது.) (இ - ள்.) (நீ சொல்லுகின்றது ஒக்கும்) வளியிடை போழப்படாஅ-(ஒருபொழுதும் நெகிழாமையால்) காற்றால் இடையறுக்கப்படாத, முயக்கு - புணர்ச்சியானது, வீழுமிருவர்க்கு - (ஒருவரை ஒருவர்) விரும்புவாரிருவர்க்கும், இனிதே - இனியதேயாம், (எ - று).

இருவர்க்கும் என்னும் முற்றும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. இனிதே என்னும் ஏகாரம் தேற்றத்தில் வந்தது இங்கு இருவரில்லை; இல்லாமையால், இஃது ஒவ்வாதென்பது கருத்து. களவுப்புணர்ச்சியை மகிழ்ந்து விவாகத்திற்கு உடன்படாதவன் சொல்லியபடியாம்.

(க - து.) ஒருவரையொருவர் விரும்பு மிருவர்க்குங் காற்றால் இடையறுக்கப்படாத புணர்ச்சி யினிதாகு மென்றான் என்பது.

8. Sweet is the embrace of those whom fond affection binds, when no dissevering breath of discord finds entrance.



---

* நெகிழாமை - தளராமை.

† இருவரில்லை - நான் இவள் என்னும் வேற்றுமையோடு கூடிய இருவரில்லை.

‡ இஃது - விவாகஞ்செய்துகொள் ளென்றல்.

௯. ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

[*காத்தல் வேண்டாமையின் இடையறவில்லாத கூட்டமே இன்பப்பயனுடைத்தென வரைவுகடாவியாட்குச் சொல்லியது.*]

பரி:—(இ - ள்.) புணர்ச்சி யினிதாதற்பொருட்டு வேண்டுவதாய வூடலும் அதனை யளவறிந்து நீங்குதலும் அதன்பின் னிகழ்வதாய அப்புணர்ச்சிதானு மென விவையன்றே வரைந்துகொண்டு காமத்தையிடைவிடா தெய்தியவர் பெற்ற பயன்கள், (எ - று).

*ஆடவர்க்குப் பிரிவென்பதொன் றுளதாதன்மேலும் அதுதான் * பரத்தையர்மாட் டாதலும், அதனையறிந்து மகளிர் † ஊடிநிற்றலும், அவ்வூடலைத் தவறு செய்தவர் தாமே தந்தவறின்மைகூறி நீக்கலும், பின்னுமவ் விருவரும் ஒத்த வன்பினராய்க் கூடலுமன்றே முன்வரைந் தெய்தினோர் பெற்ற பயன்; அப்பயன் ‡ இருதலைப்புள்ளி னோருயிராய ¶ உழுவலன்புடைய வெமக்கு வேண்டாவென அவ்வரைந் தெய்தலை யிகழ்ந்து கூறியவாறு.*

தெளி:—[*மறைத்தல்வேண்டாமையால் நடுவே நீங்குதலில்லாத புணர்ச்சியே இன்பப்பயனுடையதென விவாகஞ்செய்து கொள்ளென்று விரைவிய தோழிக்குத் தலைமகன் சொல்லியது.*] (இ - ள்) ஊடல் - (புணர்ச்சி இனிதாதற்பொருட்டு வேண்டுவதாய) ஊடலும், உணர்தல் - (அதனை அளவறிந்து) நீங்குதலும், புணர்தல் - (அதன்பின் உண்டாவதாய) அப்புணர்ச்சியும், (என), இவை - இவையல்லவா, காமங் கூடியார் - (விவாகஞ்செய்து கொண்டு) காமத்தை இடைவிடாதடைந்தவர் பெற்றபயன் - பெற்றபயன்கள், (எ - று).

*ஆடவர்க்குப் பிரிவென்பதொன்று உண்டாதல்மேலும் அப்பிரிவுதான் பரத்தையரிடத்தாதலும், அதனை அறிந்து மகளிர் ஊடிநிற்றலும், அவ்வூடலைத் தவறுசெய்தவர் தாமே தமது தவறில்லாமையைச் சொல்லி நீக்கலும், பின்னும் அவ்விருவரும் ஒத்தவன்பினராய்க்கூடலு மல்லவா முன் விவாகஞ் செய்துகொண்டவர் பெற்றபயன்; அப்பயன் இருதலைப்புள்ளின் ஓருயிராகிய மாறா அன்புடைய எமக்கு வேண்டாமென்று அவ்விவாகஞ் செய்து கொண் டின்பமடைதலை யிகழ்ந்து சொல்லியபடியாம்.*

(க - து.) *விவாகஞ்செய்துகொண்டு காமத்தை யிடைவிடாதடைந்தவர் பெற்ற பயன்கள் பிணங்கலும், அதனை யளவறிந்து நீங்குதலும், அப்பாற் புணர்தலு மல்லவாவென்று கூறினான்*

9. The jealous variance, reconciliation and intercourse-these are the fruits accruing from wedded love.



---

* *பரத்தையர் - பொதுமகளிர்.* † *ஊடி - பிணங்கி.*
‡ *இருதலைப்புள் - இருதலைப்பட்சி.* ¶ *உழுவலன்பு - முழுவன்பு.*

க0. அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

[புணர்ந் * துடன்போகின்றான் றன்னுள்ளே சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நூல்களானும் நுண்ணுணர்வானும் பொருள்களை யறிய வறிய முன்னையறியாமை கண்டாற்போலக் காணப்படா நின்றது சிவந்த விழையினையுடையாளை இடைவிடாது செறியச்செறிய இவண் மாட்டுக் காதல், (எ - று).

*களவொழுக்கத்திற் பல † விடையீடுகளா னெய்தப்பெறாது அவாவுற்றான் இதுபொழுது ‡ நிரந்தரமாக வெய்தப்பெற்றமையின் 'செறிதோறும்' என்றான். அறிவிற் கெல்லையின்மையான் மேன்மேலறியவறிய முன்னையறிவு அறியாமையாய் முடியுமாறுபோலச் செறிவிற் கெல்லையின்றி மேன்மேற் செறியச்செறிய முன்னைச்செறிவு செறியாமையாய்முடியாநிற்கின்றதெனத் தன்றுராமை கூறியவாறு. இப்புணர்ச்சிமகிழ்தல் தலைமகட்கு முண்டேனும் அவண்மாட்டுக் குறிப்பானிகழ்வதல்லது கூற்றானிகழாமையறிக.*

*தெளி.—(தலைமகளைப் புணர்ந்து உடன்கொண்டு போகின்ற தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.) சேயிழைமாட்டு - சிவந்தவாபரணத்தை யுடையவளை, (இடைவிடாமல்), செறிதோறும் - புணரப்புணர, (இவளிடத்து), காமம் - காதல், அறிதோறும் - (நூல்களாலும் நுண்ணறிவாலும் பொருள்களை) அறியவறிய, அறியாமை - (முன்னை) அறியாமை, கண்டற்று - கண்டாற்போலக் காணப்படாநின்றது, (எ - று).*

*களவொழுக்கத்தில் பலவிடையீடுகளால் தன் கருத்தின்படி அனுபவிக்கப்பெறாமல் ஆசையுற்ற தலைமகன் தலைமகளை உடன்கொண்டுபோயிப் போது புணர்ச்சியை நிரந்தரமாக அடையப்பெற்றமையினால் 'செறிதோறும்' என்றான். அறிவிற்கு எல்லையில்லாமையால் மேலுமேலும் அறியவறிய முன்னையறிவு அறியாமையாய் முடியும்விதம்போலப் புணர்ச்சிக்கு எல்லையில்லாமல் மேலுமேலும் புணரப்புணர முன்னைப்புணர்ச்சி புணராமையாய் முடிகின்றதென்று தன்றுராமையைச் சொல்லியபடியாம் இப்புணர்ச்சிமகிழ்தல் தலைமகளுக்கு முண்டாயினும் அவளிடத்துக் குறிப்பால் நிகழ்வதல்லாமல் சொல்லால் நிழாமையை யறிக. ஆல் - அசை.*

*(க - து.) இவளைப் புணரப் புணர இவளிடத் தாசையானது பொருள்களை நூல்களாலும் நுண்ணறிவாலும் அறிய அறிய முன்னுள்ளவறியாமையைக் கண்டாற்போ லிருக்கின்றதென்றான்.*

10. The more one learns the more one's ignorance is discovered; so the repeated intercourse with a jewel bedecked maiden only creates a desire for more.

---

* உடன்போக்காவது தலைமகன் தலைமகளைப் பாங்கியினுரைப்படி யிரகசியமா யழைத்துக்கொண்டு தன்னூர்க்குச் செல்லுதல்.

† இடையீடுகள் - தடைகள். ‡ நிரந்தரமாக - எப்பொழுதுமாக.

## 4-வது அதிகாரம்

## நலம்புனைந் துரைத்தல்:—Praise of Pleasure.

பரி:—அஃதாவது தலைமகன் தலைமகளாலத்தைப்புனைந்து சொல்லியது. * இது புணர்ச்சி மகிழ்ந்துழிநிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்தலின்பின் வைக்கப்பட்டது.

தெளி:—*அஃதாவது தலைமகன் தலைமகளது நலத்தினை வருணித்துச் சொல்லியது. இது புணர்ச்சி மகிழ்தலிடத்த உண்டாவதாகலால், புணர்ச்சி மகிழ்தலின்பின் வைக்கப்பட்டது. நலம் - (அவயவங்களின்) அழகு.*

க. நன்னீரை வாழி † அனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

(*இயற்கைப் புணர்ச்சி யிறுதிக்கட் சொல்லியது.*)

பரி:—(இ - ள்.) அனிச்சப்பூவே! வாழ்வாயாக, ‡ மென்மையால் நீயெல்லாப்பூவினு நல்லவியல்பினையை யுடையை, அங்ஙனமாயினும் எம்மால் விரும்பப்பட்டவள் நின்னினுமெல்லிய வியல்பினையுடையள், (எ - று).

*அனிச்சம் - ¶ ஆகுபெயர். § வாழியென்பது உடன்பாட்டுக்குறிப்பு. இனி யானே மெல்லியனென்னுந் தருக்கினை யொழிவாயாக வென்பதாம். அதுபொழு தற்றறிந்தானாகலின், ஒன்றினினிமையையே பாராட்டினான். || இன்னீரளென்று பாடமோதுவாருமுளர்.*

---

* இது - *நலம்புனைந்துரைத்தல்.*

† *அனிச்சமே என்று கேளாதது கேட்பதுபோல விளித்துக் கூறப்பட்டது "ஞாயிறு திங்க ளறிவே" என்னும் தொல்காப்பியச் சூத்திரமும் "கேட்குந போலவும்" என்னும் நன்னூர் சூத்திரமும் இங்குக் கவனித்தற்பாலனவாம்.*

‡ *அனிச்சப்பூ எல்லாப்பூவினும் மென்மையுடையதென்பது "மோப்பக் குழையு மனிச்சம்" என்னுங் குறளாலு மறிதற்பாலதாம்.*

¶ *அனிச்சம் என்னும் முதற்பொருளின் பெயர் அதன் சினைப்பொருளாகிய மலரினையுணர்த்துதலால், பொருளாகு பெயராம்.*

§ *வாழியென்பது (வாழ்வாயாக என்பது) உடன்பாட்டுப்பொருளில் வந்த குறிப்புச்சொல். (அனிச்சப்பூவே! இனி நீ யானேமென்மைத் தன்மை யுடையவனென்று செருக்குற்று வாழமாட்டாய் என்பது அக்குறிப்பின் கருத்து). இஃது உடன்பாட்டுச் சொல்லால எதிர்மறைப்பொருளை யுணர்த்திய குறிப்பாம்*

|| *மென்னீரள் என்பதற்குப் பிரதியாக இன்னீரள் (இனியதன்மையை யுடையவள்) என்று பாடங் கூறுவாருமுண்டு.*

தெளி:—[தலைமகன் இயற்கைப்புணர்ச்சியின் முடிவில் சொல்லியது.] (இ - ள்.) அனிச்சமே - அனிச்சப்பூவே, வாழி - வாழ்வாயாக, நன்னீரை - (மென்மையால் நீ எல்லாப்பூவினும்) நல்ல தன்மையையுடைத்தாயிருக்கின்றாய், (அவ்வாறிருந்தாலும்), யாம்வீழ்பவள் - எம்மால் விரும்பப்பட்டவள், நின்னினுமென்னீரள் - உன்னிலும் மெல்லிய தன்மையையுடையவள், ()

அனிச்சம் - பொருளாகுபெயர். வாழியென்பது உடன்பாட்டு வியங்கோள் குறிப்புச்சொல். (அனிச்சமே! நீ) இனி யானே மெல்லியதன்மையை யுடையவனென்னுஞ்செருக்கினை ஒழிவாயாகவென்பதாம். (தலைமகன் தலைமகளை) அப்பொழுது பரிசித்து அறிந்தானாகலால், பரிசத்தினினிமையையே பாராட்டினான். † செருக்கு - கர்வம். பரிசித்து - தொட்டு.

(க - ரு.) தலைமகன் தலைமகளது பரிசத்தின் இனிமையை அனுபவித்து, அவளது மென்மைத்தன்மையை வியந்து கூறினான் என்பது.

1. May you flourish, O anicham! (of the sensitive plane). You have a tender nature; but my beloved maiden is more tender than you.



உ. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

[இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நெஞ்சே! யானேகாணப்பெற்ற இவள்கண்களைப் பலராலுங் காணப்படும் பூக்கள் ஒக்குமென்று கருதித்தாமரை, குவளை, நீலமுதலிய மலர்களைக்கண்டால் மயங்காநின்றாய், நின்னறிவிருந்தவாறென்? (எ - று).

, மையாத்தல் - ஈண்டு ஒவ்வாதவற்றை யொக்குமெனக்கோடல்; இறுமாத்தல் செம்மாத்தலென்பனபோல * வொருசொல். இயற்கைப்புணர்ச்சி நீக்கமுதலாகத் தலைமகள் கண்களைக் காணப்பெறாமையின் அவற்றோடொருபுடை யொக்கு மலர்களைக் கண்டுழியெல்லாம் அவற்றின்கட் காதல் செய்துபோந்தான், இதுபொழுது அக்கண்களி னலமுழுதுந் தானே தமியானா யிடத்தெதிர்ப்பட்டனுபவித்தானாகலின், அம்மலர்கள் ஒவ்வாமை கண்டு ஒப்புமைகருதிய நெஞ்சை யிகழ்ந்து கூறியவாறு.

தெளி:—[தலைமகன் இடந்தலைப்பாட்டில் சொல்லியது.] (இ - ள்.) நெஞ்சே - மனமே, இவள்கண் - (யானேகாணப்பெற்ற) இவள்கண்களை, பலர்காணும் - பலராலும் காணப்படும், பூவொக்குமென்று - மலர்கள் ஒக்கு

* மையாத்தல் என்பது (மை - மயக்கத்தை, யாத்தல் - கொள்ளுதல் என்று இருசொல்லாகக் கொள்ளாது) ஒருசொல்லாகக் கொள்ளப்பட்டது; ஒருசொல்லாகக் கொள்ளுமிடத்து மையாபகுதி, தல்தொழிற்பெயர்விகுதி.

மென்று, (நினைத்து), மலர்காணின் - (தாமரை குவளை நீலமுதலிய) மலர்களைக் கண்டால், மையாத்தி - மயங்காநின்றாய், (உன் னறிவிருந்தவிதம் என்ன)? (எ - று).

மையாத்தல் - இங்கு ஒப்பாகாதவற்றை ஒப்பாமென்று கொள்ளுதல்; இறுமாத்தல் செம்மாத்தல் என்பனபோல ஒருசொற்றன்மையது. இயற்கைப்புணர்ச்சியி னிக்கம் முதலாகத் தலைமகளது கண்களைக் காணப்பெறுமையால் அக்கண்களோ டொருசிறிதொத்திருக்கிற மலர்களைக் கண்டவிடத்தெல்லாம் அம்மலர்களிடத்து ஆசைசெய்து வந்ததலைமகன், இப்பொழுது அக்கண்களினலமுழுதும் தானே தனித்தவனுகர்கின்றவனை இடத்தெதிர்ப்பட்டு அனுபவித்தானாதலால், அம்மலர்கள் (அவள் கண்களுக்கு) ஒப்பாகாமையைக்கண்டு ஒப்புமைகருதிய நெஞ்சை இகழ்ந்து சொல்லியபடியாம்.

(க - து.) நெஞ்சே! நீ யாவர்களாலும் இவளது கண்களைப் பலர்காணும்மலர்களுக்கொப்பாகக்கருதிமயங்குதல் கூடாதென்று தலைமகன் தன்மனத்தை நோக்கி யிகழ்ந்து கூறினான் என்பது.

2. O my mind! deeming that flowers seen by many can resomble the eyes of my beloved, you become confused at their sight.

---

௩. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

[* கூட்டுதலுற்றபாங்கற்குத் தலைமகன்றலைமகள தியல்பு கூறியது.]

பரி:—(இ - ள்.) வேய்போலுந் தோளினையுடையாளுக்கு நிறந் தளிர் நிறமாயிருக்கும், பல்லுமுத்துமாயிருக்கும், இயல்பாயநாற்றம் நறுநாற்றமாயிருக்கும், உண்கண்கள் வேலாயிருக்கும், (எ - று).

† பெயரடையானும் ‡ரியல்பு கூறப்பட்டது. ‡ முறி, முறுவ

* கூட்டுதலுற்ற - (தலைமகளைத்தான்) கூடுதலைச் செய்த.

† வேய்த்தோளவட்கு என்னும் பெயரின் அடை (விசேடணம்) வேய் என்பது. அப்பெயரடையான வேய் என்பதனானும் தலைமகளுக்குரியல்பு கூறப்பட்டது. அவ்வியல்பாவது தலைமகளது தோள்கள் அளவானும் வடிவானும பசுமை நிறத்தானும் வேயை (மூங்கிலை) ஒத்திருக்கும் என்பது. "அளவே வடிவாப்ப தன்றியே பச்சை, யிளவேய் நிறத்தானு மேய்க்கும் - தளவேய், கலைக்குமரி போர்துளக்கும் காரவுணர் வீரந், தொலைக்குமரி யேறுகைப்பா டோள்" என்றார் பிறரும்.

‡ முறி (தளிர்) என்னும் முதலின் (பொருளின்) பெயர் அதன்பண்பாகிய நிறத்தினையும், முறுவல் (சிரிப்பு) என்னும் பண்பின்பெயர் அதன்

லென்பன ஆகுபெயர். * உருவகவகையாற் கூறினமையின், புனைந்துரை யாயிற்று. நின்னாற் கருதப்பட்டாளை யறியேனென்று சேட்படுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியதூஉமாம்.

தெளி;—[கூட்டுதலுற்ற பாங்கனுக்குத் தலைமகன் தலைமகளது இயல்பினைச்சொல்லியது.] (இ - ள்.) வேய்த்தோளவட்கு-மூங்கில்போலுந் தோளினையுடையவளுக்கு, மேனி-நிறம், முறி-தளிர்நிறமாயிருக்கும், முறுவல்-பல்லு, முத்தம் - முத்தமாயிருக்கும், நாற்றம்-இயற்கையாயவாசனை, வெறி-நல்லவாசனையாயிருக்கும், உண்கண் - (மை) உண்டகண்கள், வேல் - வேலாயிருக்கும், (எ - று).

வேய்த்தோளவட்கு என்பதன்கணுள்ள வேய் என்னும் பெயரடையாலும் ஒருதன்மை சொல்லப்பட்டது. முறி-பொருளாகு பெயர்; முறுவல் - பண்பாகுபெயர். (மேனிமுறி, முறுவல் முத்தம், நாற்றம் வெறியென்று) உருவகவகையால் சொல்லினமையால், இது புனைந்துரையாயிற்று. இதனை உன்னால் கருதப்பட்டவளை யானறியேனென்று சேட்படுத்திய தோழிக்குத் தலைமகன் சொல்லியதுமாம்.

(க - து.) தலைமகளது அழகைத் தலைமகன் தன்பாங்கனுக்கு உருவகவகையால் மேனிமுறி, முறுவல் முத்தம், நாற்றம் வெறியென்று சிறப்பித்துக் கூறினன் என்பது.

3. The complexion of the bamboo—shouldered maiden is like a tender shoot ; her teeth are like pearls ; her breath emits good fragrance ; and her dyed eyes are like the darts of a lance.



ச. காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

[பாங்கற்கூட்டத்துச்சென்று † சார்தலுறுவான் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) குவளைப்பூக்கடாமும் காண்டற்றொழிலை யுடையவாயின்,மாண்டவிழையினை யுடையாள் கண்களை ‡ யாமொவ்வே மென்று கருதி அந்நாணினு லிறைஞ்சி நிலத்தினை நோக்கும், (எ - று).

---

முதலாகிய பல்லினையு முணர்த்துதலால், முறையே இவை முதலாகு பெயரும், பண்பாகுபெயருமாம்.

* மேனி முறியென்றும், முறுவல் முத்தம் என்றும், நாற்றம் வெறியென்றும் உருவகவகையால் கூறினமையின், (இக்குறள்) புனைந்துரை (அலங்கரித்துச்சொல்லுதல்) ஆயிற்றென்பது. உருவகமாவது உவமானத்தையும் உவமேயத்தையும் வேற்றுமை யொழிவித்து ஒன்றென்னும் உள்ளுறை (கருத்து) தோன்றக் கூறுவதாம்.

† சார்தலுறுவான்—தலைமகளைக் கூடுந் தலைமகன்.

‡ யாமொவ்வேம் - யாம் ஒப்பாகோம்.

பண்பாலேயன்றித் தொழிலானு மொவ்வாதென்பான் 'காணின்' என்றும், கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடைத்தாமென்பது தோன்றக் 'கவிழ்ந்து' என்றுங் கூறினான். காட்சியு நாணுமின்மையிற் செம்மாந்து வானைநோக்கின வென்பதாம்.

தெளி:—[பாங்கற் கூட்டத்திற்சென்று சார்தலுறுந்தலைமகன் சொல்லியது.] (இ - ள்.) குவளை - குவளைமலர்களும், காணின் - காணுதற்றொழிலையுடையனவாயின், மாணிழைகண் - மாட்சிமையுடைய ஆபரணங்களையுடையவளது கண்களை, ஒவ்வேமென்று—(யாம்) ஒவ்வேமென்று (நினைத்து), கவிழ்ந்து - (அந்நாணத்தினால்) தலைகுனிந்து, நிலன் - நிலத்தினை, நோக்கும் – பார்க்கும், (எ - று).

(தலைமகன் தலைமகளது கண்களுக்கு) குவளைப்பூ கருமை நிறமென்னும்பண்பாலேயன்றிக் காண்டற்றொழிலாலும் ஒவ்வாதென்பான்'காணின்' என்றும், கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடையதாமென்பது தோன்றக் 'கவிழ்ந்து' என்றும்சொல்லினான் காணுதலும் நாணுதலும் இல்லாமையால் குவளைப்பூக்கள் இறுமாந்து ஆகாயத்தை நோக்கினவென்பதாம்.

(க - து.) தலைமகன் இவளது கண்களைக் குவளைமலர்கள் காணுந்தன்மையனவாயிருந்தாயின், அவையாமிவளது கண்களுக்கொப்பாகோமென்று கருதி நாணமுற்றுத் தலைகுனிந்து நிலத்தை நோக்குமென்று கூறினான் என்பது.

4. If the lotus could see, it would bend looking at the ground as if with shame saying "I can never resemble the eyes of the jewelled maiden".

---

௫ அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

[* பகற்குறிக்கட் பூவணிகண்டு சொல்லியது.]

பரி:—(இ - ள்.) இவள் தன்மென்மை கருதாது அனிச்சப்பூவை † முகிழ்களையாது சூடினாள்; இனி யிவளிடைக்கு நல்லபறைக ‡ ளொலியா, (எ - று).

---

* பகற்குறியாவது பகலிற் கூடுமிடத் தடையாளமாம்; அஃதாவது பகலில் ஓரிடத்தைக் குறியா (அடையாளமா)க வேற்படுத்திக்கொண்டு தலைமகன் வந்து தலைமகளைக்கூடுதலாம். "பகற்குறி யென்பது தலைமகளைத் தழையேற்பித்ததோழி தலைமகனுடன் அவளைப் பகற்குறிக்கண் தலைப் பெய்வியா (கூட்டா) நிற்றல்" என்று திருக்கோவையாருரையிற் கூறப்பட்டிருக்கிறது. † முகிழ் - காம்பினடி; களையாது - நீக்காது.

‡ ஒலியா என்பது ஒலிக்கும் என்னும் பொருளது. [படாஅ என்னும் எதிர்மறைச்சொல் படும் (ஒலிக்கும்) என்றுடன்பாட்டுப்பொருளுணர்த்தி நின்றது].

அம்முகிழ்ப்பாரம் பொறுமையின் இடைமுரியும் ; முரிந்தால், அத ற்குச் செத்தார்க்குரிய * நெய்தற்பறையே படுவதென்பதாம். மக்கட்குரிய சாக்காடும் பறைபடுதலும் † இலக்கணைக்குறிப்பால் நுசுப்பின்மே லேற்றப் பட்டன.

தெளி:—[தலைமகன் புகற்குறியில் தலைமகளது பூவணிகண்டு சொல் லியது.] (இ - ள்.) (இவள் தன்மென்மையை நினையாமல்) அனிச்சப்பூ - அனிச்சமலரை, கால்களையாள் - தாள்களையாது, பெய்தாள் - சூடினள், நுசுப்பிற்கு - (இனியிவள்) இடைக்கு, நல்லபறை - நல்லபறைகள், படாஅ- ஒலியா, (எ - று).

அம்மலர்த்தாளின்பாரம் பொறுமையால் (இவள்) இடைமுரியும்; முரிந்தால், அவ்விடைக்குச் செத்தவர்க்கு உரிய நெய்தற்பறையே ஒலிக்கு மென்பதாம் மக்கட்குரியசாவும் பறையொலித்தலும் இலக்கணைக் குறிப் பால் நுசுப்பின் (இடையின்) மேல் ஏற்றப்பட்டன இதனால் நுசுப்பு மிக நுண்மையதென்பது பெறப்படுவதாம்.

(க - து.) தலைமகன் தலைமகளது இடையினுண்மையைக்காம்பு களையாத பூவணிவாயிலாக விபரீதங்கூறினன் என்பது.

5. No merry drums will be beaten as the anicham adorned by the maiden without removing the stems will wring down her delicate waist.

சு. மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

(‡ இரவுக்குறிக்கண் மதிகண்டு சொல்லியது.)

பரி:—(இ - ள்.) வானத்து ¶ மீன்கள் வேறுபாடு பெரிதாகவும் தம்மதியினையும் எம்மடந்தை முகத்தினையும் இதுமதி இதுமுகமென் றறியமாட்டாது தந்நிலையினின்றுங் கலங்கித் திரியாநின்றன, (எ-று).

* நெய்தற்பறை - சாப்பறை.

† "ஆக்கும் பிரதி பதத்துடனே" என்னும் பிரயோகவிவேகச் செய் யுளினுரையில் "நுசுப்பிற்கு, நல்ல படாஅ பறை" என இலக்கணையடியாய்த் தோன்றிய குறிப்பை இலக்கணாமூலத்தொனி என்பர்" என்று கூறப்பட் டிருக்கிறது. இலக்கணைக் குறிப்பாவது ஒருபொருளினது இலக்கணத்தை மற்றொருபொருட்குத் தந்துரைப்பதாம். இங்கு மக்கட்குரிய சாதலும் பறை படுதலும் இடையின்மேலேற்றப்பட்டவாறறிக.

‡ இரவுக்குறியாவது இரவிற் கூடுமிடத் தடையாளமாம் ; அஃதாவது தலைமகன் தலைமகளை இரவில் அவளதுமனையினருகே குறித்தவோ ரிடத்தில் வந்து புணருதலாம். ¶ மீன்கள் - நட்சத்திரங்கள்.

ஓரிடத்து நில்லாது எப்பொழுது † மியங்குதல்பற்றிப் 'பதியிற்கலங்கிய' என்றான். ‡வேறுபாடு வருகின்றபாட்டாற்பெறப்படும். ¶ இனி யிரண்டனையும் பதியிற்கலங்காத மீன்களறியுமல்லது கலங்கின மீன்கள் அறியாவென்றுரைப்பினு மமையும்.

தெளி:—[இரவுக்குறியில் தலைமகன் சந்திரனைக்கண்டு சொல்லியது) (இ - ள்.) மீன் - (வானத்துத்) தாரகைகள், (வேறுபாடு பெரிதாயிருக்கவும்), மதியும் - (தமது) சந்திரனையும், மடந்தை முகனும் - (எமது) மடந்தையின் முகத்தையும், அறியா - (இது சந்திரன் இது முகமென்று) அறியமாட்டாமல், பதியின் - (தமது) நிலையினின்றும், கலங்கிய-கலங்கித்திரியாநின்றன, (எ - று).

வானத்துத் தாரகைகள் ஓரிடத்து நில்லாமல் எப்போதும் இயங்குதல் பற்றிப் 'பதியிற்கலங்கிய' என்றான். வேறுபாடு பின்வரும் பாட்டாற் பெறப்படும். இனி (மதி, மடந்தை முகமென்னும்) இரண்டனையும் நிலையிற் கலங்காத தாரகைக ளறியுமல்லாமல் கலங்கிய தாரகைகள் அறியமாட்டாவென்றுரைகூறினு மொக்கும். தாரகை - நட்சத்திரம்.

(க - து.) தலைமகளது முகத்திற்கும் மதிக்கும் உள்ள வேறுபாட்டினை யறியாது நட்சத்திரங்கள் தமது நிலையினின்றுங் கலங்கித்திரிந்தன வென்று கூறினான் தலைமகன் என்பது.

6. The stars perplexed are rushing from their spheres, not being able to distinguish between the moon and the maiden's face.

ஏ. அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

(இ-வுமது.)

பரி:—(இ - ள்.) அம்மீன்கள் அங்ஙனங் கலங்குதற்குக் காரணம் யாது? முன்குறைந்தவிடம் வந்து நிரம்பியே விளங்குமதிக்கட்போல இம்மாதர் முகத்து மறுவுண்டோ, (எ - று).

இடம் - கலை. § மதிக்கென்பது வேற்றுமை மயக்கம். சேய்தலும்

---

† இயங்குதல் - திரிதல்.

‡ வேறுபாடு—மதிக்கும் மடந்தைமுகத்திற்கு முள்ளவேற்றுமை.

¶ இனி 'மதியு மடந்தை முகனும்' என்னும் இரண்டனையும் பதி (தமது நிலை)யிற் கலங்காத மீன் (நட்சத்திரங்)கள் அறியுமல்லாமல் (பதியிற்) கலங்கின மீன்(நட்சத்திரங்)கள் அறியா என்று பொருளுரைப்பினும் பொருந்தும்.

§ மதிக்கு என்பதன்கணுள்ள கு என்னும் நான்கனுருபு தனக்குரிய பொருளைவிட்டு மதிக்கண் என ஏழனுருபின் பொருளில் வந்தமையின், வேற்றுமை மயக்கமாயிற்று.

வளர்தலும் மறுவுடைமையு மின்மைபற்றி வேறுபாடறியலாயிருக்க அறிந் திலவென விகழ்ந்து கூறியவாறு.

தெளி:—(இதுவுமது.) (இ - ள்.) (அத்தாரகைகள் அவ்வாறு கலங்கு தற்குக் காரணம்யாது?) அறுவாய் - முன்குறைந்த விடம், நிறைந்த - வந்து நிரம்பியே, அவிர் - விளங்குகிற, மதிக் குப்போல - சந்திரனிடத்துப்போல, மாதர்முகத்து-இம்மாதர் முகத்தினிடத்து, மறு-களங்கம், உண்டோ-இருக் கின்றதோ, (இல்லை), (எ-று).

இடம்-கலை. மதிக்கு என்பது மதிக்கண்என வேற்றுமை மயக்கமா யிற்று. (முகத்திற்குத்) தேய்தலும் வளர்தலும் களங்கமுடைமையும் இல்லா மைபற்றி (இதுமதி இதுமுகமென்று) வேறுபாடு அறியலாயிருக்கத் தார கைகள் (அவ்வேறுபாட்டை) அறிந்திலவென்று (தலைமகன் அவற்றை) இகழ்ந்து சொல்லியபடியாம். நிறைந்த என்பது இங்கு வினையெச்சப் பொ ருளில் வந்தது

(க - ரு.) தேய்தலும் வளர்தலும் களங்கமு முடைய சந் திரன் அமைவில்லாத கலைமகளாது முகத்திற்குஒப்பாகாதென்றான்.

7. Could there be dark spots in the face of this maiden like the waxing & waning of the moon.



அ. மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.

(இதுவுமது.)

பரி:—(இ - ள்.) மதியே! வாழ்வாயாக, இம்மாதர் முகம்போல யான் மகிழும்வகை ஒளிவீசவல்லையாயின், நீயுமென்காதலை யுடையை யாதி, (எ - று).

மறுவுடைமையின் அது மாட்டாய்; மாட்டாமையின், என்னாற் காத லிக்கவும் படாயென்பதாம். 3 வாழியென்பது இகழ்ச்சிக் குறிப்பு.

தெளி:—(இ - ள்.) (இதுவுமது.) (இ - ள்) மதி - சந்திரனே, வாழி- வாழ்வாயாக, மாதர்முகம்போல் - இம்மாதர் முகத்தைப்போல, ஒளிவிட வல்லையேல் - (நான் மகிழும்படி) ஒளி வீசவல்லையாயின், காதலை - (நீயும் என்) காதலை (உடையையாவாய்), (எ - று).

மதியே! உன்னிடத்துக் களங்கமிருத்தலால் நீ இம்மாதர்முகத்தைப் போலொளிவிடமாட்டாய்;ஒளிவிட மாட்டாமையால்,என்னால் விரும்பவும் படாயென்பதாம். வாழி - இகழ்ச்சிக்குறிப்புச்சொல். காதல் - விருப்பம்.

---

* வாழியென்பது இகழுதற்கண்வந்த குறிப்புச்சொல். இவ்வாறுவரு தலைப் "பல்சான் றீரே பல்சான் றீரே, கயன்முள் ளன்ன நரைமுதிர் திரை கவுட், பயனின் மூப்பிற் பல்சான் றீரே" என்பதனானு மறிக.

*(க - து.) தலைமகன் சந்திரனைநோக்கி நீ களங்கமுடைமையால், இவள் முகம்போல ஒளிவீசுந் தன்மையனல்லை என்றிழித்துக்கூறினன் என்பது.*

8. Farewell O moon! if you can shine bright like the face of the maiden you would be worth loving.



௯. மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி.

(இதுவுமது)

பரி:—(இ - ள்.) மதியே! இம்மலர்போலுங் கண்ணினையுடையாள் முகத்தை நீயொக்கவேண்டுதியாயின், இதுபோல யான் காணத் தோன்று, பலர்காணத் தோன்றதொழி, (எ - று).

*தானே முகத்தி னலமுழுதுங் கண்டனுபவித்தானாகலின், * ஈண்டும் பலர் காணத்தோன்றலை யிழித்துக் கூறினான். தோன்றின் நினக்கவ்வொப் புண்டாகா தென்பதாம்.*

தெளி:—(இதுவுமது.) *(இ - ள்.) மதி - சந்திரனே, மலரன்னகண்ணாள் - இம்மலர்போலுங் கண்களையுடையவளது, முகம் - முகத்தை, ஒத்தியாயின் - (நீ) ஒத்திருக்க விரும்புவாயாயின், (இம்முகத்தைப்போல யான் காணத்தோன்று), பலர்காணத் தோன்றல் - பலர்காணத்தோன்றதொழி.*

*(தலைமகன்) தானே (தலைமகளது) முகத்தினலமுழுதும் கண்டு அனுபவித்தானாகலால், இங்கும் (சந்திரன்) பலர்காணத் தோன்றலை இழித்துச்சொல்லினான். (சந்திரனே! நீ பலர்காணத்)தோன்றினால் உனக்கு அம்முகத்தோடு ஒப்பு உண்டாகா தென்பதாம் நலம்-அழகு.*

*(க - து.) தலைமகன் சந்திரனே! நீ என் தலைவியின் முகத்திற்கொப்பாக விரும்புவாயாயின், பலர் காணத் தோன்றுவ தொழியக் கடவாயென்றதனையிழித்துக் கூறினான் என்பது.*

9. O moon! if you wish to resemble the face of her whose eyes are like flowers, do not appear for all to see



** "மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண், பலர்காணும் பூவொக்கு மென்று" என்றுள்ள இவ்வதிகாரத்தி னிரண்டாவது குறளில் மலர் பலராலுங் காணப்படுதலை யிழித்துக் கூறினாற்போல, ஈண்டும் தலைமகன் மதி பலர்காணத்தோன்றலை யிழித்துக் கூறினான் என்பது.*

கo. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்.

(* உடன்போக்குரைத்த தோழிக்கு † அதனதருமைகூறி மறுத்தது.)

பரி:—(இ - ள்.) உலகத்தாரான் மென்மைக்கோடுக்கப்பட்ட அனிச்சப்பூவும் அன்னப்புள்ளின் சிறகுமாகிய விரண்டும் மாதரடிக்கு நெருஞ்சிப்பழம்போல வருத்தஞ்செய்யும், (எ - று).

‡ முள் வலிதாத லுடைமையிற் 'பழம்' என்றான். இத்தன்மைத் தாயவடி ¶ "பாத்தியன்ன குடுமிக் கூர்ங்கற்"களையுடைய $ வெஞ்சுரத்தை யாங்ஙனங் கடக்குமென்பது குறிப்பாற் பெறப்பட்டது. ⁝ செம்பொருளே யன்றிக் குறிப்புப் பொருளும் அடிநல னழியாமையாகலின், () இதுவுமிவ் வதிகாரத்த தாயிற்று.

தெளி:—(உடன்போக்குரைத்த தோழிக்குத் தலைமகன் அதனது அருமையைக்கூறி மறுத்தது.) (இ-ள்.) (உலகத்தாரால் மென்மைக்கு எடுக்கப்பட்ட) அனிச்சமும் - அனிச்சமலரும், அன்னத்தின்றூவியும் - அன்னப் பறவையின்சிறகும், (ஆகிய இரண்டும்), மாதரடிக்கு - மாதாது பாதத்திற்கு, நெருஞ்சிப்பழம்-நெருஞ்சிப்பழம் (போல வருத்தஞ்செய்யும்),(எ-று).

முள்வலிதாதலுடைமையால் 'பழம்' என்றான். இத்தன்மையதாய அடி பாத்தியிட்டாற்போன்ற வுச்சியினையுடைய கூரியகற்களையுடைய பாலைநிலவழியை எவ்வாறு கடக்குமென்பது குறிப்பால் பெறப்பட்டது. செம்பொருளே யன்றிக் குறிப்புப்பொருளும் அடிநல னழியாமையாகலின், இதுவும் இவ்வதிகாரத்ததாயிற்று.

---

* உடன்போக்கு-தலைமகன் தன்னூர்க்குத் தலைமகளை யுடன் கொண்டு போதல். † அதனருமை - உடன்போக்கினருமை.

‡ தலைமகன் நெருஞ்சிப்பழத்தின்முள் வலிதாத (கடினமாத) லுடைமையால், நெருஞ்சிமுள் என்று கூறாது நெருஞ்சிப்பழம் என்று கூறினான்.

¶ அகநானூறு, களிற்றியானைநிரை. $ இதன்பொருள். பாத்தியிட்டாற்போன்ற உச்சியினையுடைய கூரியகல் என்பது. பார்ப்பதி யன்ன என்றும் பாடமுண்டு. பார்ப்பதி – பெருநெருஞ்சில்.

$ வெஞ்சுரம்–கூடுமிக்க மணற்காடு; அஃதாவது பாலைவனம்.

⁝ "இத்தன்மைத்தாயவடி... யாங்ஙனம் கடக்கும்" என்பதுவரை குறிப்புப் பொருள்; மற்றது செம்பொருள். குறிப்புப்பொருள் - சோற்றலாலன்றிக் குறிப்பாற் பெறப்படும் பொருள். சோற்றல் இச்சொல்லாலிப் பொருளையறிக வென்னுஞ் சங்கேதம் (இச்சை). செம்பொருள் - செஞ்சொல்லாற் பெறப்படும்பொருள். செஞ்சொல் - வெளிப்படைச்சொல்.

() இதுவும் - இக்குறளும்.

(க - து.) தலைமகன் தலைமகளது பாதத்தின் மென்மைச்சிறப்பை வியந்துகூறினன் என்பது.

10. The (flowers of the sensitive plant) anicham and the feathers of the swan are to the (delicate) feet of woman like the thorny Nerunji fruit.



## 5-வது அதிகாரம்

## காதற்சிறப்புரைத்தல்:—Declaration of excessive love.

பரி.—அஃதாவது தலைமகன் தன்காதன் மிகுதிகூறலும், தலைமகள் தன்காதன் மிகுதிகூறலுமாம். † இது புணர்ச்சியும் நலனும் பற்றி நிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்தல் நலம்புனைந்துரைத்தல்களின்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது தலைமகன் தன்காதல்மிகுதியைச் சொல்லுதலும், தலைமகள் தன்காதல் மிகுதியைச் சொல்லுதலுமாம் இது புணர்ச்சியும் நலனும்பற்றி நிகழ்வதாகலால், புணர்ச்சிமகிழ்தல் நலம்புனைந்துரைத்தல்களின்பின் வைக்கப்பட்டது. காதல் - ஆசை

க. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

(இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கட் டலைமகன் றன்னயப்புணர்த்தியது.)

பரி:—(இ - ள்.) இம்மெல்லிய மொழியினை யுடையாளது வாலிய வெயிறூறியநீர் பாலுடனே தேனைக்கலந்த கலவைபோலும், (எ-று).

கலந்ததற்றென்பது விகாரமாயிற்று; கலக்கப்பட்டதென்றவாறு. 'பாலொடு தேன்' என்றவதனால் ‡ அதன்சுவைபோலுஞ் சுவையினையுடைத்தென்பதாயிற்று. 'எயிறூறிய' என ¶ இடத்துநிகழ்பொருளின் றொழில் இடத்தின்மே னின்றது. வேறுவே றறியப்பட்ட சுவையவாய பாலுந்தேனுங் கலந்துழி அக்கலவை இன்னதென்றறிபலாகாத இன்சுவைத்தாமாகலின், இது பொருளாகிய நீர்க்கு மெய்துவிக்க.

தெளி:—[இயற்கைப்புணர்ச்சியின் முடிவில் தலைமகன் தன் காதலையறிவித்தது] (இ - ள்.) பணிமொழி - இம்மெல்லிய சொல்லினையுடையவளது, வாலெயிறு – தூய்மையான பல்லில், ஊறிய நீர் - ஊறிய நீரானது, பாலொடுதேன் கலந்தற்று - பாலுடனே தேனைக் கலந்த கலவை போலும், (எ - று).

† இது - காதற்சிறப்புரைத்தல்

‡ அதன் - பாலொடுகூடிய தேனினது.

¶ எயிறு (பல்) என்னும் இடத்துநிகழ்வதான நீரென்னும் பொருளினது ஊறுதல் (சுரத்தல்) என்னும் தொழிலை இடத்தின் (பல்லின்) மேலேற்றி 'எயிறூறிய' என்று கூறப்பட்டது.

கலந்ததற்றென்பது கலந்தற்று என விகாரமாயிற்று; அதன்பொருள் கலக்கப்பட்டதென்பதாம். 'பாலொடுதேன்' என்றவதனால் 'வாலெயிறூறிய நீர்' அதன் சுவைபோலுஞ் சுவையினை யுடையதென்ப தாயிற்று. 'எயிறூறிய' என்பது இடத்துநிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேலாய உபசார வழக்காம். வேறு வேறறியப்பட்ட சுவையினையுடையனவாயபாலையும் தேனையும் கலந்தவிடத்து அக்கலவை இன்னதென்று அறியலாகாத இனிய சுவையை யுடையதாமாகலால், இச்சுவை கூய உவமேயமான நீர்க்கும் அடைவிக்க. பணிமொழிவாலெயிறூறியநீர் இன்னதென்றறியலாகாத இனிய சுவையையுடையதாமென்க. ஏ-அசை.

(கு - து.) தலைமகளது அதரபானஞ்செய்த தலைமகன் அதனது சிறப்பைப் 'பாலொடு தேன்கலந்தற்றே' என்றுவமை வாயிலாக வியந்து கூறினன் என்பது.

1. The water soaked in the white teeth of this soft speeched maiden is like the admixture of milk & honey.



உ. உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

(* பிரிவச்சங் கூறியது.)

பரி:—(இ - ள்.) உடம்போடுயிரிடையுளவாய நட்புக்கள் எத்தன்மைய அத்தன்மைய இம்மடந்தையோடு எம்மிடையுளவாய நட்புக்கள், (எ - று).

'என்ன' எனப் பன்மையாற் கூறியது, இரண்டும் † தொன்று தொட்டு வேற்றுமையின்றிக் கலந்து வருதல், இன்பத்துன்பங்க ளொக்கவனுபவித்தல், இன்றியமையாமை யென்றிவற்றை நோக்கி. ‡ தெய்வப்புணர்ச்சியாகலான் அது பொழுது உணர்ச்சியிலளாகியாள் பின்னுடையளாமன்றே, ஆயவழி இவன் பாவன் கொலெனவும், என்கணன்புடையன்கொ லெனவும், இன்னுமிவனைத் தலைப்பெய்தல் கூடுங்கொலெனவும், அவண்மனத்

* பிரிவச்சங்கூறியது-தலைமகன் தலைமகளைப்பிரியும்போ துண்டாகிய அச்சத்தைச்.சொல்லியது. அச்சம் - பயம்.

† தொன்றுதொட்டு - அநாதியாக.

‡ இயற்கைப்புணர்ச்சி தெய்வத்தாற் புணரும் புணர்ச்சியும் தலைமகளாற் புணரும் புணர்ச்சியுமென் றிருவகையாம். அவற்றுள், தெய்வப்புணர்ச்சியாவது தெய்வம் (ஊழ்) கூட்டத்தன்னறிவு மாறுபட்டுத்தலைமகன் தலைமகளைப் புணருதலாம்; "வேட்கை புணர்த்தல் மறுத்த லுடன்படல், கூட்டமென் றிறைவியிற் கூட்டால் வகைத்தே" என்பது மற்றதாம்.

னின்க ணிகழும்; அங்கிகழ்வனவற்றைக் குறிப்பானறிந்து அவைநீரக் கூறிய வாறு. * என்னை யென்று பாட மோதுவாரு முளர்.

தெளி:—(தலைமகன் பிரிவிலுண்டாகிய அச்சத்தைச் சொல்லியது.) (இ - ள்.) மடந்தையொடெம்மிடை-இம்மடந்தையோடு எம்மிடத்து, (உள வாகிய), நட்பு - நட்புக்கள், உடம்பொடுயிரிடை - உடம்போடு உயிரிடத்து, (உளவாகிய நட்புக்கள்), என்ன - எத்தன்மையன, அன்ன - அத்தன்மை யனவாம், (எ - று)

'என்ன' எனப் பன்மையாற் சொல்லியது, உயிரும் உடம்புமாகிய இர ண்டும் தொன்றுதொட்டு வேற்றுமையில்லாமல் கலந்துவருதல், இன்பத்துன் பங்களை யொக்க அனுபவித்தல், ஒன்றற்கொன்று அவசியமாதல் என்ற இவ ற்றை நோக்கியாம். தெய்வப் புணர்ச்சியாகலால் அப்பொழுது உணர்ச்சியில் லாதிருந்தவள் பின்னே உணர்ச்சியுடையவளாமன்றே, ஆகியவிடத்து இவன் எவனோவென்றும்,என்னிடத்து அன்புடையவனோவென்றும், இன் னும் இவனைக் கலத்தல் கூடுமோ வென்றும் அவளுள்ளத்துத் தோன்றும்; அவ்வாறுதோன்றுவனவற்றைத் தலைமகன் குறிப்பால் அறிந்து (தலைமக ளுக்கு) அவை நீரச்சொல்லியபடியாம் மற்று-அசைநிலை.

(க - து) தலைமகன் இவளுக்கும் எனக்கும் உளவாகிய நட் புக்கள் உயிருக்கும் உடலுக்கும் உளவாகிய நட்புக்கள் போன்றன வாமென்று கூறினன் என்பது.

2. The friendship between this maiden & myself is like the union of the body & atman

௩. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்.

[இடந்தலைப் பாட்டின்கட் டலைமகணீக்கத்துச் சொல்லியது]

பரி:—(இ - ள்.) என்கண்ணிற் கருமணியின்கணுறையும் பாவாய், நீ யங்குநின்றும் போதருவாயாக, போதராதிருந்தியாயின், எம்மால் விரு ம்பப் பட்ட திருநுதலை யுடையாடகு இருக்க விடமில்லையாம், (எ - று).

யான் காணு தமையாமையின் இவள் புறத்துப்போகற்பாலளன்றி என் கண்ணு ளிருக்கற்பாலள்; இருக்குங்கால் நின்னோடொருங்கிருக்க இடம் போதாமையின், நின்னினுஞ் சிறந்த விவட்கு அவ்விடத்தைக் கொடுத்து நீ போதுவாயாக வென்பதாம்

தெளி:—[இடந்தலைப்பாட்டில் தலைமகள் நீங்கும்போது தலைமகன் சொல்லியது.] (இ - ள்.) கருமணியிற்பாவாய் - (என் கண்ணிற்) கருமணி

* என்ன என்பதற்குப் பிரதியாக என்னை யென்று பாடங்கூறுவாரு முண்டு.

யில் வசிக்கும் பாவையே, நீ போதாய் - நீ (அவ்விடத்தி னின்றும்) போவாயாக, (போகாதிருந்தாயானால்), யாம் வீழும் - எம்மால் விரும்பப்பட்ட, திருநுதற்கு - அழகிய நெற்றியை யுடையவளுக்கு, இடம் - இருக்கவிடம், இல்லை - இல்லையாம், (எ - று).

(இவளை) யான் காணாதிருத்தல் முடியாமையால் இவள் புறத்திற் போகுந்தன்மையளாகாமல் என் கண்ணுள் இருக்குந் தன்மையள்; இருக்கும்போது (கருமணியிற் பாவையே! கருமணியில்) உன்னோடொருமித்திருக்க இடம் போதாமையால், உன்னிலுஞ் சிறந்த இவளுக்கு அவ்விடத்தைக் கொடுத்து நீ போய்விடுவாயாக வென்பதாம்.

(க - து) அன்பின் மிகுதியால் தலைமகன் தலைமகளை உறுப்பிற் சிறந்த கண்ணின் கருமணியின் பாவையினும் சிறந்தவளாகக் கூறினன் என்பது.

3. O pupil of my eye! begone; there is no room for my fair browed beloved.



ச. வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

[பகற்குறிக்கட் புணர்ந்துநீங்குவான் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) தெரிந்த விழையினை யுடையாள் எனக்குப் புணருமிடத்து உயிர்க்குடம்போடு கூடிவாழ்தல் போலும்; பிரியுமிடத்து அதற்கு அதனி னீங்கிப் போதல் போலும், (எ - று).

* எனக்கென்பதும் புணருமிடத்தென்பதும் அவாய் நிலையான் வந்தன. † வாழுங்காலத்து வேற்றுமையின்றி ‡ வழிநிற்றலானும், சாங்காலத்து ¶ வருத்தஞ் செய்தலானும், () அவற்றை அவள்புணர்வுபிரிவுகட் குவமையாக்கினான்.

தெளி:—[பகற்குறியில் தலைமகளைப் புணர்ந்து நீங்குந் தலைமகன் சொல்லியது] (இ - ள்.) ஆயிழை-ஆராய்ந்தணிந்த ஆபரணத்தையுடையவள், (எனக்குப் புணருமிடத்து), உயிர்க்கு, வாழ்தலன்னள் - (உடம்போடுகூடி)

* உயிர்க்கு வாழ்தலன்னள் என்பது எனக்கு என்பதையும், புணருமிடத்து என்பதையும் அவாவி (வேண்டி) நின்றது.

† வாழுங்காலத்து - உயிர் உடம்போடுகூடி வாழுங்காலத்தில்.

‡ வழிநிற்றல் - ஒருசொல்; அதன்பொருள் இருத்தல்.

¶ வருத்தஞ் செய்தலானும் - உயிர்க்கு உடம்பு துன்பத்தைச் செய்தலானும்.

() அவற்றை-வாழ்தலையும் சாதலையும்.

வாழ்தல்போ லாகின்றாள், நீங்குமிடத்து - பிரியுமிடத்து, அதற்கு - அவ்வுயிர்க்கு, சாதலன்னள் - அவ்வுடம்பி னின்றும் நீங்கிப்போதல்போ லாகின்றாள்.

எனக்கென்பதும் புணருமிடத்தென்பதும் அவாய்நிலையால் வந்தன. வாழுங்காலத்து (உயிருமுடம்பும்) வேற்றுமையின்லாமல் வழிநிற்றலானும், சாங்காலத்து வருத்தஞ்செய்தலானும், தலைமகன் அவற்றை அவள் புணர் வுபிரிவுகளுக்கு உவமையாக்கினான்.

(க - து.) தலைமகன் இவளென்னோடு புணருதல் உயிருடம்போடு கூடி வாழ்தலையொக்கும்; இவளென்னினின்றும் பிரிதல் உயிருடம்பினின்றும் பிரிதலை யொக்குமென்று கூறினான்.

4. The fair - jewelled maiden resembles the life in the body when she is in union with me, & the lifeless body when she leaves me.



ரு. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம்.

(* ஒருவழித்தணந்துவந்த தலைமகன் நீயிர் தணந்தஞான்று எம்மை யுள்ளியுமறிதிரோவென்ற தோழிக்குச் சொல்லியது.)

பரி:—(இ - ள்.) ஒள்ளியவாய் அமரைச்செய்யுங் கண்ணினையுடையாள் குணங்களை யான்மறந்தேனாயின், நினைப்பேன், ஒருபொழுதும் மறத்தலையறியேன், ஆகலான் நினைத்தலையுமறியேன், (எ-று).

மன்—ஒழியிசைக்கண்வந்தது. குணங்கள்—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு † முதலாயின. இதனையுந் தலைமகன்கூற்று; மேற்றலைமகள் கூற்று.

தெளி:—[ஒருவழித்தணந்து வந்த தலைமகன் நீர் தணந்த காலத்தில் எம்மை நினைந்து மறிவீரோவென்ற தோழிக்குச் சொல்லியது] (இ - ள்.) ஒள்ளமர்க்கண்ணாள்குணம் - ஒள்ளியவாய்ப் போரைச்செய்யுங் கண்களையுடையவளது குணங்களை, யான் மறப்பின் - யான் மறந்தேனாயின், உள்ளுவன் - நினைப்பேன், மறப்பறியேன் - (ஒருகாலத்தும்) மறத்தலையறியேன், (ஆகலால் நினைத்தலையு மறியேன்), (எ-று).

* ஒருவழித்தணத்தலாவது அலரடங்குமாறு சிலநாள் ஓரிடத்தில் தலைமகன் தலைமகளைப் பிரிந்துவசித்தல். அலராவது களவுப்புணர்ச்சியைப் பலரறிந்து பழித்துப்பேசுதல்.

† முதலாயின என்றமையின், மனைத்தக்கமாண்பு, தெய்வந்தொழாமை, தற்காத்தல், தற்கொண்டாற்பேணல், சொற்காத்தல், நிறை முதலியவற்றையுங்கொள்க.

மன் என்னுமிடைச்சொல் நினைத்தலையுமறியேனென்னும் ஒழியிசைப்பொருளில் வந்தது. குணங்கள் - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலாயின; இவ்வளவும் தலைமகன் கூற்று; பின்வருவது தலைமகள் கூற்று. கூற்று - வார்த்தை. ஒள்ளியவாய்-பிரகாசமுடையனவாய்.

(க - த.) தோழிக்குத் தலைமகன் யானிவளை மறந்தாலன்றோ நினைப்பேன்; ஆகலான் யானிவளை மறத்தலையுமறியேன் நினைத்தலையுமறியேன் என்றானென்பது.

5. If I could forget the maiden whose eyes gleam like warriors dart, I might remember thee (maid); but I never forget her charms.

---

சு கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்.

(ஒருவழித்தணப்பின்கட் டலைமகளைத் தோழி † இயற்பழிக்குமென்றஞ்சி அவள்கேட்பத் தன்னுள்ளே சொல்லியது.)

பரி:—(இ - ள்.) தாங்காணுமைபற்றிச் சேய்மைக்கட்போயினு ரென்று கருதுவார் கருதுக; எம்முடையகாதலர் எங்கண்ணகத்துநின் றும் போகார்; யாமறியாதிமைத்தேமாயின் ‡ அதனால் வருந்துவதுஞ் செய்யார்; ஆகலாற் காணப்படாநுண்ணியர், (எ - று).

இடைவிடாத நினைவின் முதிர்ச்சியான் காதலன்றோற்றம் எப்பொழுதும் முன்னே தோன்றலிற்'கண்ணுள்ளிற் போகார்' என்றும், இமைத்துழியும் ¶ அது நிற்றலான் 'இமைப்பிற்பருவரார்' என்றுங் கூறினாள்.

தெளி:—[ஒருவழித்தணத்தலில் தலைமகளைத் தோழி இயற்பழிப்பாளென்று அஞ்சி அவள்கேட்பத் தலைமகள் தன்னுள்ளே சொல்லியது.] (இ - ள்.) (தாம் காணுமைபற்றித் தூரதேயத்தின்கண் போயினரென்று நினைப்பவர் நினைக்கக்கடவர்) எங்காதலவர் - எம்முடைய காதலர், கண்ணுள்ளில் - (எமது) கண்ணிடத்தினின்றும், போகார்-, இமைப்பின் - (யாமறியாமல்) இமைத்தேமாயின், பருவரார் - (அதனால்) வருந்துவதுஞ் செய்யார், (ஆகலால்), நுண்ணியர் - (காணப்படாத) நுண்ணியர், (எ - று).

இடைவிடாத நினைவின் முதிர்ச்சியால் காதலனது தோற்றம் எப்போதும் முன்னே தோன்றலால் 'கண்ணுள்ளிற்போகார்' என்றும், இமைத்தபோதும் அது நிற்றலால் 'இமைப்பிற் பருவரார்' என்றும் சொல்லினாள்.

(க - து) தலைமகள் தனது தோழி கேட்குமாறு எங்காதலர் எங்கண்ணினின்றும் நீங்காதிருக்கின்றார்; யாமிமைத்தேமாயின்,

---

† இயற்பழிக்கும்-ஒழுக்கமில்லாதவனென்று பழித்துப் பேசுவாள்.
‡ அதனால் - இமைத்தலினால். ¶ அது - காதலனது தோற்றம்.

அதனால் வருந்துவதுஞ் செய்யார்; ஆகலாலவர் மிக நுண்ணிய வடிவினரென்று கூறினாள் என்பது.

6. My lover would not depart from my eyes ; I wink them not lest I should pain him ; he is so subtle.

ஏ. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

(இதுவுமது.)

பரி:—(இ - ள்.) காதலர் எப்பொழுது மெங்கண்ணினுள்ளாராகலாற் கண்ணினை யஞ்சனத்தா லெழுதுவதுஞ் செய்யேம், அந்துணைக் காலமும் அவர் மறைதலையறிந்து, (எ - று).

* இழிவுசிறப்பும்மை மாற்றப்பட்டது. † கரப்பாக்கென்பது வினைப்பெயர்; வருகின்ற வேபாக்கென்பது மது. யா ‡ னிடையீடின்றிக் காண்கின்றவரைப் பிரிந்தாரென்று கருதுமாறென்னை யென்பது குறிப்பெச்சம்.

தெளி:—[இதுவுமது.] (இ-ள்.) காதலவர் - தலைவர், (எப்பொழுதும்), கண்ணுள்ளாராக-(எமது) கண்ணினுள் இருக்கின்றாராகலால், கண்ணுமெழுதேம் - கண்ணினை (மையினால்) எழுதுவதுஞ் செய்யேம், கரப்பாக் கறிந்து-(அவ்வளவு காலமும் அவர்) மறைதலை அறிந்து, (எ - று).

கண்ணும் என்னும் இழிவு சிறப்பும்மை பிரித்துக் கூட்டப்பட்டது. கரப்பாக்கு என்பது தொழிற் பெயர்; பின் வருகின்ற வேபாக்கு என்பதும் தொழிற் பெயர். யான் இடைவிடாமற் காணுகின்ற தலைவரைப் பிரிந்தாரென்று (தோழி) நினைக்கும் விதம் என்னை யென்பது குறிப்பெச்சம்.

(க-து.) தலைமகள் எப்பொழுதுங் காதலர் எமதுகண்ணின்கணிருக்கின்றார் ; ஆகலால், அவர் மறைந்துபோவாரென்று கருதிக் கண்ணுக்கு மையிடுவதுஞ் செய்யேமென்றாள் என்பது.

7. As my lover (ever) abides in my eyes, I will not paint them; lest I should hide his form.

---

* கண்ணும் என்னும் இழிவு சிறப்பும்மை (எழுதமௌ) எழுது என்பதனோடு பிரித்துக் கூட்டப்பட்டது. எழுதும் என்பதன் பொருள் எழுதுவதும் என்பதாம்.

† கரப்பாக்கு என்பது பாக்குவிகுதிபெற்ற தொழிற்பெயர் ; வருகிற பாட்டில் வேபாக்கு என்றுள்ளதும் அது (பாக்குவிகுதி பெற்ற தொழிற்பெயர்).

‡ இடையீடின்றி-தடையில்லாமல்.

அ. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காதலர் எந்நெஞ்சினுள்ளாராகலான் உண்ணுங்கால் வெய்தாக உண்டலை யஞ்சாநின்றேம், அவர் * அதனான் வேவாது றலை யறிந்து, (எ - று).

*எப்பொழுதும் எந்நெஞ்சின்க ணிருக்கின்றவரைப் பிரிந்தா ரென்று கருதுமா றென்னை யென்பது குறிப்பெச்சம்.*

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) *காதலவர் - தலைவர், நெஞ்சத்தாராக - (எமது) நெஞ்சினுள் இருக்கின்றாராகலால், (உண்ணும்போது), வெய்துண்டல் - சூடுடையதாக உண்ணுதலை, அஞ்சுதும் - அஞ்சாநின்றேம், வேபாக் கறிந்து - (அவர் அதனால்) சூடுறுதலை அறிந்து, (எ - று).*

*எப்பொழுதும் எமது நெஞ்சிலிருக்கின்ற தலைவரைப் பிரிந்தாரென்று (தோழி) நினைக்கும் விதம் என்னையென்பது குறிப்பெச்சம்.*

(க - து.) *தலைமகள் எப்பொழுதுங் காதலர் எமது நெஞ்சின்க ணிருக்கின்றார்; ஆகலால், அவர் சூடுறுவாரென்றஞ்சி யுணவினைச சூடாக வுண்பதுஞ் செய்யேமென்று சொன்பது.*

8. As my lover abides in my heart, I am afraid of eating anything hot lest it would burn him.



௯. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னுமிவ் வூர்.

[† *வரைவிடைவைத்துப் பிரிவின்கட் டலைமகளாற்றுதற்பொருட்டுத*

* *அதனான்-வெய்தாக வுண்டலால்.*

† *வரைவிடைவைத்துப் பிரிதல் - கலியாணஞ் செய்துகொள்ளுதலை இடையில் வைத்து அது காரணமாகப் பொருள் சம்பாதிக்கப் பிரிதல். தஞ்சைவாணன் கோவையினுரையில் " வரைவிடைவைத்துப் பொருள் வயிற் பிரிதல்: அஃதாவது வரைவையிடையிலேவைத்து வரைதற்கு வேண்டும் பொருள்காரணமாகப் பிரிதல். தலைவன் வரைதற்குப் பொருள் காரணமாகப் பிரிந்தானெனின், பொருளிலனாயிற்று; ஆகவே, பொருவிறந்தா (ஒப்பில்லாதவ) னென்பதனோடு மாறுகொள்ளுமெனின், மாறுகொள்ளாது. பழங்கிடையாய்க் கிடக்குஞ் செம்பொருள் பலவுளவேனும் அதனை யெடுத்து நுகர்வோன் சிறியனாதலானும், ஆள்வினை (முயற்சி) யுடையனல்ல னெனப்படுதலானும், இவன் தன்னூக்கத்தால் (முயற்சியால்) ஈட்டிய (சம்பாதித்த) பொருளைப் பலவாற்றானும் நுகர்தல் (அனுபவித்தல்) உத்தம*

தோழி தலைமகனை யியற்பழித்தவழி அ* ளியற்பட மொழிந்தது.]

பரி:—(இ - ள்.) என்கண்ணிமைக்குமாயின் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலை யறிந்து இமையேன், அவ்வளவிற்கு அவரைத் துயிலா நோய் செய்தார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர், (எ - று).

தன் கருத்தறியாமை பற்றிப் புலந்து சொல்லுகின்றாளாகலின், தோழியை வேறுபடுத்து 'இவ்வூர்' என்றாள் ஒரு பொழுதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்கற்பாலையல்லை யென்பதாம்.

தெளி:—(வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிந்தவிடத்துத் தலைமகள்பொறுத்திருத்தற்பொருட்டுத் தோழிதலைமகனை இயற்பழித்த விடத்து அவள் இயற்படச் சொல்லியது.) (இ-ள்) இமைப்பின் - (என்கண்) இமைக்குமாயின், கரப்பாக்கறிவல் - (உள்ளிருக்கின்ற காதலர்) மறைதலை யறிந்து இமையேன், அனைத்திற்கு - அவ்வளவிற்கு, இவ்வூர் -, ஏதிலரென்னும் - (அவரைத் தூங்கா நோய் செய்தார்) அன்பிலரென்று சொல்லா நிற்கும்.

தலைமகள் தோழி தன்கருத்தறியாமைபற்றிக் கோபித்துச் சொல்லுகின்றாளாகலால், அவளை வேறுபடுத்து 'இவ்வூர்' என்றாள். தோழியே! நீ ஒருபோதும் பிரியாதத்லைவரைப பிரிந்தாரென்று பழித்தல் செய்யாதிருக்கக்கடவா யென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியைவெறுத்து என்கண்ணுள்ளிருக்கும் காதலர் மறைவாரென்று கருதி யான் இமைத்தலுஞ் செய்யேன்; அஃதறியாது இவ்வூர் அவரைப் பழித்துப் பேசுகின்றதென்று கூறினாள் என்பது.

9. I would not wink lest my lover would hide his form; for this reason the towns-people say he is unloving.

க0. உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காதலர் எந்நான்றும் என்னுள்ளத்துள்ளே யுவந்துறையா நிற்பர், அதனையறியாது அவரைப் பிரிந்துறையாநின்றார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர், (எ - று).

விலக்கணமென்றுகருதிப் பொருள்வயிற் பிரிந்தானெனன் றுணர்க" என்று கூறப்பட்டிருக்கின்றது.

* இயற்படமொழிதல் – சொற்பொருள் ஒரியல்புபடக் கூறுதல். "அடம்பமர் நெடுங்கொடி யுள்புதைந் தொளிப்ப, வெண்மணல் விரிக்குந் தண்ணந் துறைவன், கொடிய னாயினு மாக, அவனே தோழியென் னுயிர்கா வலனே" என்பதிங்குணர்தற்பாலதாம். (தொல்-பொருள் - 284 - வது பக்கம்).

'உவந்துறைவர்' என்றதனால் அன்புடைமைகூறினன். பிரியாமையும் அன்புமுடையாரை * இலரெனப் பழித்தற்பாலையல்லையென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) (காதலர்) என்றும் - எப்போதும், உள்ளத்துள் - (என்) உள்ளத்தினுள்ளே, உவந்து - மகிழ்ந்து, உறைவர் - வாசஞ்செய்யாநிற்பர், (அதனையறியாமல் அவரை), இவ்வூர் -, இகந்துறைவர் - பிரிந்துவசியாநின்றார், ஏதிலரென்னும் - அன்பிலரென்று சொல்லாநிற்கும், (எ - று).

'உவந்துறைவர்' என்றதனால் தலைமகனது அன்புடைமையைக் கூறினள். பிரியாமையும் அன்பும் உடையவரை இலரென்று தோழியே! நீ பழித்தல் செய்யாதிருக்கக் கடவா யென்பதாம்.

(க - து.) தலைமகள் இவ்வூர் காதலர் என்மனதின்கணெப்போது முவந்து வசித்தலை யறியாது அவரைப்பிரிந்துபோனரென்றும் அன்பில ரென்றும் சொல்லுதல் தகுதியாகா தென்றுளென்பது.

10. My lover ever lives in my heart rejoicing; but the towns-people say he is unloving and therefore dwells afar.



6 - ம். அதிகாரம்.

## நாணுத்துறவுரைத்தல்—*Abandonment of modesty.*

பரி:—அஃதாவது சேட்படுக்கப்பட்டு † ஆற்றாய தலைமகன் தோழிக்குத் தன் ‡ நாண்டுறவுரைத்தலும், ¶ அறத்தொடு நிற்பிக்க

---

* இலரென - பிரியாமையும் அன்புமில்லாதவரென்று.

† ஆற்றாய - தலைமகளைப் பிரிந்திருக்கச் சகியாதவனான.

‡ நாண் - சால்பு பண்பு முதலாய குணங்களாலுயர்ந்தோர் தமக்கு ஒவ்வாத கருமங்களில் நாணுதல்.

¶ அறதொடு நிற்பிக்கலுற்ற - களவுப்புணர்ச்சியை முறையே வெளிப்படுத்தி நிற்கத்தொடங்கிய, தஞ்சைவாணன் கோவையினுரையில் "அறத்தொடு நிற்றலென்பது களவை முறையே வெளிப்படுத்தி நிற்றல். முறையே வெளிப்படுத்தி நிற்றலாவது தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும், பாங்கி (பக்கத்திலிருப்பவள்) செவிலி (வளர்க்குந் தாய்)க்கறத்தொடு நிற்கும்; செவிலி நற்றாய் (பெற்றதாய்)க் கறத்தொடு நிற்கும்; நற்றாய் தந்தை தன்னையர் (தமையன்மார்)க்கறத்தொடு நிற்குமென்று கொள்க. அறத்தொடு நிற்றற்குப் பொருள் முறையேவெளிப்படுத்தி நிற்றலென்பது. இப்பொருள் எவ்விடத்திற்குமாகாது; இவ்விடத்திற்குமாத்திரமென்று கொள்க" என்று கூறப்பட்டிருக்கின்றது.

லுற்ற தலைமகள் அவட்குத் தன்னுண்டுறவுரைத்தலுமாம்.*இது காதன் மிக்குழி நிகழ்வதாகலின், காதற்சிறப் புரைத்தலின்பின், வைக்கப் பட்டது.

தெளி;—*அஃதாவது சேட்படுத்தப்பட்டுப் பொறாதவனாகிய தலைமகன் தோழிக்குத் தனது நாணமிழத்தலைச் சொல்லுதலும், அறத்தொடு நிற்பிக்கலுற்ற தலைமகள் அத்தோழிக்குத் தனது நாணமிழத்தலைச் சொல்லுதலுமாம். * இது காதல்மிக்கவிடத்து நிகழ்வதாகலால், காதற்சிறப் புரைத்தலின் பின் வைக்கப்பட்டது.*

க. காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி.

[*சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் சொல்லியது.*]

பரி:—(இ - ள்.) அரியராய மகளிரோடு காமத்தை யனுபவித்துப் பின் † னதுபெறாது துன்புற்ற வாடவர்க்குப் பண்டும் ஏமமாய்வருகின்ற ¶ மடலல்லது இனியெனக்கு வலியாவதில்லை, (எ - று).

*ஏமமாதல்-§ அத்துன்ப நீங்கும்வகை o அவ்வனுபவத்தினைக்கொடுத்தல். ⁝ வலி—ஆகுபெயர். பண்டுமாடவராயினார் இன்பமெய்தி வருகின்ற வாறு நிற்க, நின்னை ( ) யதற்குத்துணையென்று கருதிக் கொண்டேமுயன்ற யான் இதுபொழுது அல்லாமையை யறிந்தேனாகலான், இனி யானு | மவ்வாற்றான் || அதனை யெய்துவலென்பது கருத்து.*

தெளி:—[*சேட்படுத்தப்பட்டுப் பொறாதவனாகிய தலைமகன் சொல்லியது.*] (இ - ள்.) *காமமுழந்து - (அரியராகிய மகளிரோடு) காமத்தை யனுபவித்து, (பின் அதுபெறாமல்), வருந்தினார்க்கு - துன்பமடைந்த ஆடவர்க்கு, ஏமமடலல்லது - (முன்னும்) ஏமமாய்வருகின்ற மடன்மாவல்லாமல், (இனி யெனக்கு), வலியில்லை - வலியாவதில்லை, (எ - று).*

*ஏமமாதல் - அத்துன்பம்நீங்கும்வகை அவ்வனுபவத்தைக் கொடுத்தல். வலி-பண்டாகுபெயர். முன்னும் ஆடவராயினார் இன்பமடைந்து வருகின்ற வழியிருக்க, உன்னை அதற்குத் துணையென்று நினைத்து வீணாகமுயன்ற*

---

* *இது - நாணுத்துறவுரைத்தல்*

† *அதுபெறாது - அக்காமத்தை யனுபவித்தலைப் பெறாமல்.*

¶ *மடல் - பனைமடலாற் செய்த குதிரை.*

§ *அத்துன்பம் - காமத்தை யனுபவித்தலைப் பெறாமையாலுண்டாகிய துன்பம்.*

o *அவ்வனுபவத்தினை-அரியராயமகளிரோடு காமத்தை யனுபவித்தலை.*

⁝ *வலியென்னும் பண்புப்பெயர் அதனையுடையபொருளையுணர்த்துதலால், பண்பாகு பெயராம். ( ) அதற்கு - அவ்வின்பமடைதற்கு.*

| *அவ்வாற்றான் - முன்னும் ஆடவ(புருஷ) ராயினார் மடன்மாவேறி யின்பமடைந்து வருகின்ற வழியால்.* || *அதனை - அவ்வின்பத்தை.*

நான் இப்போது நீ துணையாகாமையை அறிந்தேனாகலால், இனியானும் அவ் வழியால் அதனை யடைவேனென்பது கருத்து. ஆடவர் - புருஷர்.

(க - து.) தோழியால் சேட்படுத்தப்பட்டு வருந்திய தலைமகன் இனி யான் தலைமகளை யடைதற்கு எனக்கு மடல்மா வேறுவ தல்லது வேறு வலியாவதில்லை யென்று கூறினன் என்பது.

1. To those who have experienced loves joy and suffer afflicted, there is no help so efficient as the palmyra horse



உ. நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து.

[நாணுடையருமக்கு அது முடியாதென மடல்விலக்கலுற்றாட்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) அவ்வருத்தத்தினைப் பொறாத வுடம்பு முயிரும் *அதற் கேமமாய மடன்மாவினை †யூரக் கருதாநின்றன, ○ அதனைவிலக்குவதாய நாணினையகற்றி, (எ - று).

‡ 'வருந்தினார்க்கு' என மேல்வந்தமையிற் செயப்படுபொருள் ஈண்டுக் கூறாராயினர். ¶ மடல்—ஆகுபெயர். § நீக்கிநிறுத்தென்பது ஒரு சொன்னீர்மைத்து. ‖ அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி ‡ முதலிய முன்னை நீங்கவும் நாணீங்காது நின்றது; அதுவு மிதுபொழுது நீங்கிற்

---

* அதற்கு-அவ்வருத்தத்தினை நீக்குவதற்கு.

† ஊர்தல் - ஏறிச் செலுத்துதல்.

○ அதனை - மடன்மாவேறுதலை.

‡ 'வருந்தினார்க்கு' என்று மேலுள்ள குறளில் வந்தமையின், அவ் வருத்தத்தினையென்னுஞ் செயப்படுபொருளை யிங்குச் சொல்லாதுவிட்டார்.

¶ மடல் (பனைமடல்) என்னுங் கருவியின்பெயர் அதன் காரியமாகிய குதிரையை யுணர்த்துதலால், கருவியாகுபெயராம்.

§ நீக்கிநிறுத்து என்பது (தொடர்மொழியாகாது) அகற்றி என்னும் பொருளைத்தந்து ஒருசொல்லின் தன்மையதாய் நின்றது.

‖ இறையனாரகப்பொருளி னிரண்டாவது சூத்திரவுரையில் "தலைமகற்கு அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்பன குணம். அறிவென்பது என்னோவெனின், 'எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு' என்றாராகலின், எப்பொருளாயினும் அப்பொருட்கணின்று அம்மெய்ம்மையை யுணர்வது அறிவு; நிறையென்பது என்னோவெனின், காப்பன காத்துக் கடிவனகடிந்து ஒழுகும் ஒழுக்கம்; ஓர்ப்பென்பது ஒருபொருளை ஆராய்ந்துணர்தலென்பது ; கடைப்பிடியென்பது கொண்டபொருள் மறவாமை" என்று கூறப்பட்டிருக்கின்றது.

‡ முதலிய என்றமையின் அன்புடைமை, இனியவைகூறல், நடுவுநிலைமை முதலியவற்றையுங் கொள்க.

றென்பான் 'உடம்பு முயிரும்' என்றான். * அவைதாந் தம்முணீங்காமற் பொருட்டு † மடலேறுமென்றது அவள் தன்னாற்றாமையறிந்து கடிதிற் குறைநேர்தனோக்கி.

தெளி:—(நாணமுடைய உமக்கு அம்மடன்மாவேறுதல் முடியாதென்று அதனை விலக்கலுற்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.) (இ-ள்.) நோனா - (அவ்வருத்தத்தினைப்) பொறாத, உடம்புமுயிரும் -, மடலேறும் - (அதற்கு ஏமமாகிய) மடன்மாவினை யூர்தினையாநின்றன, நாணினை - (அதனை விலக்குதலாகிய) நாணத்தை, நீக்கிநிறுத்து - ஒழித்து, (எ - று).

'வருந்தினார்க்கு' என்று முன்னேவந்தமையின், செயப்படுபொருளை இங்குச் சொல்லாராயினர். மடல்-கருவியாகுபெயா நீக்கி நிறுத்து என்பது ஒருசொல்லின்றன்மையது. அறிவு, நிறை ஓர்ப்பு, கடைப்பிடி முதலாயின முன்னே நீங்கவும் நாண்நீங்காது நின்றது; அந்நாணும் இப்பொழுது நீங்கிற்றென்பான் 'உடம்பு முயிரும்' என்றான். அவைதாம் தம்முள் நீங்காமைப்பொருட்டு மடலேறுமென்றது அவள் தன்னாற்றாமையை (சகிக்க முடியாமையை) யறிந்து விரைவில் உடன்படுதல் குறித்தாம்.

(க - து.) தலைமகன் வருத்தமிகுதியால், யான் நாணத்தைவிட்டு மடன்மாவேறுவனென்று கூறினான் என்பது.

2. Laying reserve aside, the body & atman that can endure no more will mount the palmyra horse.



* அவைதாம் - உடம்பும் உயிரும்.

† "மடலேறலாவது தலைவன் ஒவ்வாக்காமத்தால் பனங்கருக்காற் குதிரையும், பனந்தருவினுள்ளனவற்றால் வண்டில் முதலானவுஞ்செய்து அக்குதிரையின்மே லேறுவது. மடலேறுவான் திகம்பரனாய் உடலெங்கும் நீறு பூசிக் கிழி ஒவியர் கைப்படாது தானே தீட்டிக் கிழியின் தலைப்புறத்தில் தன் பேரைவரைந்து கைப்பிடித்து, ஊர்நடுவே நாற்சந்தியில ஆகார நித்திரையின்றி, அக்கிழிமேற் பார்வையுஞ் சிந்தையுமிருத்தி, வேட்கையத்தனாய் வேறுணர்வின்றி, ஆவூரினும் அழல்மேற் படினும் அறிதலின்றி மழை வெயில் காற்றான்மயங்காதிருப்புழி, அவ்வூரிலுள்ளார் பலருங் கூடி வந்து நீ மடலேறுதியோ? அவளைத்தருதும், சோதனை தருதியோ? என்றவழி இலயந்தானாயின், அரசனுக்கறிவித்து, அவனேயலால் அவன் இனைந்துனையத்தந்து மடலேறென்றவழி ஏறுமுறைமை:-வெண்பூளைப்பூ, எலும்பு, எருக்கமுகை இவைகளாற் கட்டியமாலை யணிந்துகொண்டு அம்மாவிலேற, அவ்வடத்தை வீதியிலீர்த்தலும் அவ்வுருளை யுருண்டோடும்பொழுது பனங்கருக்கு அறுத்தவிடமெல்லாம் இரத்தந் தோன்றாது வீரியந்தோன்றின், அப்போது அவளை யலங்கரித்துக்கொடுப்பது ; இரத்தங்கண்டுழி அவனைக் கொலைசெய்துவிடுவது. இவை புலவரால் நாட்டிய வழக்கென்

௩. நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல்.

[நாணையன்றி நல்லாண்மையுமுடைமையின் முடியாதென்றாட்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நாணும் மிக்கவாண்டகைமையும் யான் பண்டுடையேன்; * அவை காமத்தானீங்குதலான், அக்காமமிக்கா ரேறும் மடலினை யின்றுடையேன், (எ - று).

நாண் - இழிவாயினசெய்தற்கண் விலக்குவது. ஆண்மை - ஒன்றற்குந் தளராதுநிற்றல். † அவை பண்டுள்ளன; இன்றுள்ளது ‡ இதுவேயாகலிற் கடிதின் முடியுமென்பதாம்.

தெளி:—[நாணமேயன்றி நல்லாண்மையும் உடைமையால் மடலேறுதல் முடியாதென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.] (இ - ள்.) நாணொடு நல்லாண்மை - நாணத்தையும் மிக்க ஆண்தன்மையையும், (நான்), பண்டுடையேன் - முன்புடைத்தா யிருந்தேன், (அவை காமத்தால் நீங்குதல்), காமுற்றாரேறுமடல் - அக்காமமிக்கவரேறுமடலினை, இன்று - இப்போது, உடையேன் - உடையவனாயிருக்கின்றேன், (எ - று).

நாண் - இழிவாயவற்றைச் செய்யுமிடத்து விலக்குவது. ஆண்மை-ஒன்றற்குந் தளராது நிற்றல். அவை முன்னுள்ளன; இன்றுள்ளது இதுவேயாகலால் விரைவில் முடியுமென்பதாம்.

(க - து.) தலைமகன் தோழிக்கு யான் முன்பு நாணமும் நல்லாண்மையு முடையவனாயிருந்தேன்; அவை காமத்தால் நீங்கின; இப்போது மடன்மாவேறுதலை யுடையவனாயிருக்கின்றேனென்றான் என்பது.

3. I once possessed modesty and manliness; now I own the palmyra horse ridden by the lustful.



௪. காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

றுணர்க" என்று தஞ்சைவாணன் கோவையினுரையில் கூறப்பட்டிருக்கிறது. "கழிகின்ற வென்னையு நின்றநின் கார்மயி றன்னையும்யான், கிழியொன்ற நாடி யெழுதிக்கைக் கொண்டென் பிறவிகெட்டின், தழிகின்ற தக்கிய தாளம்பலவன் கயிலையந்தேன், பொழிகின்ற சாரனுஞ் சீரூர்த் தெருவிடைப் போதுவனே" என்று திருக்கோவையார் கூறுவது மிங்குணர்தற்பாலதாம்.

* அவை - நாணும் நல்லாண்மையும். † அவை-நாணும் நல்லாண்மையும். ‡ இதுவே - மடலேறுதலே.

[நாணுநல்லாண்மையுங் காமவெள்ளத்திற்குப் புணையாகலின் * அதனால் † அவை நீங்குவனவல்லவே யென்றாட்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்) யான் ‡ றன்னைக் கடத்தற்குக் கொண்டநாணும் நல்லாண்மையுமாகிய புணைகளை யென்னிற்பிரித்துக் காமமாகிய கடிய புனல் கொண்டுபோகாநின்றது, (எ - று).

¶ அது செய்யமாட்டாத வேனைப்புனலினீக்குதற்குக் 'கடும்புனல்' என்றான் $ இப்புனற்கு ○ அவை புணையாகா; | அதனான் ‖ அவை நீங்கு மென்பதாம்.

தெளி:—(நாணமும் நல்லாண்மையும் காமவெள்ளத்திற்குப் புணையாத லால் அதனால் அவை நீங்குவனவல்லவே யென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.) (இ - ள்.) (யான் தன்னைக் கடத்தற்குக்கொண்ட) நாணொடு நல்லாண்மை யென்னும் புணை - நாணமும் நல்லாண்மையும் ஆகிய புணைகளை, (என்னிற்பிரித்து). காமக்கடும்புனல் - காமமாகிய கடிய புனல், உய்க்கும் - கொண்டுபோகா நின்றது, (எ - று).

அது செய்யமாட்டாத மற்றைப் புனலி னீக்குதற்குக் 'கடும்புனல்' என்றான். இப்புனற்கு அவை புணையாகா; அதனால் அவை நீங்குமென்பதாம். புனல் - நீர்; புணை - தோணி.

(க - து.) தலைமகன் யான் காமவெள்ளத்தைக் கடத்தற்குக் கொண்ட நாணமும் நல்லாண்மையுமாகிய புணைகளை அவ்வெள்ளம் என்னிற் பிரித்துக்கொண்டு போகாநின்றதென்றான் என்பது.

4. The raft of modesty and manliness is swept away by love's rushing tide.



ரு. தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

(இவ்வாற்றாமையும் மடலும் நமக்கெவ்வாறு வந்தனவென்றாட்குச் சொல்லியது.)

பரி:—(இ - ள்.) மாலைப்பொழுதின்க ணனுபவிக்குந் துயரினையும் அதற்கு மருந்தாய மடலினையும் முன்னறியேன், இதுபொழுது எனக்கு மாலைபோலத் தொடர்ந்த சிறுவளையினையுடையாடந்தாள், (எ - று).

---

* அதனால் - காமவெள்ளத்தினால்.

† அவை - நாணும் நல்லாண்மையும்.

‡ தன்னை - காமமாகிய கடிய (வேகமுள்ள) புனலை.

¶ அது - நாணும் நல்லாண்மையுமாகிய புணைகளை என்னிற்பிரித்தல்.

$ இப்புனற்கு காமக்கடும்புனற்கு ○ அவை-நாணும் நல்லாண்மையும்.

| அதனான் - காமக்கடும்புனலால். ‖ அவை-நாணும் நல்லாண்மையும்.

* காமம் ஏனைப்பொழுதுகளினுமுளதேனும் மாலைக்கண் மலர்தலுடைமையின் 'மாலை யுழக்குந் துயர்' என்றும், மடலும் † அதுபற்றி வந்ததாகலின் ‡ மடறந்தாள் என்றும், அவடான் நீகூறியதே கூறும்இளமையளென்பது தோன்றத் 'தொடலைக்குறுந் தொடி' என்றுங் கூறினான். ¶ அப்பெயர் உவமைத்தொகைப்புறத்துப் பிறந்தவன்மொழித்தொகை. $ இவை யவடந்தனவாகலின், நின்னானீங்குமென்பது கருத்து.

தெளி:—(இப்பொறுக்க மாட்டாமையும் மடலும் உமக்கு எவ்வாறு வந்தன வென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.) (இ - ள்.) மாலை யுழக்குந் துயர் - மாலைக்காலத்தில் அநுபவிக்குந் துன்பத்தையும், மடலொடு - (அதற்கு மருந்தாகிய) மடன்மாவையும், (முன் அறியேன், இப்பொழுது எனக்கு), தொடலைக் குறுந்தொடி - மாலைபோலத் தொடர்ந்த சிறிய வளையலையுடையவள், தந்தாள் - கொடுத்தாள், (எ - று).

காமம் மற்றைப்பொழுதுகளிலும் உளதாயினும் மாலைப்பொழுதில் மலர்தலுடைமையால் 'மாலையுழக்குந் துயர்' என்றும், மடலும் அதுபற்றி வந்ததாகலால் மடல் தந்தாள் என்றும், அவள்தான் நீ சொல்லியதே சொல்லும் இளமையளென்பது தோன்றத் 'தொடலைக் குறுந்தொடி' என்றும் சொல்லினான். தொடலைக்குறுந்தொடி யென்னும்பெயர் உவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இவை அவள் தந்தனவாகலால், உன்னால் நீங்குமென்பது கருத்து.

(க - து.) தலைமகன் மாலைக்காலத்தி லனுபவிக்குந் துன்பத்தினையும் அதனை நீக்குவதற்கு மருந்தாகிய மடன்மாவையும் எனக்குத் தொடலைக் குறுந்தொடி தந்தாளென்றான் என்பது.

5 The maid that wears the small garland - like anklets has given me the palmyra horse and the pangs of eventide.



* "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" என்றுங்குற ளிங்குணர்தற்பாலதாம்.

† அதுபற்றி - காமம்பற்றி.

‡ அவ்விழிவும் (மடலேறும் இழிவும்) அவளாற்றரப்பட்டது என்றும் பாடமுண்டு.

¶ தொடலைக் குறுந்தொடி யென்னும் பெயர் மாலைபோலத் தொடர்ந்த சிறுவளையினையுடையாள் என்று விரிந்தமையின், 'அப்பெயர் உவமைத் தொகைப்புறத்துப்பிறந்த வன்மொழித்தொகை' என்று கூறப்பட்டது. இது,போல என்னுமுவமை யுருபும், உடையாள் என்னும் அல்லாத மொழியும் தொக்கு நின்றமையின், உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாயிற்று. அன்மொழித்தொகை என்பதன்பொருள் அல்லாத மொழி தொக்கு நிற்பதென்பது. "ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி" என்பது நன்னூல். $ இவை-மாலையுழக்குந் துயரும் மடலும்.

சு. மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் * மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

[† மடலூரும்பொழுது இற்றைக்குங் கழிந்ததென்றாட்குச்
சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நின்பேதைகாரணமாக என்கண்கள் ஒருகாலுந் துயிறலைப்பொருந்தா, அதனால் எல்லாருந் துயிலு மிடையாமத்தும் யானிருந்து மடலூர்தலையே கருதாநிற்பேன், (எ - று).

‡ பேதையென்றது பருவம் பற்றியன்று, ¶ மடமைபற்றி. இனிக் குறை முடிப்பது நாளையென வேண்டா வென்பதாம்.

தெளி:—(மடல்மாவேறும் பொழுது இன்றைக்கும் கழிந்ததென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.) (இ - ள்.) பேதைக்கு-(உன்)பேதை காரணமாக, என்கண் - எனது கண்கள், படலொல்லா - (ஒருபோதும்) தூங்குதலைப் பொருந்தா, (அதனால்), யாமத்தும் - (எல்லாரும் தூங்குகிற) பாதியிரவிலும், மன்ற - நிச்சயமாக, மடலூர்தல் - (யானிருந்து) மடல்மா வேறுதலையே, உள்ளுவேன் - நினையாநிற்பேன், (எ - று).

பேதை யென்றது பருவம் (வயது) பற்றியன்று, மடமைபற்றியாம். இனிமடல்மாவேறுங் குறையை முடிப்பதுநாளையெனல் வேண்டா மென்பதாம்.

(க - து.) தலைமகன் தோழியே! உன்பேதை காரணமாகப் பாதியிரவிலும் மடல்மா வேறுதலைப் பற்றியே யான் கருதுகின்றே னென்றான் என்பது.

6. My eyes know no repose on account of your simple maid; even at midnight will I think of mounting the palmyra horse.



எ. கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

[o பேதைக்கென்கண்படலொல்லா வென்பதுபற்றி அறிவிலராய மகளிரினும் அஃதுடையராய வாடவரன்றே ஆற்றற்பால ரென்றாட்குச் சொல்லியது.]

---

* மன்றவென்பது துணிவுப் பொருளில் வந்தது. "மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்" என்பது தொல்காப்பியம்.

† மடலூரும் பொழுதை இற்றைக் கொழிந்ததூறென்றாட்குச் சொல்லியது என்றும் பாடமுண்டு.

‡ பேதை - ஐந்து முதல் எட்டுவயதுள்ள பெண். "பேதைக் கியாண்டே ஐந்துமுத லெட்டே" என்பது பன்னிருபாட்டியல்.

¶ மடமை - அறியாமை.

o பேதைக்கென்கண்படலொல்லா-நின்பேதை காரணமாக என்கண்கள் ஒருகாலும் துயிறலைப் பொருந்தா.

பரி:—(இ - ள்.) கடல்போலக் கரையற்ற காமநோயினை யனுப வித்தும் *மடலூர்தலைச் செய்யாது ஆற்றியிருக்கும் பெண்பிறப்புப் போல மிக்க தகுதியினையுடைய பிறப்பு உலகத்திலில்லை; (எ - று).

† பிறப்பு விசேடத்தால் ‡ அவ்வடக்கம் எனக்கில்லையாகா நின்றது; நீயஃதறிகின்றிலை யென்பதாம். இத்துணையுந் தலைமகன் கூற்று; மேற் றலை மகள் கூற்று.

தெளி:— ['படலொல்லா பேதைக்கென் கண்' என்பது பற்றி அறிவில்லாதவராய மகளிரினும் அவ்வறிவுடையவராய ஆடவரன்றே பொறுத்தற்குரியவ ரென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.] (இ - ள்.) கடலன்ன காமமுழந்தும் - கடல்போலக் கரையற்ற காமநோயை அனுபவித்தும், மடலேறா - மடல்மாவேறுதலைச் செய்யாமல், (பொறுத்தி ருக்கும்), பெண்ணின் - பெண் (பிறப்புப்) போல, பெருந்தக்கது - மிக்க தகுதியினை யுடைய பிறப்பு, இல் - (உலகத்தில்)இல்லை, (எ - று).

பிறப்பு விசேடத்தால் அவ்வடக்கம் எனக்கு இல்லையாகா நின்றது; நீ அவ்வடக்கத்தினை யறிகின்றிலை யென்பதாம். இவ்வளவுந் தலைமகன் கூற்று; இனிவருவது தலைமகள் கூற்று. கூற்று-சொல்.

(க - து.) தலைமகன் கடல்போலக் கரையற்ற காமநோயினை யனுபவித்தும் மடல்மாவேறாது பொறுத்திருக்கும் பெண்பிறப்பே தகுதியினையுடைய பிறப்பாமென்றான் என்பது.

7. There is nought of greater worth than woman's enduring nature that would not ride the palmyra horse though plunged in a sea of love.



அ. நிறையரியர் மன்னளிய யென்னாது காம
மறையிறந்து மன்று படும்.

---

* மடலூர்வேனென்று கருதுதலும் சொல்லுதலும் மடலூர்தலும் ஆடவர்க்குரியவென்றும், மடலூர்வேனென்று கருதுதலும்' சொல்லுதலும் மகளிர்க்குரிய வென்று மிங்குணர்தற்பாலவாம். "நினைத்துருகு மேங்கும் விழி நீரினுற் கொங்கை, நனைக்குமட லூர்ந்திடவு நாடும்" என்றும், "யாமட லூர்ந்தெம் மாழியங்கைப் பிரானுடைத், தூமடற் றண்ணந்துழாய் மலர்கொண்டு சூடுவோம்" என்றும் வருவன முறையேமகளிர் மடலூர்தல் பற்றிக்கருதுதற்கும்,சொல்லுதற்குமுதாரணங்களாம். "எத்திணை மருங்கினு மகடூஉ மடன்மேற், பொற்புடை நெறிமை யின்மை யான" என்று தொல் காப்பியங் கூறுகின்றது.

† பிறப்பு விசேடத்தால் - ஆணைப்பிறந்திருத்தலால்.

‡ அவ்வடக்கம் . மடல்மாவேறுதலைச் செய்யாது பொறுத்திருக்கும் அடக்கம்.

[* காப்புச்சிறைமிக்குக் காமம்பெருகியவழிச் சொல்லியது.]

பரி:—(இ - ள்) இவர் நிறையால் நாமீதூர்தற் கரியரென்றஞ்சுதல் செய்யாது மிகவுமளிக்கத் தக்காரென் றிரங்குதல் செய்யாது மகளிர்காமமும் அவர் மறைத்தலைக் கடந்து மன்றின்கண்ணே வெளிப்படுவதாயிருந்தது, (எ - று).

என்றது என்பது முன்னுங்கூட்டி மகளிரென்பது வருவிக்கப்பட்டது. † எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. ‡ மன்றென்பது தந்தை தன்னையரை நோக்கி. உலகத்துப்பெண்பாலார்காமத்தியல்புகூறுவாள்போன்று, தன்காமம் பெருகியவாறும் இனி யறத்தொடு நிற்றல் வேண்டுமென்பதுங் குறிப்பாற் கூறியவாறாயிற்று.

தெளி:—[காப்புச்சிறை அதிகரித்துக் காமம்பெருகியபோது தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) நிறையரியர் (என்றது) -(இவர்) நிறையால் (நாம் மேற்கொள்ளுவதற்கு) அரியரென்று அஞ்சுதல் செய்யாமலும், மன்னளிய ரென்றது-மிகவும் அளிக்கத்தக்கவரென்று இரங்குதல் செய்யாமலும்,காமம்-(மகளிர்) காமமும், மறையிறந்து - (அவர்) மறைத்தலைக் கடந்து, மன்று-சபையினிடத்தே, படும் - வெளிப்படுவதா யிருந்தது, (எ - று).

என்றது என்பது நிறையரியரென்பதனுடனும் கூட்டி மகளிரென்பது வருவிக்கப்பட்டது. காமமுமென்ற இறந்தது தழுவிய எச்ச வும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. மன்றென்பது தந்தை தமையன்மார்களை நோக்கியாம். தலைமகள் உலகத்துப் பெண்களது காமத்தியல்பு சொல்லுவாள்போன்று, தன்காமம் பெருகிய விதமும் இனி அறத்தொடு நிற்றல் வேண்டுமென்பதும் குறிப்பாற் சொல்லியவா றாயிற்று.

(க - து.) தலைமகள் தன்காமம் பெருகிய விதத்தை, மகளிரது காமமும் இவர் நிறையரியர், மன்னளிய ரென்று கருதாது அவர் மறைத்தலைக் கடந்து மன்றின்கண்ணே வெளிப்படுவதா யிருந்ததெனப் படர்க்கை வாயிலாகக் கூறினள் என்பது.

8. Even the love of women rends the veil of secrecy and courts publicity, forgetting that they are too virtuous and liberal to be overcome by it.



---

*. காப்புச்சிறை - காவலாகிய சிறை தானினைத்தவாறொழுகுதலின் றிப் பிறர் நினைத்தவாறே யொழுகும்படி காத்தல் சிறையெனப்படும்.

† தொக்குநின்றகாமமும் என்றவும்மை நாணுத்துறவே யன்றி யென்னும் பொருளைத் தந்துநின்றமையால், இறந்ததுதழீஇய வெச்சவும்மையாயிற்று.

‡ மன்றென்பது இங்குத் தந்தை தமையன்மார் கூடிய கூட்டமாம்.

௯. அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) யான் முன்னடங்கி நிற்றலான் எல்லாரு மென்னை யறிதலிலர்,இனியவ்வாறு நில்லாதியானே வெளிப்பட்டறிவிப்பலென்று கருதி என்காமம் இவ்வூர்மறுகின்கண்ணே மயங்கிச் சுழலாநின்றது.

*மயங்குதல் - * அம்பலாதல் ; மறுகுதல் - அலராதல். அம்பலுமலரு மாயிற்று; இனியறத்தொடுநிற்றல் வேண்டுமென்பதாம். † அறிவிலா ரென்பதூஉம் பாடம்.*

தெளி:—[இதுவுமது.] (இ - ள்) (யான் முன் அடங்கி நிற்றலால்) எல்லாரும் - யாவரும், அறிகிலாரென்று-(என்னை) அறிதலிலர் (இனி அவ்வாறு அடங்கி நில்லாமல் யானேவெளிப்பட்டு அறிவிப்பேன்) என்று நினைத்து, என் காமம் - என்னுடைய காமம், மறுகில் - (இவ்வூர்)வீதியிலே, மருண்டு - மயங்கி, மறுகும்-சுழலாநின்றது, (எ - று)

*மயங்குதல் - அம்பலாதல் ; மறுகுதல்- அலராதல். என் காமம் அம்பலும் அலருமாயிற்று; இனி அறத்தொடு நிற்றல் வேண்டுமென்புதாம்.*

(க - து.) தலைமகள் என்காமம் அளவுகடந்ததாயிற் றென்றாள் என்பது.

9. My love, feeling no one knows it, roves in public ways perturbed.



௧0. யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

---

* அம்பல் - சிலரறிந்து தம்முள் இரகசியமாய்ப் பேசிக்கொள்ளுதல்; அலர்-பலரறிந்து வெளிப்படையாகச் சொல்லுதல். "அம்பலு மலருங் களவு" என்னும் இறையனார் அகப்பொருளின் சூத்திரவுரையில் 'அம்ப லென்பது சொல்நிகழாதே முகிழ்முகிழ்த்துச் சொல்வதாயிற்று ; இன்னதின் கண்ணது என்பது அயலறியலாகாதென்பது. அலரென்பது இன்னானோடு இன்னாளிடை இதுபோலும்பட்டதென விளங்கச் சொல்லி நிற்பது. அம்பலென்பது பெரும்போதாய்ச் சிறிதுநிற்க அலருமென நிற்பது; அல ரென்பது அப்பெரும்போது தாதும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தாற் போல நிற்கும் நிலைமையதென வேற்றுமை சொல்லப்பட்டதாம்' என்று கூறப்பட்டிருப்ப நின்குணர்தற்பாலதாம்.

† அறிகிலார் என்பதற்குப் பிரதியாக அறிவிலார் என்றும் பாடமுண்டு.

[ | செவிலிக்கறத்தொடு நின்றுவைத்து யானிற்குமாறென்னை யென்று நகையாடிய தோழியோடு புலந்து தன்னுள்ளே சொல்லியது.]

பரி:—(இ- ள்.) யாங் கேட்குமாறுமன்றிக் கண்ணுற் * காணுமாறு எம்மை யறிவிலார் நகாநின்றார், அவராங்ஙனஞ் செய்கின்றது யாமுற்ற நோய்கள் தாமுறாமையான், (எ - று).

'கண்ணின்' என்றது † முன்கண்டறியாமை யுணாநின்றது. ‡ அறத்தொடுநின்றமை யறியாது வரைவுமாட்சிமைப் படுகின்றிலளெனப் புலக்கின்றாளாகலின், ஏதிலாளாக்கிக் கூறினாள். ¶ இது நகாநின்று சேட்படுக்குந் தோழிக்குத் தலைமகன் கூறிய தாங்கால், அதிகாரத்திற் கேலாமை யறிக.

தெளி:—[செவிலிக்கு அறத்தொடு நின்றுவைத்து யான் நிற்கும்விதம் என்னென்றுகூறி நகைசெய்த தோழியோடு பிணங்கித் தலைமகள் தன்னுள்ளே சொல்லியது.] (இ - ள்.) யாம்—,கண்ணிற்காண - (கேட்குமாறு மன்றிக்) கண்ணுற்காணுமாறு, (எம்மை), அறிவில்லார் நகுப - அறிவில்லாதவர் சிரிக்கின்றார்,(அவர் அவ்வாறு செய்கின்றது), யாம்பட்ட - யாம் அடைந்த நோய்களை, தாம்படாவாறு - தாம் அடையாமையால், (எ - று).

'கண்ணின்' என்றது முன் கண்டறியாமை யுணாநின்றது - (தோழி செவிலிக்கு) அறத்தொடு நின்றமையை யறியாமல் மணஞ்செயுமாட்சிமையிற் பொருந்துகின்றில ளென்று பிணங்குகின்றாளாகலால் 'யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்' என்று (தோழியை) அயல ளாக்கிச் சொல்லினாள்.

(க - து.) தலைமகள் தோழியின் கருத்தறியாது அவளை வெறுத்துத் தன்னுள்ளே யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லாரென்று கூறினளென்பது.

---

| செவிலி – தலைமகளை வளர்த்ததாய்.

* காணுமாறும் என்றும் பாடமுண்டு.

† முன் கண்டறியாமை - முன் தோழிதன்னெதிரே நின்று சிரிப்பதைப்பார்த்தறியாமை.

‡ தலைமகள், தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றமையை (களவொழுக்கத்தை வெளிப்படுத்திநின்றமையை) யறியாமல், வரைவுமாட்சிமைப்படுகின்றிலளென்று பிணங்குகின்றாளாகலால், அவளை அயலாளாக்கி, 'யாங் கண்ணிற் காண நகுப வறிவில்லார்' என்று கூறினாள். வரைவுமாட்சிமைப் படுதலாவது தோழி பூத்தருபுணர்ச்சி புனல்தருபுணர்ச்சி, களிறுதரு புணர்ச்சிகளை யறிவித்து, தலைமகனுக்கும் தலைமகளுக்கும் விவாகஞ் செய்விக்கப் பெருமுயற்சி செய்தலாம். பூத்தருபுணர்ச்சி முதலியவற்றி னியல்பைத் தஞ்சைவாணன் கோவை 300, 301, 302-வது செய்யுள்களிற் காண்க.

¶ இக்குறள் சிரியாநின்று சேட்படுத்துகின்ற தோழிக்குத் தலைமகன் கூறிய தாமிடத்து, நாணுத்துறவுரைத்தல் என்னுமிவ் வதிகாரத்திற்குப் பொருந்தாமையை யறிந்துகொள்க.

10 Before our eyes the foolish laugh at us, for they have not endured the pangs we suffer from.



## 7 - ம் அதிகாரம்.

## அலரறிவுறுத்தல்—Talk about Rumour.

பரி:—அஃதாவது களவொழுக்கம் வேண்டிய தலைமகன் பிறர் கூறுகின்ற வலர் தனக்காகின்றவாற்றைத் தோழிக் கறிவுறுத்தலும், வரைவாக உடன்போக் காக ஒன்றுவேண்டிய தலைமகளுந் தோழியும் அவ்வலரை யவன்றனக் கறிவுறுத்தலுமாம். † இது நாணுத்துறந்தவழி நிகழ்வதாகலான், நாணுத்துறவுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது களவொழுக்கத்தை வேண்டிய தலைமகன் பிறர் சொல்லுகின்ற அலர் தனக்காகின்ற விதத்தைத் தோழிக்கு அறிவித்தலும், மணமாவது உடன்போக்காவது ஒன்று வேண்டிய தலைமகளும் தோழியும் அவ்வலரை அவனுக்கு அறிவித்தலுமாம். இது நாணுத்துறந்தவிடத்து நிகழ்வதாகலால், நாணுத்துறவுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

க. அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

[‡ அல்லகுறிப்பட்ட பிற்றைஞான்று வந்த தலைமகனைத் தோழி அலர்கூறி வரைவுகடாயவழி அவன் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) ‖ மடந்தையோ டெம்மிடைநட்பு' ஊரின்க ணலரா யெழுதலான் அவளைப்பெறாது வருந்துமென் னரியவுயிர் பெற்றது போன்று நிலைபெறும், அந்நிலைபேற்றைத் தெய்வத்தால் யாமேயறி வதல்லது கூறுகின்ற பலரு மறியார், (எ - று).

அல்லகுறிப்பட்டுத் தலைமகளை யெய்தப் பெறாத வருத்த மெல்லாந் தோன்ற :'ஆருயிர்' என்றும், அம்மணமரியாளை எளியளாக்கியெடுக்கின்ற

† இது - அலரறிவுறுத்தல்.

‡ அல்லகுறி-குறியல்லாத குறி ; குறி - அடையாளம்.

இல் முன் என்பது முன்றில் என்றாயதுபோலக் குறியல்ல என்பது அல்லகுறியென்றாயிற்று. அல்லகுறியாவது தலைமகனால் உண்டாக்கப் படுவனவாகிய புள்ளெழுப்பல், இளநீர்வீழ்த்தல், நீரில் கல்லெறிதல் முதலாயின மற்றொன்றனால் உண்டாதல். இதன்விரிவை "அல்லகுறிப் படுதலும்" என்னும் இறையனாரகப் பொருளின் சூத்திரவுரையிற் கண்டுகொள்க.

‖ காதற்சிறப்புரைத்தல் - 2.

: அரியவுயிர் என்றும் பாடமுண்டு.

மையின், * அலை † தவ்வாருயிர்க்குப் பற்றுக் கோடாகாநின்ற தென்பான் 'அலரெழ வாருயிர் நிற்கும்'என்றும், ‡ பற்றுக்கோடாதலை ¶ அவ்வூரா ரறியிற் றூற்று தொழிவர்; ஒழியவே,ஆருயிர்போமாகலான் அவரறியாதொழிகின்றது || 'பாக்கியத்தால்'என்றுங் கூறினான். முற்றும்மை விகாரத் தாற்றொக்கது.

தெளி:—[இரவுக்குறி தவறிய மறுநாள் வந்த தலைமகனை நோக்கித் தோழி அலர்கூறி மணம் விரைவிய விடத்து, அவளுக்கு அவன் சொல்லியது.] (இ - ள்.) (இம்மடந்தையோடு எம்மிடத்துளவாகிய நட்புக்கள்) அலரெழ-(ஊரில்) அலராயெழுதலால், ஆருயிர்-(அவளைப்பெறாது வருந்துகிற என்) அரியவுயிரானது, நிற்கும் - (அவளைப் பெற்றதுபோல) நிலை பெறும், அதனை - அந்நிலை பேற்றை, பாக்கியத்தால் - நல்லூழால், (யானே அறிவதல்லது), பலர் - (தூற்றுகின்ற) பலரும், அறியார் -, (எ - று).

இரவுக்குறிதவறித் தலைமகளை அடையப்பெறாத வருத்தமெல்லாம் தோன்ற 'ஆருயிர்' என்றும், அவ்வாறு அரியவளை எளியவளாக்கி எடுக்கின்றமையால், அலைது அவ்வாருயிர்க்குப் பற்றுக்கோடாக நிற்கின்ற தென்பான் 'அலரெழ வாருயிர் நிற்கும்' என்றும், பற்றுக்கோடாதலை அவ்வூரார் அறிந்தால் தூற்று தொழிவர்; ஒழியவே, ஆருயிர்போமாகலால் அவரறியாதிருக்கின்றது 'பாக்கியத்தால்' என்றும் சொல்லினான். பலருமென்னும் முற்றும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது.

(க - து.) தோழியைநோக்கித் தலைமகன் அலர்காரணமாக என்னுயிர் நிலைபெற்றி நக்கின்றது; அதனைத் தூற்றுகின்றவரறியாதிருக்கின்றனரென்றான் என்பது.

1.. My precious life stands fast by the rise of rumour, and to my good fortune, many know this not.



உ. மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்.

[இதுவுமது]

பரி;—(இ - ள்.) மலர்போலுங் கண்ணையுடையாளது எய்தற்கருமை யறியாது இவ்வூர் அவளை யெளியளாக்கி அவளோ டலர்கூறலை எமக்குபகரித்தது, (எ - று).

* அலைது - அடைதற்கரியவளை யெளியவளாக்கி ஊராரெடுத்துக்கூறுதல். † அவ்வாருயிர்க்கு - வருந்துகின்ற எனதரியவுயிர்க்கு.

‡ பற்றுக்கோடாதலை - ஆதாரமாகவிருத்தலை.

¶ அவ்வேதிலா ரறியினென்றும் பாடமுண்டு.

|| தெய்வத்தாலென்றும் பாடமுண்டு.

அருமை - * அல்ல குறிப்பாட்டானும் † இடையீடுகளானும் ஆயது. ‡ 'ஈந்தது' என்றான்; தனக்குப் பற்றுக்கோடாகலின். அலர் கூறுவாரை அவர் செய்த வுதவிபற்றி 'இவ்வூர்' என்றான்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) மலரன்ன கண்ணாள் - குவளை மலர் போலுங் கண்களையுடையவளது, அருமை-(அடைதற்கு) அருமையை, அறியாது-அறியாமல், இவ்வூர்—, (அவளை எளியவளாக்கி), அலர்- (அவளோடு) அலர் கூறலை, எமக்கு—, ஈந்தது-உபகரித்தது, (எ - று).

அருமை - இரவுக்குறிதவறுதலாலும் இடையீடுகளாலும் ஆயது. அலர்கூறல் தனக்குப்பற்றுக் கோடாகலால் 'ஈந்தது' என்றான். அலர்கூறுவாரை அவர்செய்த உதவிபற்றி 'இவ்வூர்' என்றான்.

(க — து.) தலைமகன் இவ்வூரார் கூறும் அலர் எனக்குபகாரஞ் செய்வதா யிருக்கின்றதென்றா னென்பது.

2. Not knowing the rareness of her with flower-like eyes, this village has got up a rumour that makes her mine.



௩. உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) எங்கட்குக் கூட்டமுண்மைஇவ்வூரறிதலான் விளைந்தவலர் எனக்குறுவ தொன்றன்றே, † அதுகேட்ட வென்மனம் அக்கூட்டத்தைப் பெறாதிருந்தே பெற்றதுபோலு நீர்மையை யுடைத்தாகலான், (எ - று).

பெற்றன்னநீர்மை - பெற்றவழியுளதா மின்பம்போலு மின்பமுடைமை. நீர்த்தென்பதற்கேற்ற மனமென்னும் வினைமுதல்வருவிக்கப்பட்டது.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) ஊரறிந்தகௌவை - (எங்களுக்குப் புணர்ச்சி உண்டாயிருத்தலை) இவ்வூர் அறிதலால் விளைந்த அலரானது, உறாஅதோ - (எனக்கு) உறுவதொன்றன்றோ, (அதுகேட்ட என் மனம்), அதனைப்பெறாஅது - அப்புணர்ச்சியைப் பெறாதிருந்தே, பெற்றன்ன நீர்த்து - பெற்றாற் போலும் நீர்மையை யுடையது, (ஆகலால்), (எ - று).

பெற்றன்னநீர்மை - (புணர்ச்சியைப்) பெற்றவிடத்துண்டாகும் இன்பம்போலு மின்பமுடைமை. நீர்த்தென்னும் பயனிலைக்கு ஏற்ற மனம் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. மனம் நீர்த்து என்று கொள்க.

* "அல்லகுறி வருந்தொழிற் கருமை யென்றாங், கெல்விக்குறியிடையீ டிருவகைத் தாகும்' என்று அகப்பொருள் விளக்கங் கூறுகின்றது

† இடையீடுகள் - தடைகள்.

‡ அலர் கூறல் (பலரறிந்து தூற்றுதல்) தலைமகளைத் தானடைதற்குப் பற்றுக்கோடாகவிருத்தலால், தலைமகன் (இவ்வூர் அலரெமக்கு) 'ஈந்தது' என்று கூறினனென்க.

(க - து.) தலைமகன் இவ்வூரினுண்டாகிய அலரைக் கேட்ட என்மனம் தலைமகளை யடைந்தாற்போல இன்பமுடையதாயிற்று என்றானென்பது.

3 Will not the rumour that is known to the town be a gain to me; for what I have not got is as though that were obtained.

ச. கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து.

[இதுவுமது].

பரி:—(இ - ள்.) என்காமம் இவ்வூரெடுக்கின்ற அலரானே யலர் தலை யுடைத்தாயிற்று; அவ்வல ரில்லையாயின், தன்னியல்பிழந்து சுருங்கும், (எ - று).

அலர்தல் - மேன்மேன்மிகுதல். செவ்வையுடையதனைச் செவ்விதென்றாற்போலக் கவ்வையுடையதனைக் 'கவ்விது' என்றார். இயல்பு - இன்பம் பயத்தல்.* தவ்வென்னுமென்பது குறிப்புமொழி; * "நூல்கால் யாத்த மாலை வெண்குடை, தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப" என்புழியு மது.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்) காமம் - (என்) காமம், கவ்வையால் - (இவ்வூர்) எடுக்கின்ற அலராலே, கவ்விது - அலர்தலையுடையதாயிற்று, அதுவின்றேல் - அவ்வலர் இல்லையாயின், தன்மையிழந்து - தன்னியல்பிழந்து, தவ்வென்னும் - சுருங்கிப்போகும், (எ - று).

அலர்தல் - (காமம்) மேலுமேலுமிகுதல். செவ்வையுடையதனைச் செவ்விது என்று கூறுவதுபோலக் கவ்வையுடையதனைக் 'கவ்விது' என்றார். இயல்பு - (காமம்) இன்பந்தருதல். தவ்வென்னும் என்பது குறிப்பிடைச்சொல்.*

(க - து.) தலைமகன் அலரில்லாவிடின், என் காமந் தன்னியல் பிழந்து சுருங்கிப்போமென்று னென்பது.

4. Rumour increases my love; otherwise it would lose its power & languish.

* பத்துப்பாட்டு நெடுநல்வாடை, 184, 185-வது வரி. இதன்பொருள். நூலாலே சட்டத்தைக் கட்டின முத்துமாலையினையுடைய வெண்கொற்றக் குடையானது சுருங்கியசைந்து தாழ்துளியை(பெய்கின்ற மழைத்துளியை) (மேல்விழவொட்டாது) தடுக்காநிற்க என்பது. தாழ்துளி என்ப

ரு. களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) கள்ளுண்பார்க்குக் களிக்குந்தோறுங் கள்ளுண்டல் இனிதாமாறுபோல, எனக்குக் காமம் அலராந்தோறும் இனிதாகா நின்றது, (எ - று).

வேட்கப் பட்டதற்றாலென்பது வேட்டற்றாலென நின்றது. வேட்கை மிகுதியால் அலரும் இன்பஞ் செய்யாநின்ற தென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) (கள்ளுண்பார்க்கு) களித்தொறும்-களிக்குந்தோறும், கள்ளுண்டல் - கட்குடித்தல், வேட்டற்று - இனிதாம் விதம்போல, காமம் - (எனக்குக்) காமம், வெளிப்படுந்தோறும் - அலராந் தோறும், இனிது - இனிதாகா நின்றது, (எ - று).

ஆல் - அசை. வேட்கப்பட்டதற்றாலென்பது செய்யுள் விகாரத்தால் வேட்டற்றாலென நின்றது. வேட்கைமிகுதியால் அலரும் இன்பம் செய்கின்ற தென்பதாம். வேட்கை - புணர்ச்சி விருப்பம்.

(க - து.) தலைமகன் அலர் மிகுந்தோறும் எனக்குக் காமம் இனிதாகா நின்ற தென்று னென்பது.

5. As drinking liquor is delightful whenever a drunkard is in mirth, so love is sweeter to me the more it is revealed.



சா. கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

[இடையீடுகளானும் அல்லகுறியானுந் தலைமகனை யெய்தப்பெறாத தலைமகள் அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலரறிவுறீஇ வரைவுகடாயது.]

பரி:—(இ - ள்.) யான் காதலரைக் கண்ணுறப்பெற்றது ஒருநாளன்றே, அதனானுயவலர் அவ்வளவிற்றன்றித் திங்களைப் பாம்பு கொண்ட வலர்போன்று உலகெங்கும் பரந்தது, (எ - று).

† காரியத்தைக் காரணமாக வுபசரித்துப் ‡ 'பாம்புகொண்டற்று'

‡ தற்குப் பிரதியாகத் தாதுளி என்றும் பாடமுண்டு. தவ்வென்று என்பதற்கு நச்சினார்க்கினியர் "தவ்வென்னும் ஓசைப்பட்டு" என்றுரையிட்டிருக்கின்றனர்.

† திங்களைப்பாம்பு கொள்ளுதலாலாகிய அலரைத் 'திங்களைப் பாம்பு கொண்டற்று' என்று கூறினமையின், காரியத்தைக் காரணமாக வுபசரித்த

என்றாள். * இருவழியும் மன்னும் உம்மையும் அசைநிலை. காட்சியின்றியும் அலர்பரக்கின்ற இவ்வொழுக்கம் இனியாகாது, வரைந்துகோடல் வேண்டுமென்பதாம்.

தெளி:—[இடையீடுகளாலும் இரவுக்குறிதவறுதலாலும் தலைமகனையடையப்பெறாததலைமகள் அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலரை அறிவித்து மணஞ்செயல் விழைவியது.] (இ - ள்.) கண்டது - யான் காதலனைக் காணப்பெற்றது, ஒருநாள் - ஒருநாளேயாம், அலர் - (அதனாலுண்டாகிய) அலரானது, (அவ்வளவினன்றி), திங்களைப் பாம்பு கொண்டற்று - சந்திரனைப் பாம்புகொண்ட அலர்போல உலகெங்கும் பரந்தது, (எ - று).

அலராகிய காரியத்தைப் பாம்புகொள்ளுதலாகிய காரணமாக உபசரித்துப் 'பாம்பு கொண்டற்று' என்றாள். இரண்டிடத்தும் மன்னும் உம்மையும் அசைநிலைகள். காதலரைக்காணுதலின்றியும் அலர்பரக்கின்ற இவ்வொழுக்கம் இனியாகாது, மணஞ்செய்துகொள்ளுதல் வேண்டுமென்பதாம். சிறைப்புறம் - வேலிப்புறம்.

(ரு - து.) தலைமகன் சிறைப்புறத்து வந்து நிற்கும் தலைமகனை கேட்கத் தோழிக்கு அலர் தன்னளவு கடந்து எங்கும் பரவிற்றென்றாளென்பது.

6. It was but a single day that I saw my lover; but the rumour thereof has spread like the darkness when the dragon seizes the moon.

---

தாயிற்று. திங்களைப்பாம்புகொள்ளுதல் காரணம்; அலர் காரியம். இங்கு அலர் திங்களைப் பாம்புகொண்டதென்றுலகத்தாரறிந்து கூறுதலாம்.

பாகவதம் ஆசிரியரை யுரைத்த வத்தியாயத்தில் "களங்கமென்பது மதிக்கிலை கருதுமக் களங்கம், வளங்கொள் பூமியின் சாயையென் பாரதை மதித்தேன்" என்று கூறுகின்றது.

(கிரகணகாலங்களில்) சந்திரனை மறைக்கின்ற பூமியின் சாயையினையும் சூரியனை மறைக்கின்ற சந்திரனது சாயையினையும் இராகு கேதுக்களென்னும் அரவுவடிவக்கிரகங்கள் சந்திரனையும் சூரியனையும் விழுங்குகின்றனவென்று கூறுதல் புராணமரபாம். இராகுவும் கேதுவும் சாயாக்கிரகங்களெனப்படும். இராகு கருநிறப்பாம்பாம், கேது செந்நிறப் பாம்பாம். "இராகுக்கோள் கரும்பாம்பு" "கேதுக்கோள் செம்பாம்பு" என்பது சேந்தன் திவாகரம்.

ரிபுகீதை 31-வது அத்தியாயத்தில் "இந்துவினன் சம்பந்த மன்றி ராகு வெங்கேனுந் தெரிவுற்றூற் சகத்துஞ் சத்தாம்" என்று கூறுவதால், சந்திரனைப்பிடிப்பது ராகுவென்று விளங்குகின்றதென்க. இந்து—சந்திரன்.

* இருவழியும் - கண்டது மன்னும், அலர் மன்னும் என்னும் இரண்டிடத்திலும். மன்னும் உம்மையும் - மன் என்பதும், உம் என்பதும்.

எ. * ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன்
னீராக நீளுமிந் நோய்

[வரைவுநீட ஆற்றாளாய தலைமகளைத் தலைமகன் சிறப்புறத்தானாத லறிந்ததோழி ஊரவரலரும் அன்னை சொல்லுநோக்கி யாற்றல் வேண்டுமெனச் சொல்லெடுப்பியவழி அவள் சொல்லியது.]

பரி:—(இ- ள்.) இக்காமநோயாகிய பயிர் இவ்வூரின்மகளிரெடுக்கின்ற அலர் எருவாக † அதுகேட்டு அன்னை வெகுண்டுசொல்லுகின்ற வெஞ்சொல் நீராக வளரா நின்றது, (எ - று).

‡ ஊரவரென்பது தொழிலான் ஆணொழித்து நின்றது. ¶ ஏகதேச வுருவகம். § சுருங்குதற் கேதுவாவனதாமே விரிதற்கேதுவாகா நின்றன வென்பதாம். வரைவாளுதல் | பயன்.

தெளி:—[களவியானுஞ் செய்துகொள்ளுதல் தாமதமாகப் பொறுக்காதவளாய தலைமகளைத் தலைமகன் சிறைப்புறத்தானாதலறிந்த தோழி ஊரவரலரையும் அன்னைசொல்லையும் நோக்கி நீ பொறுத்தல் வேண்டுமெனச் சொல்லெழுப்பியவிடத்து அத்தோழிக்கவள் சொல்லியது.] (இ - ள்.) இந் நோய் - இக்காம நோயாகிய பயிர், ஊரவர்கௌவை - இவ்வூரிலுள்ளமகளிர் எடுக்கின்ற அலரானது, எருவாக—, அன்னைசொல்-(அதுகேட்டுச் கோபித்து) அன்னைசொல்லுகின்ற கடுஞ்சொல்லானது, நீராக-, நீளும் - வளரா நின்றது, (எ - று).

ஊரவரென்பது கௌவையென்னுந் தொழிலால் ஆண்பாலையொழித்துப் பெண்பாலை யுணர்த்தி நின்றது. இஃது ஏகதேசவுருவகம. காமநோய்

* ஊரவர் கௌவை யொருவிட டன்னைசொன் னீரமடுத், தீரநெல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள், பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த, காரமர் மேனிநங் கண்ணன் தோழி கடியனே" என்று திருவாய்மொழி கூறுவதிங்கறிதற்பாலதாம்.

† அது கேட்டு - அவ்வலரைக்கேட்டு.

‡ ஊரவர் என்னும் (ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் பொதுவாகிய) சொல் கௌவையென்னுந் தொழிலால் ஆண்பாலை யொழித்துப் பெண்பாலை யுணர்த்திநின்றமையின், ஒன்றொழி பொதுச்சொல்லாம்.

¶ ஊரவர் கௌவையை யெருவாகவும் அன்னை சொல்லை நீராகவும் உருவஞ்செய்தவர் அதற்கியையக் காமநோயைப் பயிராக வுருவகஞ்செய்யாமையின், இக்குறள் ஏகதேசவுருவகமாயிற்று.

§ காமநோய் சுருங்குதற்குக் காரணமாய ஊரவர் கௌவையும் அன்னை சொல்லுமே அது விரிதற்குக்காரணமாகாநின்றன என்பதாம்.

| இது சொல்ல இன்னது பயக்குமென்றறிவது பயனும். "இப் பொருள் பயக்குமிஃ தென்பது பயனே" என்பது அகப்பொருள் விளக்கம்.

'ஊரவர் * * நோய்' என்பது இது சொல்லலாம்; வரைவாளென் றறிவது இன்னது பயக்குமென்றறிவதாம்.

சுருங்குதற்குக் காரணமாவனதாமே விரிதற்குக் காரணமாகா நின்றன வென்பதாம். பணைஞ்செய்வாறுதல் பயன். அன்னை - தாய்.

(க - து.) தலைமகள் தோழிக்கு இவ்வூரிலுள்ள மகளிரெடுக்கின்ற அலராலும் எனதன்னை சொல்லுங்கடுஞ்சொல்லாலும் எனக்குக் காமநோய் அதிகப்படுவதாயிற் றென்றாளென்பது.

7. This malady of lust grows apace by the talk of women manuring it and the harsh words of my mother watering it.

அ. நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல்

[இதுவுமது]

பரி:—(இ - ள்.) ஏதிலாரெடுக்கின்ற அலரால் நாங் காமத்தை யவித்துமென்று கருதுதல் நெய்யாலெரியை யவித்துமென்று கருதுதலோ டொக்கும், (எ - று).

மூன்றனுருபுகள் கருவிக்கண் வந்தன. கிளர்தற் காரணமாய அலரால் அவித்தல் கூடாதென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) கௌவையால் - (அயலவரெடுக்கின்ற) அலரால், காமம் - (நாம்) காமத்தை, நுதுப்பேமெனல் - அவிப்போமென்று நினைத்தல், நெய்யால், எரி - நெருப்பை, நுதுப்பேமென்றற்று - அவிப்போமென்று நினைத்தலோடொக்கும், (எ - று).

நெய்யால், கௌவையால் என்னும் மூன்றனுருபுகள் துணைக்கருவிப் பொருளில் வந்தன. காமம் வளர்தற்குக் காரணமாகிய அலரால் அக்காமத்தை அவித்தல் கூடாதென்பதாம். ஆல்-அசை.

(க - து.) தலைமகள் அயலவரெடுக்கின்ற அலரால் நாம் காமத்தை யடக்குதல் முடியாதென்றாள் என்பது.

8. To say that one could extinguish love by rumour, is like extinguishing fire with ghee

கூ. அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

[வரைவிடைவைத்துப் பிரிவின்க ணாற்றாளாய தலைமகள் அவன் வந்து சிறைப்புறத்தா னாதலறிந்து அலரஞ்சி யாற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) * தம்மை யெதிர்ப்பட்டஞான்று † நின்னிற் பிரி யேன் ‡ அஞ்சலோம்பென்றவர்தாமே இன்று கண்டார் பலரும் நாணும் வகை நம்மைத் துறந்தபின் நாமேதிலார் கூறுமலருக்கு நாணக்கூடு மோ? கூடாது, (எ - று).

¶ நாணவென்னும் வினையெச்சம் ஒல்வதென்னுந் தொழிற்பெயருள் ஒல்லுதற் றொழிலோடு முடிந்தது. கண்டார் நாணுநிலைமையமாய யாம் நாணுதல் யாண்டையது என்பதாம்.

தெளி:—[மணஞ்செய்தலை யிடையிலெனவைத்து அதற்குவேண்டும் பொருள் சம்பாதிக்கத் தலைமகன் பிரிந்தபோது பொறுக்காதவளாகிய தலை மகள் அவன்வந்து சிறைப்புறத்தானாதலறிந்து அலரஞ்சிப் பொறுத்தல் வேண்டுமென்றதோழிக்குச் சொல்லியது.] (இ - ள்.) (தம்மை யெதிர்ப் பட்டுக் கண்டநாளில்) அஞ்சலோம்பென்றார் - (உன்னைவிட்டு நீங்கேன்) அஞ்சுதலொழி யென்றவர்தாமே, பலர்நாண - (இன்றுகண்டார்) பலரும் நாணும்வகை, நீத்தக்கடை - (நம்மைவிட்டு) நீங்கியபின், அலர் - (அயலவர் கூறும்) அலருக்கு, நாணவொல்வதோ-(நாம்) நாணக்கூடுமோ, (கூடாது).

¶ நாண என்னும் வினையெச்சம் ஒல்வதென்னும்தொழிற்பெயரின்பகுதி யாய ஒல் என்பது கொண்டு முடிந்தது. கண்டார் நாணும் நிலைமையேமா கிய நாம் நாணுதல் எவ்விடத்தது என்பதாம்.

(க - து.) தலைமகள் தோழிக்கு இன்று கண்டார் பலரும் நாணமுழுமாறு காதலர் நம்மைவிட்டுப் பிரிந்தபின், நாம் அயலார் கூறும் அலர்க்காக நாணுதல் கூடாதென்றாள் என்பது.

9. When he who said "fear not" has put me to shame before others by leaving me, why should I be ashamed of scandal.



௧௦. தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூர்.

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச்சொல்லுவாளாய் அலரறிவுறீஇ அவன் உடன்போக்கு நயப்பச் சொல்லியது.]

* தம்மை யென்றது தலைமகனை.

† "ஆவியன் னாய்கவ லேலக லேமென் றளித்தொளித்த, ஆவியன் னார்" என்று திருக்கோவையார் கூறுவதிங்கறிதற்பாலதாம்.

‡ அஞ்சலோம்பென்றவர் - அஞ்சவேண்டாம் ; கைவிடோமென்று கூறியவர்.

¶ நாண என்னும் (செயவென்னும் வாய்பாட்டு) வினையெச்சம் ஒல் வது என்னும் தொழிற்பெயரின் பகுதியதான ஒல்லுதற்றொழிலோடு முடிந்தது.

பரி:—(இ - ள்.) உடன்போகற் கேதுவாகநோக்கி யாம்பண்டே விரும்புவதாய அலரை இவ்வூர்தானே யெடாநின்றது; இனிக் காதலர்தாமும் யாம் வேண்டியக்கால் * அதனை யினிதினேர்வர், † அதனால் இவ்வலர் நமக்கு நன்றாய் வந்தது, (எ - று).

‡ எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. நங்கட்காதலுடைமையின் மறாரென்பது தோன்றக் 'காதலர்' என்றாள். இவ்விருபதுபாட்டும் புணர்தனிமித்தம்.

தெளி:—[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகளுக்குச் சொல்லுவாளாய் அலரறிவித்து அவன் உடன்போக்குவிரும்பச் சொல்லியது.] (இ - ள்.) யாம் வேண்டுங்கௌவை - (உடன்போகற்குக் காரணமாதலை நோக்கி) யாம் முன்னரே விரும்புவதாகிய அலரை, இவ்வூர் எடுக்கும் - இவ்வூர்தானே எடாநின்றது, காதலர்தாம் - (இனிக்) காதலர் தாமும், வேண்டின் - (நாம்) வேண்டினால், நல்குவர்-(அதனையினிதாக) உடன்படுவா, (அதனால் இவ்வலர் நமக்கு நன்றாய் வந்தது), (எ - று).

தாமுமென்ற எதிரது தழுவிய வெச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. நம்மிடத்துக்காதலுடைமையால் (தலைவர் உடன்போக்கை) மறுக்காரென்பதுதோன்றக் 'காதலர்' என்றாள். "காமமுழந்து" என்னுங் குறள்முதல் இவ்விருபது பாட்டும் புணர்தல் நிமித்தம்.

(க - து.) தோழி, தலைமகன் கேட்கத் தலைமகளைநோக்கி ஊரார் எடுக்கின்ற அலர் நமக்கு உடன்போக்கிற்குற்ற துணையாக விருக்கின்றது; நாம் விரும்பினால் காதலரதற் குடன்படுவாரென்று கூறினாள் என்பது.

10. The town raises the rumour I desire; and my lover would if desired grant my request (to follow him).

களவியல் முற்றிற்று.



* அதனையினிதினேர்வர்-உடன்போக்கை யினிதாகவேற்றுக்கொள்வர்.

† அதனால் - உடன்போகற் கேதுவாயிருத்தலால்.

‡ தொக்குநின்ற தாமும் என்றவும்மை யாம்விரும்புவதேயன்றிமென் பொருளைத் தந்தமையால், எதிரதுதழீஇய வெச்சவும்மையாயிற்று.

† கற்பியல்—

# Wedded Love.

---

பரி:—இனிக் கற்புப் பதினெட்டதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட் பிரிவாற்றாமை கூறுகின்றார்.

தெளி:—இனிக் கற்புப் பதினெட்டதிகாரத்தால் சொல்லத்தொடங்கி, முதலில் பிரிவாற்றாமை சொல்லுகின்றார்.

1-ம் அதிகாரம்.

## பிரிவாற்றாமை—Unendurable Separation

பரி:—அஃதாவது வரைந்தெய்தியபின் தலைமகன் அறம் பொருளின்பங்களின் பொருட்டுச் ‡ சேயிடையினும் ஆயிடையினுந் தலைமகளைப் பிரிந்துசெல்லும்; செல்லுஞான்று அப்பிரிவினை அவளாற்றாளாந் தன்மை. ¶ அஃது ஈண்டுப் பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி கூறலும், அவடானறிந்துத் தலைமகடானே அவற் குறிப்பாலுணர்ந்து கூறலும், பிரிவுணர்த்தியவழிக்கூறலும், தலைமகன் பிரிந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் மறுத்துக் கூறலுமென நால்வகையாற் கூறப்படும்.

தெளி:—அஃதாவது மணஞ் செய்துகொண்ட பின் தலைமகன் அறம் பொருளின்பங்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினும் தலைமகளைப் பிரிந்து செல்லும்; செல்லுநாளில் அப்பிரிவினை அவள் பொறுக்கமாட்டாதவளாந் தன்மையாம். அஃது இங்குப் பிரிவை அறிவித்த தலைமக

---

† கற்பியல் – கற்பினது இலக்கணம்.

"பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது" என்னும் இலக்கண விளக்கச் சூத்திரவுரையில "அஃதாவது (கற்பாவது) கொண்டானிற் சிறந்த தெய்வமின்றெனவும் அவனை யின்னவாறே வழிபடுகவெனவும் இருமுதுகுரவரானும் அந்தணர் திறத்தும் சான்றோர் தேத்தும் ஐயர்பாங்கினும் அமரர்ச்சுட்டியும் ஒழுகு மொழுக்கமும், தலைமகளுனுங் கற்பித்தவாறொழுகுதலும், இனித் தலைமகனும் களவின்கண் ஒரையும் நாளும் தீதென்றதனைத் துறந்தொழுகினாற் போல ஒழுகாது ஒத்தினும் காரணத்தினும் யாத்த சிறப்பிலக்கணங்களைக் கற்பித்துக்கொண்டு துறவறத்திற் செல்லுந் துணையும் இல்லற நிகழ்த்தலுமாம்" என்று கூறப்பட்டிருப்பதும், "கற்பெனப் படுவது கரணமொடு புணரக், கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக், கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே" என்று தொல்காப்பியங் கூறுவதும் இக்குணர்தற்பாலனவாம். [கரணம் - வேள்விச் சடங்கு.]

‡ சேயிடை-தூரதேசம்; ஆயிடை-அவ்விடம், அஃதாவது நகர்ப்புறம்.

¶ அஃது - பிரிவாற்றாமை.

னுக்குத் தோழி சொல்லுதலும், அத்தோழிக்குத் தலைமகள்தானே அவன் குறிப்பால் அறிந்துசொல்லுதலும், அவள் பிரிவை அறிவித்தவிடத்துச் சொல்லுதலும், தலைமகன் பிரிந்தவிடத்து ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் மறுத்துச்சொல்லுதலும் என நால்வகைப்படாற் சொல்லப்படும்.

க. செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

[பிரிந்து கடிதின் வருவலென்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நீ யெம்மைப் பிரியாமை யுண்டாயின் அதனை யெனக்குச் சொல், * அஃதொழியப் பிரிந்துபோய் நின்விரைந்து வருதல் சொல்லையாயின் அதனை அப்பொழுது உயிர்வாழ்வார்க்குச் சொல், (எ - று).

தலைமகளை யொழித்து 'எனக்கு' என்றாள்; தானவளென்னும் வேற்றுமை யின்மையின். அக்காலமெல்லா மாற்றியிருந்து | அவ்வரவு காணவல்லளல்லள்; பிரிந்தபொழுதே யிறந்துபடுமென்பதாம். † அழுங்குவித்தல் பயன். ‡ இதனைத் தலைமகள் ¶ கூற்றாக்கி யுரைப்பாருமுளர்.

தெளி:—[பிரிந்து விரைவில் வருவேனென்ற தலைமகனுக்குத் தோழி சொல்லியது.] (இ - ள்.) செல்லாமையுண்டேல் - (நீ எம்மைப்) பிரியாமை உண்டாயின், எனக்கு உரை - (அதனை) எனக்குச் சொல்லு, மற்று - அஃதொழிய, நின் வல்வரவு - (பிரிந்துபோய்) உன்விரைந்து வருதலை,(சொல்வையானால் அதனை), வாழ்வார்க்கு - (அப்பொழுது உயிர்) வாழ்வார்க்கு, உரை - சொல்லு, (எ - று).

தோழி தலைமகளையொழித்து 'எனக்கு' என்றாள்; தான் அவள் என்னும் வேற்றுமையில்லாமையால். தலைமகள் நீ பிரிந்திருக்கு மக்காலமெல்லாம் பொறுத்திருந்து அவ்வரவுகாண வலிமையுடையளல்லள்; பிரிந்தபொழுதே இறந்துவிடுவளென்பதாம். அழுங்குவித்தல் பயன்.

(க - து.) தலைமகனை நோக்கித் தோழி நீ பிரிந்துபோவாயாயின், தலைமகளுடனே இறந்துவிடுவாளென்று கூறினள் என்பது.

1. If it is not separation from me, then tell me so; but if it is your quick return, tell it to those who would be alive then.



உ. இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.

---

* அஃது - பிரியாமை.

| அவ்வரவுகாணு மதுகையளல்லள் என்றும் பாடமுண்டு. மதுகை - வல்லமை.

† அழுங்குவித்தல் - இரங்கச்செய்தல்.

‡ இதனை - இக்குறளை ¶ கூற்றாக்கி - சொல்லாக்கி.

[பிரிவு தலைமகன் குறிப்பானறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) தழையுங் கண்ணியுங்கொண்டு பின்னின்ற ஞான்று அவர் நோக்கு மாத்திரமும் புணர்ச்சி குறித்தமையான் நமக்கின்ப முடைத்தாயிருக்கும், இன்று அப்புணர்ச்சிதான் நிகழா நிற்கவும் அது பிரிவரென்றஞ்சு மச்சத்தினை யுடைத்தாயிற்று, அவரன்பி னிலைமை யிது, (எ - று).

'பார்வல்' என்றதனாற் புணர்ச்சிபெறாத பின்னிலைக்காலம் பெறப்பட்டது. * புன்கண் என்னுங் காரியப்பெயர் காரணத்தின்மேல தாயிற்று. அவ்வச்சத்தினையுடைத்தாதலாவது † "முள்ளெயிற்றுமுளையெயிற்றமிழ் தூறுந் தீநீரைக், கள்ளினு மகிழ்செய்யு மெனவுரைத்து மமையாரென், னொள்ளிழை திருத்து"ம் ‡ பண்டையிற் சிறப்பால் அவன் பிரிதற்குறிப்புக்காட்டி அச்சஞ்செய்தலுடைமை. அழுங்குவித்தல் பயன்.

தெளி:—[தலைமகனது பிரிவை அவன் குறிப்பால் அறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.] (இ-ள்.) (தழையும் மாலையுங் கொண்டு பின்னின்ற நாளில்), அவர் பார்வல் - அவரது பார்வை மாத்திரமும், (புணர்ச்சி குறித்தமையால்), இன்கணுடைத்து-(நமக்கு) இன்பமுடையதாயிருக்கும், (இன்று அப்புணர்ச்சிதான் நிகழ்ந்துகொண்டிருக்கவும்),புணர்வு-அப்புணர்ச்சி, பிரிவஞ்சும்-பிரிவரென்றஞ்சுகின்ற, புன்கண் - அச்சத்தினை, உடைத்து - உடையதாயிற்று, (அவரன்பினிலைமை இது); (எ - று).

ஆல்-அசை 'பார்வல்' என்றதனால் புணர்ச்சி பெறாமல் தலைமகன் பின்னின்ற காலம் பெறப்பட்டது. புன்கண் என்னுங் காரியப்பெயர் காரணத்தின்மேல தாயிற்று. புன்கண் - துன்பம்; அதற்குக் காரணம் அச்சமாம். அவ்வச்சத்தினை யுடையதாதலாவது புணரும்போது பல்லினிடத்தூறும் நீரைக் கள்ளைக்காட்டிலுங் காட்டில் மகிழ்ச்சியைத் தருமென்று மிகப் புகழ்வதாலும், அணிகளைத் திருத்தலாலும் தலைமகன் தன்பிரிதற் குறிப்புக்காட்டி அச்சஞ் செய்தலுடைமை. அழுங்குவித்தல் பயன்.

(க - து.) தலைவர்க்கு நம்மிடத் தன்பில்லாமை அவரது பிரிவின் குறிப்பால் தெரிகின்றதென்று தலைமகள் தோழிக்குக் கூறினாள் என்பது.

---

* புன்கண் என்னும் காரியப்பெயர் புன்கண்ணுக்கு (துன்பத்திற்கு)க் காரணமான அச்சத்தின்மேலதாய் நின்றது. இது காரியவாகு பெயராம்.

† கலித்தொகை—பாலைக்கலி, 3. இதன்பொருள். முள்ளைமாறுபடுகின்ற முனையினையுடைய நாணல்முளைபோலும் பல்லினிடத்து விடாமல் ஊறும் அமிழ்துபோலும் இனிய நீரைக் கள்ளினும் காட்டில் மகிழ்ச்சியைத் தருமென்று கூறியும், வேட்கைதணியாராகி யென்னுடைய ஒள்ளிய பூண்கள் (புணர்ச்சியால் நிலைகுலைந்தவற்றைப் பழையநிலைகளிலே கிடக்கும்படி) திருத்துகின்ற என்பது.

‡ பண்டையின் - பழைமையின்.

2. His very look was once joyful; but now, the fear of parting saddens even embrace.

ரு. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

[இதுவுமது.]

பரி:—(இ- ள்.) பிரியேனென்ற தஞ்சொல்லும் நம்பிரிவாற்றாமையும் அறிதலுடையாராய காதலர் கண்ணும், ஒரோவழிப் பிரிவு நிகழ்தலான் அவர் சொல்லும் * தலையளியும் பற்றி நம்மாட் டன்புடையரெனத் தேறுந்தேற்றம் அரிதாயிருந்தது, (எ - று).

அரோ—அசைநிலை. உம்மை உயர்வு சிறப்பின்கண் வந்தது.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) அறிவுடையார் கண்ணும் - (பிரியேனென்ற தஞ்சொல்லையும் நம்பிரிவாற்றாமையையும்) அறிதலுடையவராய காதலரிடத்தும், ஓரிடத்து - ஒரோவழி, பிரிவுண்மையான் - பிரிவு நிகழ்தலால், தேற்றம் - (அவர்சொல்லும் தலையளியும் பற்றி நம்மிடத்து அன்புடைய ரென்றுதெளியும்) தெளிவு, அரிது-அரிதாயிருந்தது, (எ-று).

அரோ - அசைநிலை. (அறிவுடையார் கண்ணும் என்ற) உம்மை உயர்வு சிறப்புப் பொருளில் வந்தது.

(க - து.) தலைமகள் தோழியை நோக்கித் தலைவரிடத்தும் பிரிவு நிகழ்தலால், நம்மிடத்தன்புடையவரென்று அவரை நம்புதல் கூடாதென்றாள் என்பது.

3. Confidence is hardly possible, as even the lover who knows (his promise and my breaking - heart) may at times depart.

ச. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு.

[இதுவுமது.]

பரி;—(இ - ள்.) எதிர்ப்பட்ட ஞான்றே தலையளிசெய்து நின்னிற் பிரியேன் அஞ்சலென்றவர்தாமே பின்பிரிவாராயின்,† அவர்க்கன்றி அவர் தெளிவித்த சொல்லை மெய்யெனத் தெளிந்தார்க்குக் குற்றமுண்டோ?

‡ தேறியாரென்பது தன்னைப் பிறர்போற் கூறல். § சொல்லுஞ்

* தலையளி - பூரணவ்சுவாசம். † அவர்க்கன்றி - தலைவர்க்கல்லாமல்.

‡ தலைமகள் பாங்கியைநோக்கித் 'தேறியார்க்கு' எனத்தன்னைப் பிறர்போல் வைத்துக்கூறினாள். தன்னைப் பிறபோல் வைத்துக் கூறலை சாந்தி என்பர். § சொல்-நின்னிற் பிரியேன், அஞ்சல் என்பது; செயல்-பிரிவு.

செயலு மொவ்வாமைக் குற்றம் அவர்க்கெய்தும் ; * அஃதெய்தாவகை † யழுங்குவி யென்பது கருத்து.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) அளித்து - (எதிர்ப்பட்ட காலே) தலையளி செய்து, அஞ்சலென்றவர் - (உன்னை விட்டுப்பிரியேன்) அஞ்ச வேண்டாமென்றவர்தாமே, நீப்பின்-(பின்னே) பிரிவாராயின்,(அவர்க்கல்லா மல்), தெளித்த சொல் - (அவர்) தெளிவித்த சொல்லை, தேறியார்க்கு - (மெய்யென்று) தெளிந்தவர்க்கு, தவறு - குற்றம், உண்டோ—,(எ - று).

தேறியாரென்பது தன்னைப் பிறர்போற் சொல்லுதல். சொல்லும் செயலும் ஒத்திராமைக்குற்றம் அவர்க்கு உண்டாம்; அஃது உண்டாகா வாறு அழுங்கச்செய்யென்பது கருத்து.

(க - து.) தலைமகள் தோழியை நோக்கிப் பிரியேனென்று கூறிய தலைவர் பின் பிரிவாராயின், அவரிடத்தன்றி அவர் சொல்லை நம்பிய நம்மிடத்துக் குற்றமுண்டாமோ என்றாள் என்பது.

4. If he who fondly said "fear not" should depart what blame is incurred by those who believed in his re-assuring words.



ரு. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) என்னுயிரைச் செல்லாமற் காத்தியாயின், அத னையாளுதற் கமைந்தாருடைய ‡ செலவினை அழுங்குவிப்பாயாக; ¶ அழு ங்குவிப்பாரின்றி அவர் செல்வாராயின் அவராலாளப்பட்ட வுயிருஞ் செல்லும், சென்றுற் பின்னவரைக் கூடுதல் எனக்கரிதாம், (எ - று).

ஆளுதற்கமைதல் - இறைவராதற்குத் தெய்வத்தாலேற்புடையராதல். மற்று வினைமாற்றின்கண் வந்தது.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) ஓம்பின் - (என்னுயிரைச் செல்லா மற்) காப்பாற்றுவையாயின், அமைந்தார் - (அவ்வுயிரை ஆளுதற்கு) அமைந்த வரது, பிரிவு - செலவினை, ஓம்பல் - அழுங்குவிப்பாயாக, மற்று - அழுங்கு விப்பாரில்லாமல், அவர் —, நீங்கின்-செல்வாராயின், (அவரால் ஆளப்பட்ட

* அஃதெய்தாவகை - சொல்லும் செயலும் ஒவ்வாமைக்குற்றம் தலை வர்க்கு அடையாதபடி.

† அழுங்குவி - தோழி! நீ தலைவர் பிரியாவாறு அவர் பிரிவைத் தடைசெய். ‡ செலவினை - பிரிவை.

¶ அழுங்குவிப்பாரின்றி - தடைசெய்வாரில்லாமல்.

உயிரும் செல்லும், சென்றால்), புணர்வு-(பின்பு அவரைக்) கூடுதல், அரிது-(எனக்கு) அரிதாம், (எ - று).

ஆல் - அசை. ஆற்றுதற்கமைத்தல் - தலைவராதற்கு வேண்டிய தகுதியுடையவராதல். மற்றென்னும் இடைச்சொல் ஓம்பல் என்னும் வினையையொழித்து ஓம்பாமை யென்னும் வினையை யுணர்த்தினமையின், வினைமாற்றுப் பொருளதாயிற்று.

(க - து.) தலைமகள் தோழி! நீ தலைவர் பிரிவைத் தடுக்கா தொழிவையாயின், உடனே என்னுயிர் நீங்கிப்போமென்றாள்.

5. If you would save my life, restrain the departure of him who fills my heart; if he depart, hardly we meet again.



கு. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

[தலைமகன் * பிரிவுணர்த்தியவாறு வந்துசொல்லிய தோழிக்குச் சொல்லியது]

பரி:—(இ - ள்.) நங்கவவுக்கடுமையறிந்த தலைவர்தாமே நம்முழின்று தம்பிரிவினை யுணர்த்தும் வன்கண்மை யுடையராயின், அத்தன்மையார் பின்பு நம்மாற்றாமை யறிந்துவந்து தலையளி செய்வரென்றிருக்கு மாசை விடப்படும், (எ-று).

† அருமை—பயன்படுத லில்லாமை. கூடியிருந்தே அன்பின்றிப் பிரிவெண்ணுதலும் உணர்த்தலும் வல்லராயினார் பிரிந்துபோய் அன்புடையராய் நம்மை நினைத்துவந்து நல்குதல் யாண்டையதென்பதாம். அழுங்குவித்தல் பயன்.

தெளி:—[தலைமகன் தன் பிரிவை அறிவித்தவாறு வந்துசொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) அவர் - (நமது கவவுக்கடுமையை யறிந்த) அத்தலைவர்தாமே, (நம்முன்னின்று), பிரிவுரைக்கும் - (தம்) பிரிவினை யறிவிக்கும், வன்கண்ணராயின் - அருளில்லாமையை யுடையவராயின், (அத்தன்மையார் பின்பு), நல்குவரென்னுநசை - (நமது ஆற்றாமையை அறிந்துவந்து) தலையளிசெய்வாரென்றிருக்குமாசை, அரிது-விடப்படும், (எ - று).

* "ஓதல் காவல் பகைதணி வினையே, வேந்தர்க் குற்றுழிப் பொருட் பிணி பரத்தையென, றாங்கவ் வாறே யவ்வயிற் பிரிவே" என்பது இறையனாரகப் பொருள்.

† அருமை - அரிது என்னும் குறிப்பு வினைமுற்றின் பகுதியதான அருமை. அரிது - தலைவர் நல்குவரென்னு நசை பயன்தருவ தாகாது.

அருமை - பயன்படுதலில்லாமை. (நம்மோடு) கூடியிருந்தே அன்பில்லாமற் பிரிவெண்ணுதலும் அறிவித்தலும் வல்லராயினார் பிரிந்துபோய் அன்புடையவராய் நம்மை நினைத்து வந்து தலையளி செய்தல் எவ்விடத்ததென்பதாம். அழுங்குவித்தல் பயன். கவவுக்கடுமை - கையால் இறுக வணைத்துக் கொள்ளுதலின் பிரிவைச் சகியாமை

(க - து.) தலைமகள் தோழியைநோக்கி நமதாற்றாமையை யறிந்துள்ள தலைவர் தம்பிரிவினை யறிவிப்பாராயின், அவர் பின்புவந்து தலையளி செய்வாரென்னுமாசையை நாம்விடல் வேண்டுமென்றாள்.

6. If he be so cruel as to mention his departure, the longing hope that he would bestow his love should be given up.



எ. துறைவன் துறந்தமை தூற்றுகொல் முன்கை
யிறையிறவா நின்ற வளை

[இதுவுமது.]

பரி:—(இ - ள்) துறைவன் என்னைப் பிரியலுற்றமையை அவனுணர்த்தாமற் றமே யுணர்ந்து என் முன்கையி * னிறையினின்றுங் கழலாநின்ற வளைகள் எனக்கறிவிப்பாவோ, அவனுணர்த்த வுணர்ந்து வந்து நீ யறிவித்தல் வேண்டுமோ, (எ-று).

† முன்னே நிகழ்ந்தமையின் 'துறந்தமை' என்றும், ‡ கேட்ட துணையான் மெலிந்து ஆற்றாமையின் 'இறவாநின்ற' என்றுங் கூறினாள். அழுங்குவித்து வந்து கூறற்பாலையல்லையாய நீயும் இவ்வளைகள் செய்தனவே செய்தாயெனப் புலந்து கூறியவாறு.

தெளி;—[இதுவுமது.] (இ - ள்.) துறைவன் - தலைவன், துறந்தமை - (என்னைப்) பிரியலுற்றமையை, (அவன் அறிவிக்காமல் தாமே அறிந்து), முன்கையிறை - (என்) முன்கையின் இறையினின்றும், இறவாநின்றவளை - கழலாநின்ற வளையல்கள், தூற்றுகொல் - (எனக்கு) அறிவியாவோ, [அவன் அறிவிக்க அறிந்து வந்து நீ அறிவித்தல் வேண்டுமோ].

(பிரிவு) முன்னே நிகழ்ந்தமையால் 'துறந்தமை' என்றும், கேட்டவளவால் மெலிந்து பொறாமையால் 'இறவாநின்ற' என்றும் சொல்லினள். அழுங்குவித்து வந்து சொல்லுந் தன்மையளல்லாத நீயும் இவ்

---

* இறையினின்றும் - தங்குமிடத்திலிருந்து

† முன்னே நிகழ்ந்தமையின்-பிரிவு முன்னே உண்டாயிருத்தலால்.

‡ கேட்டதுணையான்-தலைமகனது பிரிவைப் பாங்கிசொல்லக் கேட்டவளவால்.

வளையல்கள் செய்தனவே செய்தாவென்று பிணங்கிச் சொல்லியவாறும். நெய்தல் நிலத்துத் தலைவனுக்குத் துறைவன் என்று பெயராம்.

(க - று.) தலைமகள் தோழியை நோக்கித் தலைவனது பிரிவை நீ வந்துணர்த்துவதற்கு முன்னே எனது வளையல்கள் எனக்கு உணர்த்தின என்றுசொன்பது.

7. Do not the bracelet slipping from my wrist forebode the separation of my lord.

---

அ. இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்.) மகளிர்க்குத் தங்குறிப்பறியுந் தோழியரில்லாத வேற்றூரின்கண் வாழ்தலின்னாது; அதன்மேலுந் தங்காதலரைப் பிரிதல் அதனினு மின்னாது, (எ-று).

தலைவன் செலவினை * யழுங்குவித்து வாராது † உடன்பட்டு வந்தமைபற்றிப் புலக்கின்றாளாகலின், 'இனனில்லூர்' என்றாள். உலகியல் கூறுவாள் போன்று தனக் ‡ கவ்விரண்டு முண்மை கூறியவாறு.

தெளி:—(இதுவுமது). (இ - ள்.) இனனில்லூர் - (மகளிர்க்குத் தங்குறிப்பறியும்) தோழியரில்லாத வேற்றூரினிடத்து, வாழ்தல் - வாழுதல், இன்னாது - துன்பஞ்செய்வதாம், (அதன்மேலும்), இனியார்ப்பிரிவு -(தங்) காதலரைப் பிரிதல், அதனினும் - அவ்வாழ்தலைக்காட்டிலும், இன்னாது - துன்பஞ்செய்வதாம், (எ - று).

தலைமகள் தோழி தலைவன் செல்லுதலை அழுங்குவித்து வாராமல் உடன்பட்டு வந்தமை பற்றிப் பிணங்குகின்றாளாகலால், 'இனனில்லூர்' என்றாள். தலைமகள் உலகத்தியல்பு சொல்லுவாள்போன்று தனக்கு அவ்விரண்டுமிருத்தலைச் சொல்லியவாறும்.

(க - று.) தலைமகள் தங்குறிப்பறியுந் தோழியரில்லாதவூரில் வாழ்தலினும் தமது காதலரைப் பிரிந்திருத்தல் மகளிர்க்குக் கொடியதென்றுசொன்பது.

8. Painful is it to live in a town bereft of intimate friends; but far more painful is it to separate from one's lover.

---

* அழுங்குவித்து - தடைப்படுத்தி. † உடன்பட்டு - சம்மதித்து.
‡ அவ்விரண்டும் - இனனில்லூர் வாழ்தலும் இனியார்ப்பிரிவும்.

௯. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

[காமந் தீயேபோன்று தானின்றவிடத்தைச் சுடுமாகலான், நீயாற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்) தீத் தன்னைத் தொட்டாற் சுடுமாயிற் சுடுதலல்லது காமமாகிய நோய்போலத் தன்னையகன்றுற் றப்பாது சுடுதலையாற்ற வற்றோ, மாட்டாது, (எ - று).

சுடுமாயினென்பது மந்திரமருந்துகளாற் * றம்பிக்கப்படாதாயி னென்றவாறு. காமத்திற் † கதுவுமில்லை யென்பாள் ‡ வாளா 'சுடல்' என்றாள். அகறல்-நுகராமை. ¶ சுடலென்பது முன்னுங்கூட்டப்பட்டது. § தீயினுங் கொடியதனை யானாற்றுமா றென்னை யென்பதாம்.

**தெளி.**—[காமம் தீயேபோன்று தான் நின்றவிடத்தைச் சுடுமாகலால், நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) தீ - நெருப்பு, தொடின் - (தன்னைத்) தொட்டால், சுடிற் (சுடல்) அல்லது - சுடுமாறற் சுடுதலல்லாமல், காமநோய்போல - காமமாகிய நோய்போல, விடின் - (தன்னை) விட்டுநீங்கினல், சுடலாற்றுமோ- (தப்பாது) சுடுதலைச் செய்யவல்லதோ, (சுடாது), (எ - று).

சுடுமாறுலென்பது மந்திரமருந்துகளால் தம்பிக்கப்படாதாயி னென்றவாறும். காமத்திற்கு அதுவும் இல்லையென்பாள் சும்மா 'சுடல்' என்றாள். நீங்கல் - (காமத்தை) அனுபவியாமை. சுடலென்பது முன்னும் கூட்டப்பட்டது. தீயினுங் கொடிய காமநோயை யான் பொறுக்கும் விதம் எப்படி யென்பதாம்.

(க - து.) காமந் தீயினுங் கொடியதென்றாளென்பது.

9. Fire burns (the hands) when touched; but can it also burn, like the sickness of love (burning the hearts) when far away removed ?



* தம்பிக்கப்படாதாயின் - (தீ) தடுக்கப்படாதானல்.

† அதுவும் - மந்திர மருந்துகளால் தம்பிக்கச் செய்தலும்.

‡ வாளா - யாதொரு விசேடணமுந்தாராது. சுடின் என்பதற்குத் தொடின் என்னும் விசேடணந்தந்து, (தீ) தொடிற்சுடின் என்றுரைத்திருப்பது இங்குணர்தற் பாலதாம்.

¶ சுடல் என்பது சுடின் என்பதனேடும் சேர்க்கப்பட்டது.

§ காமநோய் தீயினுங் கொடியதென்பது "ஊரு ளெழுந்த வுருகெழு செந் தீக்கு, நீருட் குளித்து முயலாகு - நீருட், குளிப்பினுங் காமஞ் சுடுமே குன் றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும்" என்று நாலடியார் கூறுவதாலு மறிதற்பாற்றும்.

கo. அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

[தலைவியர்பலரும் பிரிவாற்றியிருப்பர்; அது நீசெய்கின்றிலை யென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நீ சொல்லுகின்றதோக்கும். பிரிவுணர்த்தியவழி அதற்குடன்பட்டுப் பிரியுங்கால் நிகழும் அல்ல னோயினையும் நீக்கிப் பிரிந்தால் அப்பிரிவுதன்னையு மாற்றிப் பின்னுமிருந்து உயிர்வாழ மக ளிர் உலகத்துப் பலர், (எ - று).

பண்டையிற் சிறப்பத் தலையளிபெற் றின்புறுகின்ற வெல்லைக்கண்ணே * அஃதிழந்து துன்புறுதற் குடம்படுதல் அரியதொன்றாகலின் † 'அரிதாற்றி' என்றும், செல்லுந் தேயத்து அவர்க்கியாது நிகழுமென் றும் வருந்துணையும் யாமாற்றி யிருக்குமா றென்னென்றும் அவ்வாவுதான் எஞ்ஞான்று வருதெய்து மென்றும் இவ்வாற்றா னிகழுங்கவலை மனத்து நீங்காதாகலான் 'அல்லனோய் நீக்கி' என்றும், பிரிந்தால் வருந்துணையும் அகத்து நிகழுங் காமவேதனையும் புறத்து யாழோசை, மதி, தென்றலென் றிவை ‡ முதலாகவந்து ¶ அதனை வளர்ப்பனவும் ஆற்றலரியவாகலிற் 'பிரி வாற்றி' என்றும், தங்காதலரை § யின்றியமையா மகளிருள் இவையெல் லாம் பொறுத்துப் பின்னுமிருந்து உயிர்வாழ்வார் ஒருவருமில்லை யென் பது குறிப்பாற்றோன்றப் 'பின்னிருந்து வாழ்வார் பலர்' என்றுங் கூறினாள். X அரிதென்பது வினைக்குறிப்புப்பெயர். ┼ பிரிவின்க ணிகழ்வன...

* அஃதிழந்து - இன்பத்தை யிழந்து.

† அரியதனைச்செய்து என்றும் பாடமுண்டு.

‡ முதலாக என்றமையின் யாழிசை, சந்திரோதயம், தென்றற்காற்று என் னும் இவையேயன்றிச் செக்கர்வானம், மாலைப்பொழுது, இருட் காலம், குயிலோசை, அன்றிலோசை, சே (பசு) மணியோசை, கட லோசை முதலியவற்றையுங் கொள்க.

"தென்றற்கும் வீணைக்குஞ் சேமணிக்கு ங் கோகிலத்துக், கன்றிற் கமைக் காழிக் கம்புலிக்கு - நின்றரந்தும, அன்னைக்கு மாரற் கயர்ந்தாளென் றன்னமே, யென்னைக் குமாரற் கியம்பு" என்று இரத்தினச் சுருக் கம் கூறுவது மிங்குணர்தற் பாலதாம்.

[தென்றல் - சிறுகாற்று. சேமணி - பசுவின்கழுத்திற்கட்டியமணி. கோகி லம் - குயில். அன்றில் - கிரவுஞ்சப்பட்சி. அமை - இருள். ஆழி - கடல். அம்புலி - சந்திரன். அன்னை - ஈன்றாள். மாரன்-மன்மதன்.]

¶ அதனை - காமவேதனையை. § இன்றியமையா - இல்லாது முடியாத.

X அரிது என்னுங் குறிப்புவினைமுற்றுப் பெயர்த்தன்மை யடைந்து நின் றது; இங்குப் பிரிவென்னும் பொருளது.

┼ பிரிவின்கண் நிகழ்வன - அகத்து நிகழும் காமவேதனையும், புறத்து யாழிசை, மதி, தென்றல் என்றிவை முதலாகவந்து அதனை வளர்ப்

றைப் 'பிரிவு' என்றார். * ஆற்றி,நீக்கி, ஆற்றியென்பன ஓசை வகையான் அவ்வவற்ற தருமையுணர நின்றன. சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. யானுமிறந்துபடுவ லென்பது கருத்து.

தெளி:—[தலைவியர்பலரும் பிரிவைப்பொறுத்திருப்பார்; அது நீ செய்கின்றிலையென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ-ள்.) (நீசொல்லுகின்றது ஒக்கும்.) அரிதாற்றி-பிரிவை (அறிவித்தவிடத்து அதற்கு) உடன்பட்டு, அல்லல்நோய்-(பிரியும்போது நிகழும்) துன்பநோயினையும், நீக்கி-ஒழித்து, பிரிவாற்றி-(பிரிந்தால்) அப்பிரிவையும்பொறுத்து, பின்னிருந்து-பின்னும் இருந்து, வாழ்வார்-உயிர்வாழுமகளிர், பலர்-(உலகத்திற்) பலர், (எ-று).

முன்னிலுஞ் சிறப்பத் தலையளிபெற்று இன்பத்தை யனுபவிக்கிற சமயத்திலே அதனை யிழந்து துன்பத்தை யனுபவித்தற்கு உடம்படுதல் அரியதொன்றாகலால் 'அரிதாற்றி' என்றும், செல்லுந்தேசத்தில் அவர்க்கு யாது சம்பவிக்குமோ வென்றும் அவர் வருமளவும் நாம் பொறுத்திருக்கும் விதம் எவ்வாறென்றும் அவ்வரவுதான் எப்பொழுது வந்து கிடைக்குமோ வென்றும் இவ்விதங்களால் தோன்றுங்கவலை மனத்தினின்றும் நீங்காதாகலால் ' அல்லனோய் நீக்கி' என்றும், பிரிந்தால் வருமளவும் உள்ளேதோன்றும் காமவேதனையும் புறத்தே வீணையிசை சந்திரன் தென்றற்காற்று என்ற இவைமுதலாக வந்து அதனை வளர்ப்பனவும் பொறுத்தல் அரியனவாகலால் 'பிரிவாற்றி' என்றும், தமது காதலரைவிட்டிருக்கமாட்டாத மகளிருள் இவையெல்லாம் பொறுத்துப் பின்னும் இருந்து உயிர்வாழ்வார் ஒருவரும் இல்லையென்பது குறிப்பினால் தோன்றப் 'பின்னிருந்து வாழ்வார் பலர்' என்றும் சொல்லினாள். அரிது என்பது குறிப்புவினையாலணையும் பெயர். பிரிவில் நிகழ்வனவற்றைப் 'பிரிவு' என்றாள். ஆற்றி நீக்கி ஆற்றி என்பன ஓசைவகையால் அவ்வவற்றினது அருமை யுணர நின்றன. பிரிவு மென்னும் இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்குநின்றது. யானும் இறந்துபடுவேனென்பது கருத்து.

(க-து.) தலைமகள் தோழிக்குத் தமது தலைவரது பிரிவிற் குடன்பட்டு அதனாலுண்டாகுந் துன்பங்களையும் பொறுத்து வாழும் மகளிரும் உண்டென்றாளென்பது.

10. There are many indeed who can sustain separation meekly, driving distress away, endure separation and thereafter continne to live.



---

பனவுமாமென்க. பிரிவின்கண் நிகழ்வனவற்றைப் பிரிவு என்றமையின், இஃதிடவாகு பெயராம்; இங்குப் பிரிவென்னுந்தொழி லிடமாயிற்று. * செய்து என்றும் பாடமுண்டு.

## 2 - ம் அதிகாரம்.

### படர்மெலிந்திரங்கல்:—Languishing in sorrow.

**பரி:—அது * படரான் மெலிந்திரங்கலென விரியும்; அஃதாவது பிரிவாற்றாளாய தலைமகள் தானுறுகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்தலின், அந்நினைவான் மெலிந்திரங்குதல். † அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.**

*தெளி:—அது படரால் மெலிந்து இரங்கலென்று விரியும்; அஃதாவது பிரிவினைப் பொறுக்கமாட்டாதவளாகிய தலைமகள் தான் அடைகின்ற துன்பத்தினை எப்போதும் நினைத்தலின், அந்நினைவால்மெலிந்து இரங்குதலாம். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.*

க மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும்.

*[காமநோயை வெளிப்படுத்தல் நின்னுணுக்கேலாதென்ற
தோழிக்குச் சொல்லியது.]*

**பரி:—(இ-ள்.)¶ இந்நோயைப் பிறரறிதலஞ்சி யான் மறையாநின்றேன்; ‡ நிற்பவும், இஃது அந்நாணவரை நில்லாது நீர்வேண்டுமென் றிறைப்பவர்க்கு ஊற்றுநீர் மிகுமாறுபோன் மிகாநின்றது. (எ.று)**

*அம்மறைத்தலாற் பயனென்னென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. “ $ இஃதோ செலவர்க் கொத்தனென்யான்” என்புழிப்போல ஈண்டிச்சுட்டுப்பெயர் சுட்டி நின்றது. X இஃதோர் நோயையென்று பாடமோதுவாருமுளர்; அது பாடமன்மையறிக. இனி அதற்கடுத்தது நீசெயல் வேண்டுமென்பதாம்.*

**தெளி:**—*[காமநோயை வெளிப்படுத்துதல் உன் நாணத்திற்குப் பொருந்தாதென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) நோயை-இந்நோயை, யான் மறைப்பேன்-(பிறரறிதற்கு நாணி) யான் மறையாநின்றேன், (நிற்பவும்), இஃது-இக்காமநோய், (அந்நாணளவில் நில்*

---

** படரான்-துன்பத்தினை நினைத்தலால், மெலிந்து-இளைத்து, இரங்கல் - வருந்துதல். † பிரிவாற்றாமையென்னும் அதிகாரத்தின்பின் படர்மெலிந்திரங்கல் என்னும் அதிகாரம் வைத்த முறைமையும். ¶ இந்நோயை-இக்காமநோயை. ‡ நிற்பவும்-காமநோயை மறைத்து நிற்கவும்.*

*$ இதன்பொருள் யான் இவ்விஷயத்தில் செல்வரையொத்திருக்கிறேன் என்பது.*

*X இஃதோ நோயை என்பதற்குப் பிரதியாக இஃதோர் நோயை என்று பாடஞ் சொல்லுவாருமுண்டு; அது பாடமன்றென்க.*

லாது), இறைப்பவர்க்கு (நீர்வேண்டுமென்று) இறைப்பவர்க்கு, ஊற்றுநீர் போல-ஊற்றுநீர் மிகும்விதம்போல, மிகும்-மிகாநின்றது, (எ-று).

அம்மறைத்தலால் பயன்யாது என்பதுதோன்ற நின்றமையால், மன் என்னுமிடைச்சொல் ஒழியிசைப்பொருளில் வந்தது. இஃது என்னும் சுட்டுப்பெயரீறுதிரிந்து இஃதோ என என்றது. இனி அந்நோய்க்கு அடுத்ததைத் தோழியே! நீ செயல்வேண்டும் என்பதாம்.

(க-து.) தலைமகள் தோழியே! காமநோய் யான் மறைத்தாலும் மறையாது மிகுகின்றதென்றாளென்பது.

1. I would conceal this pain from others (out of shame); but it wells out like a spring to those who,drain it.



உ. கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும்.

*[ஈண்டையா ரறியாமன் மறைத்தல் * ஆண்டையா ரறியத் † தூது விடுதலென்னு மிரண்டனுள் ஒன்றுசெயல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) இந்நோயை ஈண்டையா ரறியாமன் மறைத்தலும் வல்லேனாகின்றிலேன்; ஆகாக்கால், நோய் செய்தவர்க் குரைக்கவேனின், அதுவும் எனக்கு நாணினைத் தாராநின்றது, இனியென் செய்கோ? (எ - று).

ஒருகாலைக்கொருகான் மிகுதலிற் 'கரத்தலு மாற்றேன்' என்றும், சேயிடைச் சென்றவர்க்கு ‡ இது சொல்லித் தூது விட்டால் இன்னு மிருந்தேனென்பது பயக்குமென்னுங் கருத்தால் 'நாணுத்தரும்' என்றுங் கூறினாள்.

தெளி:—[இவ்விடத்திருப்பவரறியாமல் மறைத்தல் அவ்விடத்திருப்பவரறியத் தூதுவிடுதல் என்னும் இரண்டனுள் ஒன்று செயல்வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) இந்நோயை - இக்காமநோயை, கரத்தலுமாற்றேன் - (இவ்விடத்திருப்பவரறியாமல்) மறைத்தலும் வல்லேனாகின்றிலேன், (ஆகாக்கால்), நோய் செய்தார்க்கு -

* ஆண்டையார்-தலைவர். † "இயம்புகின்ற காலத் தெகினமயி லிள்ளை, பயம்பெறுமே கம்பூவை பாங்கி-நயந்தகுயில், பேதைநெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" என்று இரத்தினச் சுருக்கங்கூறுவ திங்குணர்தற்பாலதாம். [எகினம் - அன்னம், கிள்ளை - கிளி, பூவை - நாகணவாய், பிரமரம் - வண்டு.]

‡ இது - காமநோய் ஒருகாலைக்கொருகால் மிகுதலை.

நோயைச் செய்தவர்க்கு, (சொல்லவென்றால்), உரைத்தலும் - அச்சொல்லு தலும், நாணுத்தரும்—(எனக்கு) நாணத்தைத் தாராநின்றது, (இனி என் செய்வேன்)? (எ-று).

காமநோய் ஒருவேளைக்கு ஒருவேளை மிகுதலால் 'கரத்தலுமாற்றேன்' என்றும், தூரதேசத்திற் சென்றிருக்குந் தலைவர்க்கு இதுசொல்லித் தூது விட்டால் இன்னும் (யான் சாவாது) இருந்தேனென்பது (அவர்க்குத்) தோன்றுமென்னுங் கருத்தால் 'நாணுத்தரும்' என்றும் சொல்லினள்.

(க - து.) தலைமகள் தோழிக்குக் காமநோயை மறைத்தலும் அதனைச் செய்த தலைவர்க்குரைத்தலும் எனக்குமுடியா வென்று ளென்பது.

2. I cannot hide this pain (from others), nor can I reveal it without shame to him who caused it.

௩. காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென் னோனா வுடம்பி னகத்து.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காமநோயும் * அதனைச் செய்தார்க்கு உரைக்க லொல்லாத நாணும் † தம்மைப் பொறாத என்னுடம்பின்கண்ணே உயிர் காத்தண்டாக ‡ அதனிருதலையினுந் தூங்காநின்றன, (எ - று).

பொறாமை - மெலிவானுயது. ¶ தூங்குமென்பது ஒன்றினொன்று மிகாது X இரண்டும் + ஒத்தசீர வென்பது தோன்ற நின்றது. தூதுவிட வும் ஒழியவும் பண்ணுவனவாய காம நாண்கள் தம்முளொத்து உயிரினை | யிறுவியா நின்றன; யான் || அவற்றுளொன்றின்க ணிற்கமாட்டாமை யின், †† இஃதிற்றேவிடு மென்பதாம்.

தெளி:—(இ - ள்.) [இதுவுமது] (இ - ள்.) காமமும் - காமநோயும், நாணும்-(அதனைச் செய்தவர்க்குச் சொல்லுதற்கமையாத) நாணும், நோனா என் உடம்பினகத்து - (தம்மைப்) பொறாத என்னுடம்பினிடத்தே, உயிர்- உயிரானது, காவா - காவடித்தண்டாக, தூங்கும் - (அதனிருதலையிலும்) தொங்குகின்றன, (எ - று).

பொறாமை - மெலிவினாலாகியது. தூங்குமென்பது ஒன்றினொன்று மிகாமல் இரண்டும் ஒத்த சீரவென்பது தோன்றநின்றது. தூதுவிடப்

* அதனை - காமநோயை. † தம்மை - காமநோய், நாண் என்னுந் தம் மை. ‡ அதன் - உயிரின். ¶ தூங்குதல் - தொங்குதல். X இரண்டும்-காம நோயும் நாணும். + ஒத்தசீர - தம்முள் ஒத்திருக்குந் தன்மையன. | இறு வியாநின்றன - வருத்தாநின்றன. || அவற்றுள் - காமநாண்களுள். †† இஃ திற்றேவிடும் - உயிர் இறந்தேபோம்.

பண்ணுவதாய காமமும் அதனை ஒழியப்பண்ணுவதாய நாணும் தம்முள் ஒத்து உயிரினை இறச்செய்கின்றன; யான்அவற்றுள் ஒன்றின்கண் நிற்க மாட்டாமையால், இஃது இறந்தேவிடுமென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழிக்குக் காமமும் நாணும் தம்மு ளொத்து நின்று என்னை வருத்துகின்றன வென்றாளென்பது.

3. Both love & shame with my life like shoulder poles balance themselves on my wearied body that cannot sustain their burthen.



௪. காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து
மேமப் புணைமன்னு மில்.

[தலைவியர் காமக்கடற்படார்; படினும், அதனை * ஏற்றபுணையானீந் திக் கடப்பரென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) யாவர்க்கும் உளவாய் வருகின்ற † இவ்விரண்ட னுள்ளும் எனக்குண்டாகின்றது காமக்கடலே; அதனை நீந்தும் அரணு கியபுணை யில்லை, (எ - று).

இருவழியும் மன்னும் உம்மும் அசைநிலை. தூதுவிட்டு ‡ இதற்குப் புணையாகற்பாலையாய நீயும் ஆயிற்றிலை யென்பது கருத்து.

தெளி:—[தலைவியர் காமக்கடலில் வீழார்; வீழினும், அக்காமக்கடலை ஏற்றபுணையால் நீந்திக் கடப்பரென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லி யது.] (இ - ள்.) (யாவர்க்கும் உளவாய்வருகின்ற இவ்விரண்டனுள்ளும்) உண்டு—(எனக்கு) உண்டாகின்றது, காமக்கடலே - காமமாகிய கடலே யாம், அது நீந்தும் - அக்கடலைக் கடக்கும், ஏமப்புணை - காப்பாகிய புணை, இல் - இல்லை, (எ - று.)

(காமக்கடன் மன்னும், ஏமப்புணை மன்னுமென்னும்) இரண்டிடத்து முள்ள மன்னும் உம்மும் அசைநிலைகள். (தோழியே!) தூதுவிட்டு இதற் குப் புணையாதற்குரிய நீயும் ஆனுயில்லை யென்பதுகருத்து.

(க - து.) தலைமகள் தோழிக்குக் காமக்கடலைக் கடக்கும் புணை என்னிடத்திலையென்றாளென்பது.

4. It is true there is a sea of love; but there is no trusty raft to cross it with.



* ஏற்றபுணையால் - கடத்தற்குத் தக்கதாயதோணியால்.

† இவ்விரண்டனுள்ளும் - காமக்கடல் அதனை நீந்திக் கடத்தற்குரிய புணையென்னு மிரண்டனுள்ளும்.

‡ இதற்கு - காமக்கடலை நீந்திக்கடப்பதற்கு.

ரு. துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

[தூதுவிடாமைநோக்கித் தோழியோடு புலந்து சொல்லியது.]

**பரி:**—(இ - ள்.) **இன்பஞ் செய்தற்குரிய நட்பின்கண்ணே துன்ப வரவினைச் செய்ய வல்லவர் துன்பஞ் செய்தற்குரிய பகைமைக்கண் என்செய்வர் கொல்லோ?** (எ - று).

துப்புப் பகையுமாதல் * "துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மைய, னட்பெதிர்ந் தோர்க்கே யங்கை யண்மையன்" என்பதனானு மறிக. அப் பகைமையை ஈண்டுக் காணாமையின், † அவர் செய்வது மறியப்பெற்றிலே மென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. துயர்வரு தலை விலக்கலாயிருக்க ‡ அது செய்கின்றிலையெனப் புலக்கின்றமையின், துயர்வரவு செய்தாளாக்கியும் பிறளாக்கியுங் கூறினாள்.

**தெளி:**—[தூதுவிடாமைநோக்கித் தோழியோடு தலைமகள் பிணங்கிச் சொல்லியது.] (இ-ள்.) நட்பினுள் - (இன்பஞ்செய்தற்குரிய) நட்பினிடத்தே, துயர்வரவு - துன்பத்தின்வரவினை, ஆற்றுபவர்-செய்யவல்லவர், துப்பின் - (துன்பஞ்செய்தற்குரிய) பகையிடத்து, எவனாவர்கொல்— என்னசெய்வரோ, (எ-று).

துப்பு என்பது இங்குப் பகை யென்னும் பொருளில் வந்தது. அப் பகையினை இங்குக் காணாமையால், அவர் செய்வதும் அறியப்பெற்றிலேமென்பதுதோன்ற நின்றமையால், மன் ஒழியிசைப்பொருளில் வந்தது. துயர்வருதலை விலக்கலாயிருக்க (தோழியே! நீ) அது செய்கின்றிலை யென்று பிணங்குகின்றமையால், தோழியைத் துயர்வரவு செய்தாளாக்கியும் பிறளாக்கியும் சொல்லினாள்.

(க - து.) தலைமகள் தோழியோடு பிணங்கி நட்பாயுள்ளபோதே துன்பஞ் செய்யவல்லவர் பகை நேர்ந்தபோது துன்பஞ் செய்யா தொழிவரோ என்றாளென்பது.

5. He who can work woe in friendship, what can he not produce out of enmity ?



* புறநானூறு 380. இதன்பொருள். பகையாய் எதிர்ந்தோர்க்குக் கருதுதற் கியலாத சேண்மையனாவன்; நட்பாய் எதிர்ந்துவந்தவர்க்கு அகங்கை (நெல்லிக்கனிபோன்று) அண்மையா யிருப்பவன் என்பது. போர்முகத்தன்றி யேனைய விடத்துப் பகைவர் காண்டற்கரியனாயும் நண்பினர் காண்டற்கெளியனாயும் இருப்பன் என்பது கருத்து. இங்குத் துப் பென்பது பகையென்னும் பொருளை யுணர்த்தியவாறறிக. சேய்மை- தூரம்; அண்மை-சமீபம்.

† அவர் - பகைவர். ‡ அது - துயர்வருதலை விலக்கலை.

௬. இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது.

[காமத்தா னின்பமுற்றார்க்கு * அதனினாய துன்பமும் வருமென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) காமம் புணர்வா லின்பஞ்செய்யுங்கால், அவ்வின்பங் கடல்போலப் பெரிதாம் ; இனி அதுதானே பிரிவாற் றுன்பஞ்செய்யுங்கால், அத்துன்பம் அக்கடலினும் பெரிதாம், (எ - று).

† மற்று-வினைமாற்றின்கண் வந்தது. அடுங்கால் என வந்தமையின், ‡ மறுதலை யெச்சம் வருவிக்கப்பட்டது. பெற்றவின்பத்தோ ¶ டொத்துவரின் ஆற்றலாம் ; § இஃததனளவன்றென்பது கருத்து.

தெளி:—[காமத்தால் இன்பமுற்றவர்க்கு அதனினாகிய துன்பமும் வருமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்) காமம்-காமமானது [புணர்ச்சியால் இன்பஞ்செய்யுங்கால்), இன்பம்-அவ்வின்பம், கடல் - கடல் (போலப் பெரிதாம்), மற்றஃது-இனி அக்காமந்தானே, அடுங்கால்-(பிரிவினால்) துன்பஞ்செய்யுங்கால், துன்பம்-அத்துன்பம், அதனிற்பெரிது - அக்கடலினும் பெரிதாம், (எ - று).

மற்றென்னுமிடைச்சொல் வினைமாற்றுப் பொருளில் வந்தது. அடுங்கால் என வந்தமையால், அதற்கு மறுதலையான இன்பஞ்செய்யுங்கால் என்னும் வினையெச்சம் வருவிக்கப்பட்டது. பெற்றவின்பத்தோடு ஒத்துவரின் பொறுத்தல்கூடும் ; இஃது அதனது அளவன்று என்பது கருத்து.

(க - து.) தலைமகள் தோழிக்குக் காமம் புணர்ச்சியால் விளைக்கும் இன்பத்தினும் பிரிவால் விளைக்கும் துன்பம் பெரிதாமென்றாள் என்பது.

6. The pleasure of love is as great as the sea ; but the pain of parting love is far greater.



* அதனின் - அக்காமத்தினால்.

† மற்று என்னுமிடைச்சொல் (காமம் கடல்போலப் பெரிது என்பதன்கண்) பெரிது என்னும் வினையை மாற்றி (யொழித்து)ச் சிறிது என்னும் வினையைத் தந்து நின்றமையின், வினைமாற்றாயிற்று.

‡ மறுதலையெச்சம்-இன்பஞ்செய்யுங்கால் (இன்பஞ்செய்யும் போது) என்னும் (செயின் என்னும் வாய்பாட்டு) வினையெச்சம்.

¶ ஒத்துவரின் - (துன்பம்) சமமாகவந்தால்.

§ இஃது அதன் அளவன்று - இத்துன்பம் அவ்வின்பத்தின் அளவன்று.

எ. காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன்.

[காமக்கடல் * நிறை புணையாக நீந்தப்படு மென்றாட்குச் சொல்லியது.]

பரி:—(இ-ள்.) காமமாகிய கடலை † நீந்தாதே னல்லேன்; நீந்தியும் ‡ அதற்குக் கரைகாண்கின்றிலேன், அக்காணுமைக் காலத்தான் எல்லாருந் துயிலும் அரையிருளாயிற்று, அவ்வரை யிருட்கண்ணும் ¶ அதற்கோரு துணையின்றியானேயாயினேன், ஆயும் | இறந்துபட்டுய்ந்துபோகாதுளேனுகா நின்றேன், ஈதோரு தீவினைப்பயனிருந்த வாறென்? (எ - று).

⁝ கடுமை ஈண்டு மிகுதிக்கணின்றது. [] உம்மை முன்னுங் கூட்டப்பட்டது. யானேயாயினேனென்பது நீதுணையாயிற்றிலை யென்னுங் குறிப்பிற்று.

தெளி:—[காமக்கடல் நிறைபுணையாக நீந்தப்படுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) காமக்கடும்புனல்-காமமாகிய பெரிய கடலை, (நீந்தினேன்), நீந்தி—நீந்தியும், - கரைகாணேன் - (அதற்குக்)கரை காண்கின்றிலேன், (அக்காணுமைக் காலந்தான் எல்லாரும் நித்திரைசெய்யும் பாதியிரவாயிற்று), யாமத்தும் - அப்பாதியிரவிலும், யானே - (அதற்கு ஒரு துணையில்லாமல்) யானே (ஆயினேன்), (ஆயும்), உளேன்-இறவாதிருக்கிறேன், (ஈதொரு தீவினைப்பயன் இருந்தவிதம் என்?) (எ - று).

கடுமை யென்பது இங்கு மிகுதிப்பொருளில் வந்தது. உம்மை முன்னுங் கூட்டப்பட்டது. யானேயாயினேனென்பது (தோழியே!) நீ துணையாயினுயில்லையென்னுங் குறிப்பினதாம்.

---

* மறைந்ததாகிய ஒரு காரியத்தைப் பிறரறியாமல் செய்தல் நிறை யெனப்படும். "நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை" என்பது கலித்தொகை.

† நீந்தாதேன் அல்லேன் என்னும் இரண்டெதிர்மறைவினையும் நீந்தினேனென்னும் ஒருடன்பாட்டுப்பொருளைத் தந்து நின்றன.

‡ அதற்கு - காமமாகிய கடலுக்கு.

¶ அதற்கு - காமமாகியகடலுக்கு.

| இறந்துபட்டு - மடிந்து, உய்ந்துபோகாது - அக்காமக்கடலினின்று (துன்பத்திலிருந்து) தப்பிப்போகாது, உளேனுகா நின்றேன் - உயிரோடிருக்கிறேன்.

⁝ காமக்கடும்புனல் என்பதன்கணுள்ள கடுமை (கடும்) என்பது இங்குக் காமக்கடலின் மிகுதியை யுணர்த்திநின்றது.

[] யாமத்தும் என்ற வும்மை நீந்தி யென்பதனோடுங் கூட்டப்பட்டது.

(க-து.) தலைமகள் தோழிக்குக் காமக்கடலை நீந்தமுடியாது ஒருதுணையுமின்றி உறக்கமற்றிருக்கின்றேனென்றாள் என்பது.

7. I swam across the cruel tide of love, but have not descried its shore; even at midnight I am alone; withal I live!



அ. மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்லை துணை.

[இரவின் கொடுமைசொல்லி யிரங்கியது.]

பரி:—(இ - ள்.) இவ்விரா அளித்தாயிருந்தது; உலகத்து * நிலைபெறுகின்ற உயிர்களையெல்லாந்தானே துயிலப்பண்ணுதலான் என்னையல்லது வேறுதுணை உடைத்தாயிற்றில்லை, (எ - று).

† துயிற்றியெனத் திரிந்துநின்ற வினையெச்சம் அவாய்நிலையான் வந்த உடைத்தாதலோடு முடிந்தது. துணையோ ‡ டொன்றுகின்ற உயிர்களெல்லாம் விட்டு இறந்துபடு மெல்லையேனுகிய என்னையே துணையாகக் கோட்லின் அறிவின்றென்பதுபற்றி 'அளித்து' என்றாள்; ¶ இகழ்ச்சிக் குறிப்பு.

தெளி:—[தலைமகள் இரவின் கொடுமையைக் கூறி இரங்கியது.] (இ - ள்.) இரா - இவ்விரவு, அளித்து - அன்புடையதாயிருந்தது, மன்னுயிரெல்லாம் - (உலகத்தில்) நிலைபெறுகின்ற உயிர்களையெல்லாம், துயிற்றி- (தானே) தூங்கச்செய்தலால், என்னல்லது - என்னையல்லாமல், துணை- (வேறு) துணை, இல்லை - (உடையதாயிற்று) இல்லை, (எ - று).

துயிற்றியெனத் திரிந்து நின்ற துயிற்றலான் என்னும் வினையெச்சம் அவாய்நிலையால் வந்த உடையதாயிற்று என்பதைக்கொண்டு முடிந்தது. (இரா) துணையோடு ஒன்றுகின்ற உயிர்களையெல்லாம்விட்டு இறந்துபடுஞ்

* நிலைபெறுதலாவது பிறப்பு இடையறாமையின், எஞ்ஞான்றும் உடம்போடு காணப்பட்டுவருதல்.

† துயற்றலான் என்னும் (செயின் என்னும் வாய்பாட்டு) வினையெச்சம் துயிற்றியென (ச்செய்து என்னும் வாய்பாட்டெச்சமாய்த்) திரிந்து நின்றது; அவ்வினையெச்சம் அவாய்நிலையா (வேண்டிநிற்றலா)ல் வந்த உடைத்தாயிற்று என்னும் வினையோடுமுடிந்தது. துயிற்றியெனத் திரிந்து நின்ற வினையெச்சம் உடைத்தாதலென்பதனை யவாவி நின்றதெனக்.

‡ ஒன்றுகின்ற - பொருந்தியிருக்கின்ற.

¶ இரவினை அளித்து என்று குறிப்பாக இகழ்ந்து கூறினளெனக். குறிப்பாக இகழ்ந்து கூறலை "பல்சான் றீரே பல்சான் றீரே, கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட், பயனின் மூப்பிற் பல்சான் றீரே" என்று புறநானூறு கூறுதலானுமறிக.

சமயமுடையேனாகிய என்னையே துணையாகக் கொள்ளுதலால் அறிவுடைய தன்றென்பது பற்றி 'அளித்து' என்றாள்; இகழ்ச்சிக்குறிப்பு.

(க - து.) தலைமகள் துயில்வாராமைபற்றி யிரவையிகழ்ந்து கூறினாளென்பது.

8. The night which graciously lulls all living beings in soft slumber, keeps me alone for her companion.



கூ. கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா
ணெடிய கழியு மிரா.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) **காதலரோடு நாமின்புற்ற முன்னாள்களிற் † குறிய வாய் அவர்பிரிவாற்றேமாகின்ற இந்நாள்களிலே ‡ நெடியவாய்ச் செல்கின்றகங்குல்கள் அக்கொடியாரதுகொடுமைக்குமேலே தாங் கொடுமை செய்யா நின்றன, (எ - று).**

தன்னாற்றாமை கருதாது பிரிதலின் 'கொடியார்'என்றாள். கொடுமை கடிதின் வாராது நீட்டித்தல். அவர் பிரிவானும்நீட்டிப்பானு முளதாய ஆற்றாமைக்குக் கண்ணோடாமைமேலும் பண்டையி னெடியவாய்க் கொடிய வாகா நின்றன வென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) (காதலரோடு நாம் இன்புற்றமுன்னாள்களில் குறியவாயிருந்து) இந்நாள் - (அவர்பிரிவைப் பொறுக்கமாட்டேமாகின்ற) இந்நாள்களிலே, நெடிய - நெடியவாய், கழியும் - செல்கின்ற, இரா - இரவுகள், கொடியார் - அக்கொடியவரது, கொடுமையின் - கொடுமைக்குமேலே, தாம்கொடிய-தாம்கொடுமைசெய்யாநின்றன, (எ-று).

தனதாற்றாமையை நினையாது பிரிதலால் (தலைமகனைக்) 'கொடியார்' என்றாள். கொடுமை-விரைவில்வாராமல்நீட்டித்தல். (இரவுகள்) அவர் பிரிவாலும் நீட்டிப்பாலும் உண்டாகிய ஆற்றாமைக்கு முகங்கொடாமைமேலும் முன்னையி னெடியவாய்க் கொடியவாகா நின்றனவென்பதாம்.

(க - து.) தலைமகள் தலைவர் கொடுமையினும் இரவின் கொடுமை பெரிதென்றாளென்பது.

9. The long (hours of) night of these (sad) days are more cruel than the cruelty of him who is torturing me.



ம. உள்ளம்போன் றுள்வழிச் செல்கற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண்.

† குறியவாய் - குறுகியனவாய். ‡ நெடியவாய்-நீண்டனவாய்.

[நின்கண்கள் பேரழ கழிகின்றனவாகலின், அழற்பாலே யல்லேயென்றாட்குச் சொல்லியது].

பரி:—(இ - ள்.) மனம்போலக் காதலருள்ள தேயத்துக் கடிதிற் செல்ல வல்லனவாயின், என் கண்கள் இங்ஙனம் வெள்ளமாகிய தந் நீரை நீந்தா, (எ - று).

† அது மாட்டாமையின் இனி அவற்றிற்கு நீந்துதலே யுள்ளதென் பது படநின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. ‡ மனத்திற்குச் செலவாவது நினைவே யாகலின் 'உள்ளம் போன்று' என்றும், மெய்க்கு நடந்து செல்லவேண்டுதலிற் கண்கள் அதனொடு சென்று காதலரைக்காண டல் கூடாதென்னுங் கருத்தாற் 'செல்கற்பின்' என்றுங் கூறினள். இத னான் வருகின்ற வதிகாரமுந் தோற்றுவாய் செய்யப்பட்டது

தெளி:—[நின் கண்கள் பேரழகு அழிகின்றன வாகலின், அழாதிரு வென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ-ள்.)உள்ளம்போன்று— மனம்போல, உள்வழி - (காதலர்) இருக்கின்ற நாட்டிற்கு, செல்கற்பின் - (கடிதில்) செல்லவல்லனவாயின், என்கண் - எனது கண்கள், (இப்படி), வெள்ளநீர் - வெள்ளமாகிய (தமது) நீரை, நீந்தல - நீந்தமாட்டா, (எ-று.)

அது மாட்டாமையால் இனி அக்கண்களுக்கு நீந்துதலே உள்ளதென் பது தோன்ற நின்றமையால், மன் ஒழியிசைப் பொருளில்வந்தது. ஓ - அசை. மனத்திற்குச் செலவாவது நினைவேயாகலால் 'உள்ளம்போன்று' என்றும், மெய்க்கு நடந்து செல்லவேண்டுதலால் கண்கள் அதனோடு போய்க் காதலரைக் காணுதல் கூடாதென்னுங் கருத்தால் 'செல்கற்பின்' என்றும் சொல்லினள். இக்குறளால் வருகின்ற அதிகாரமும் தோற்று வாய் செய்யப்பட்டது. செலவு - செல்லுதல்; மெய் - உடம்பு ; தோற்று வாய்-தொடக்கம்.

(க - து.) தலைமகள் தோழிக்கு மனம்போலக் கண்கள் தலைவருள்ள தேயத்திற்குப் போக முடியாமையால், ஓயாதழுகின் றனவென்றாளென்பது.

10. Could mine eyes, like my thoughts, go forth to the abode of my absent lover, they would not swim in this flood of tears.



† அது - (கண்களுக்கு) மனம்போலக் காதலருள்ள தேயத்திற்கு விரைந்து செல்லுதல்.

‡ "சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெருந்துணையு, நின் றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி - முன்றின், முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற், குழங்குபின் சென்றவென் னெஞ்சு" என்னுஞ் செய்யுளு மிங்குக் கவனித்தற் பாலதாம்.

## 3 - ம் அதிகாரம்.

## கண்விதுப்பழிதல்--Eyes consumed with sorrow.

**பரி:—அஃதாவது கண்கள் தங்காட்சி விதுப்பான் வருந்துதல். காட்சி விதுப்பு—தலைமகனைக் காண்டற்கு விரைதல். * இது படரான் மெலிந்தவழி நிகழ்வதாகலின், படர்மெலிந்திரங்கலின் பின் வைக்கப்பட்டது.**

**தெளி:**—*அஃதாவது கண்கள் தமது காட்சிவிதுப்பினால் வருந்துதல். காட்சிவிதுப்பாவது தலைமகனைக்காணுதற்கு விரைதல். இது படரால் மெலிந்தவிடத்து நிகழ்வதாகலால், படர்மெலிந்திரங்கலின்பின் வைக்கப் பட்டது.*

க. கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.

[*நின்கண்கள் கலுழ்ந்து தம்மழ கிழவாநின்றன; நீயாற்றல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.*]

**பரி:—(இ - ள்.) இத்தணியா நோயை யாமறிந்தது † தாமேமக்குக் காதலரைக் காட்டலானன்றே; ‡ அன்று ¶ அத் தொழிலவாய கண்கள் இன்று எம்மைக் காட்டச்சொல்லி யழுகின்றது என் கருதி? (எ - று).**

*காட்டவென்பதற் கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. ††இன்றுந்தாமே காட்டுதலல்லது யாங்காட்டுதல் யாண்டையதென்பதாம்.*

**தெளி:**—[*நின்கண்கள் அழுது தமது அழகை இழக்கின்றன; நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத்தலைமகள் சொல்லியது.*](இ-ள்.) *தண்டாநோய் - இத்தீராத (காம) நோயை, யாம் கண்டது - யாம் அறிந்தது, தாங்காட்ட - தாம் (எமக்குக் காதலரைக்) காட்டலாலன்றோ, கண்தாம் - (அன்று அத்தொழிலவாய) கண்கள், கலுழ்வது - (இன்று எம்மைக் காட்டச்சொல்லி) அழுகின்றது, எவன் கொல் - யாது நினைத்து?* (எ-று).

*காட்ட வென்பதற்கேற்ற காதலரை யென்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. (கண்கள்) இன்றுந் தாமே (அவரை எமக்குக்) காட்டுதலல்லாமல் யாம் (அவற்றிற்குக்) காட்டுதல் எவ்வாறுமென்பதாம்.*

---

* *இது - கண்விதுப்பழிதல்.*

† *தாம் - கண்கள்.* ‡ *அன்று - காதலர் எதிர்ப்பட்ட அந்நாளில்.*

¶ *அத்தொழிலவாய - காணுதற்றொழிலையுடையனவாய.*

†† *இப்பொழுதும் கண்கள் தாமே எமக்குக் காதலரைக் காட்டுவதல்லாமல் யாம் அக்கண்களுக்கு அவரைக்காட்டுவது எவ்வாறுமென்பது.*

(க - து.) தலைமகள் தோழிக்குத் தாம் காட்ட யாங்கண்ட தலைவரைக் கண்கள் எம்மைக் காட்டச்சொல்லி யழுகின்றன வென்றாளென்பது.

1. As this incurable love - sickness has been caused by my eyes which showed him to me, why then should they now weep for him.



உ. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைதலுழப்ப தெவன்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) மேல் விளைவதனை யாராய்ந்தறியாது அன்று காதலரை நோக்கிநின்ற உண்கண்கள் இன்று * இது † நம்மால்வந்த தாகலிற் பொறுத்தல் வேண்டுமெனக் கூறுபடுத் துணராது துன்ப முழப்பது என்கருதி? (எ - று).

° விளைவது—பிரிந்துபோயவர் வாராமையிற் காண்டற்கரியராய் வருந்துதல். முன்னே வருவதறிந்து அது காவாதார்க்கு ‡ அது வந்தவழிப் பொறுத்தலன்றே யுள்ளது; ¶ அதுவுஞ்செய்யாது வருந்துதல் கழிமடச் செய்கை யென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ-ள்.) தெரிந்துணரா - (மேல்விளைவதனை) ஆராய்ந்தறியாமல், நோக்கிய - (அன்று காதலரை) நோக்கிநின்ற, உண்கண்-(மை) உண்டகண்கள், (இன்று இது நம்மால் வந்ததாகலின் பொறுத்தல் வேண்டுமென்று), பரிந்துணரா - கூறுபடுத்தி யறியாமல், பைதலுழப்பது - துன்பத்தை யனுபவிப்பது, எவன் - யாது நினைத்து? (எ - று).

விளைவது - பிரிந்துபோய காதலர் வாராமையால் காணுதற்கரியராய் வருந்துதல். முன்னே வருவதை யறிந்து அதனைக் காவாதார்க்கு அது வந்தவிடத்துப் பொறுத்தலன்றே உள்ளது; அதுவுஞ்செய்யாது வருந்துதல் கழிமடச்செய்கையென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழிக்கு முன்னர்ப் பின்வருவதை யாராய்ந்தறியாது காதலரை நோக்கி நின்ற கண்கள் இப்போது அவரைக்காணாது வருந்துதல் யாதுநினைத்தோவென்றாள் என்பது.

2. Why should the eyes that then looked unwittingly now endure sorrow, without feeling keenly their fault.



---

* இது - இவ்வருத்தம். † நம்மால் - கண்களாகியநம்மால்.
‡ அது - மேல்விளையும் வருத்தம். ¶ அதுவும் - பொறுத்தலும்.

௩. கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்.) இக்கண்கள் அன்று காதலரைத் தாமே விரைந்து நோக்கி இன்றுந் தாமே யிருந்தழுகின்ற விது நம்மாற் சிரிக்கத் தக்க வியல்பினையுடைத்து, (எ - று).

*கண்களென்பது * அதிகாரத்தான் வந்தது. இதுவென்றது † மேற் கூறிய கழிமடச் செய்கையை. ‡ அது வருமுன்னர்க் ¶ காப்பார்க்கு நகை விளைக்கு மாகலான் 'நகத்தக்க துடைத்து' என்றாள்.*

தெளி:—[இதுவுமது.] (இ-ள்.) (இக்கண்கள்)தாம் கதுமெனநோக்கி-(அன்று காதலரைத்) தாமே விரைந்து நோக்கி, தாமேகலுழும் - (இன்றும்) தாமேயிருந்து அழுகின்ற, இது - இவ்வறியாமைச் செயல், நகத்தக்கது - (நம்மால்) சிரிக்கத்தக்க இயல்பினை, உடைத்து-உடையது, (எ-று).

*கண்களென்பது அதிகாரத்தால் வந்தது. இதுவென்றது முன்னர்க் கூறிய கழிமடச் செய்கையை. அச்செயல் வருமுன்னே காப்பார்க்கு நகைவிளைக்கு மாகலால் 'நகத்தக்க துடைத்து' என்றாள்.*

(க - து.) *தலைமகள் தோழிக்கு அன்று காதலரைத் தாமே விரைந்துநோக்கிய கண்கள் இன்றுந் தாமேயிருந்தழுதல் நகைக் கிடமாயிற்றென்று சொன்னது.*

3. The eyes themselves looked keenly on him and now they weep ; Is not this folly laughable ?

௪. பெயலாற்ற நீருலந்த வுண்க ணுயலாற்ற
வுய்வினோ யென்க ணிறுத்து.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்.) உண்கண்கள் அன்று யாருமுய்யமாட்டாமைக்கேதுவாய ஒழிவில்லாத நோயை என்கண்ணே நிறுத்தி, தாமு மழுதலை மாட்டாவண்ணம் நீர் வற்றிவிட்டன, (எ - று).

* *கண்விதுப்பழிதலென்னும் அதிகாரத்தினால்.*

† *மேற்கூறிய - இவ்வதிகாரத்தின் இரண்டாவது குறளின் விசேடவுரையிற்கூறிய.*

‡ *அது - கழிமடச்செய்கை; (மிக்கவறியாமையுற்றுச் செய்யுஞ்செயல்).*

¶ *காப்பார்க்கு - கழிமடச்செய்கை வாராதபடி யதனைத் தடுப்பார்க்கு.*

*நிறுத்தல்—பிரிதலும் பின்கூடாமையு முடையாரைக் காட்டி * அத னல் நிலைபெறச்செய்தல். முன் எனக்கின்னுதன செய்தலாற் பின் † தமக்கின்னுதன தாமே வந்தன வென்பதாம்.*

தெளி:—(இதுவுமது.) (இ - ள்.) உண்கண் - (மை) உண்டகண்கள், (அன்று), உயலாற்ற - (யான்) பிழைக்கமாட்டாமைக்குக் காரணமாகிய, உய்வில்நோய் - ஒழிவில்லாத நோயை, என்கண் - என்னிடத்தே, நிறுத்து- நிறுத்தி, பெயலாற்றா - (தாமும்) அழுதலைமாட்டாவண்ணம், நீருலந்த - நீர்வற்றிவிட்டன, (எ - று).

நிறுத்தல் - (உண் கண்கள்) பிரிதலும் பின்கூடாமையுமுடையாரை (எனக்குக்) காட்டி அதனல் (நோயை என்னிடத்து) நிலைபெறச்செய்தல். (உண் கண்கள்) முன் எனக்குத் துன்பங்களைச் செய்தலால் பின் தமக்குத் துன்பங்கள் தாமே வந்தனவென்பதாம்.

(க — து.) தலைமகள் தோழிக்குக் கண்கள் யான் பிழைக்க மாட்டாமைக்குக்காரணமாய நோயை என்னிடத்தே நிலைபெறச் செய்து தாமுமழுது நீர்வற்றிவருந்துகின்றன வென்றாளென்பது.

4. These eyes have brought on me everlasting disease that knows no remedy; and they can weep no more, the fountain of tears having dried up.



ரு. படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண்.

(இதுவுமது.)

பரி:—(இ-ள்.) எனக்குக் கடலுஞ் சிறிதாம் வண்ணம் பெரிதாய காமநோயைச் செய்த என் கண்கள் ‡ அத்தீவினையாற் ¶ றாழுந் துயில் லிலவாய்த் துன்பத்தையு முழவா நின்றன, (எ - று).

*காமநோய் × காட்சியான் வந்ததாகலின், + அதனைக் கண்களே செய் ததாக்கிக் கூறினாள். துன்பம் - அழுதலானாயது.*

தெளி:—(இதுவுமது.) (இ - ள்.) (எனக்குக்) கடலாற்றா - கடலுஞ் சிறிதாம் வண்ணம், (பெரிதாகிய), காமநோய்-காமநோயை, செய்த—,என் கண் - எனது கண்கள், (அத்தீவினையால்), படலாற்றா - (தாமும்) தூங்கா தனவாய், பைதலுழக்கும் - துன்பத்தையும் அனுபவிக்கின்றன, (எ - று).

* அதனால் - காட்டுதலால். † தமக்கு - கண்களுக்கு.

‡ அத்தீவினையால் - காமநோயைச்செய்த அத்தீவினையால்.

¶ தாமும் - கண்களும். × காட்சியான் - தலைமகனைக்காணுதலால்.

+ அதனை - காமநோயை.

காமநோய் காட்சியால் வந்ததாகலால், அதனைக் (கடலாற்றக், காம நோய் செய்தவென் கண் எனக்) கண்களே செய்ததாக்கிச் சொல்லினள். துன்பம் - அழுதலாலாகியது.

(க-து.) தலைமகள் தோழிக்கு எனக்குக் கடலுஞ் சிறிதாம் வண்ணம் பெரிதாய காமநோயைச் செய்த என் கண்கள் அத் தீவினையால் தாமுந் துயிலாது வருந்துகின்றனவென்றாளென்பது.

5. Mine eyes have caused me a love that is greater than the sea and they now endure the pangs that banish sleep.



௬. ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) எமக்கிக் காமநோயினைச் செய்த கண்கடாமும் இத்துயிலா தழுதற்கண்ணே பட்டது மிகவு மினிதாயிற்று, (எ - று).

ஓவென்பது மிகுதிப்பொருட்கண்வந்த குறிப்புச்சொல். * தம்மால் வருத்தமுற்றவெமக்கு † அது தீர்ந்தாற்போன்ற தென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) எமக்கு—,இந்நோய் - இக்காம நோயினை, செய்தகண் - செய்தகண்கள், தாஅம் - தாமும், இதற்பட்டது - இத்தூங்காமல் அழுதலிலே பட்டது, ஓஒவினிதே - மிகவும் இனிதா யிற்று, (எ - று).

ஓவென்பது மிகுதிப்பொருளில் வந்த குறிப்பிடைச்சொல். தம்மால் வருத்தமடைந்த எமக்கு அவ்வருத்தம் தீர்ந்தாற்போன்ற தென்பதாம்.

(க - து.) எனக்கு இக்காமநோயைச் செய்த கண்கள் துயி லாது வருந்துதல் எனக்கினிதாயிற்றென்று ளென்பது.

6. The eyes that brought on me this love-sickness have themselves been seized with this (sleepless) suffering. Oh! this great delightfulness.



* தம்மால் - கண்களால்.

† எமக்குக் காமநோயினைச்செய்த கண்கள் தாமும் துயிலாது வருத்த முறுதல் அக்காமநோய் தீர்ந்தாற்போன்றதா மென்று தலைமகள் கூறினு ளென்பதாம். ஒருவர் தமக்குத் தீமைசெய்தவர்க்குத் தீமை வந்தால், தமக்கு அத்தீமை தீர்ந்தாற்போலக்கருதுதல் உலகியல்பா மென்க.

எ. உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) விழைந்து உண்ணெகிழ்ந்து விடாதே அன்று அவரைக் கண்ட கண்கள் இன்று இத்துயிலாதழுங்கலாய துன்பத்தினை யுழந்துழந்து † தம்மகத்துள்ள நீர் அற்றேபோக, (எ - று).

அடுக்கு இடைவிடாமைக்கண் வந்தது. அறுதலாகிய இடத்து நிகழ் பொருளின்றொழில் இடத்தின்மே னின்றது.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) விழைந்து - விரும்பி, இழைந்து - உள்குழைந்து, வேண்டி - விடாதே, அவர்க்கண்டகண் - (அன்று) அத்தலைவரைப் பார்த்த கண்கள், உழந்துழந்து - (இன்று இந்தத் தூங்காமல் வருந்துதலாகிய துன்பத்தினை) அனுபவித்து அனுபவித்து, உண்ணீர் - (தம்) அகத்துள்ள நீர், அறுக - அற்றேபோகுக, (எ-று).

உழந்துழந்து என்னும் அடுக்கு இடைவிடாமைப் பொருளில் வந்தது. இடைவிடாமை - நடுவே நீங்காமை. அறுதலாகிய இடத்து (கண்களில்) நிகழ்பொருளின் (நீரின்) தொழிலை இடத்தின் (கண்களின்) மேலேற்றிக் 'கண்...நீரறுக' என்று கூறினமையின், இஃது இடத்துநிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேலாய உபசாரவழக்காம்.

(க - து.) அன்று காதலரை ஆசையாய்க்கண்ட கண்கள் இன்று மிகவும் வருந்தி நீரற்றுப்போகுக வென்றுசொன்னது.

7. Let the eyes that became tender by gazing intently on him, suffer so much as to exhaust the stream of their tears.

அ. பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண்.

[காதலர் பிரிந்துபோயினாரல்லர்; அவரீண்டுளர்; அவரைக் காணுமளவும் நீயாற்றல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நெஞ்சால் விழையாதுவைத்துச் சொன்மாத்திரத்தால் விழைந்தவர் இவ்விடத்தேயுளர்; அவ்வுண்மையாற்பயன் யாது? அவரைக்கண்கள் காணாதமைகின்றனவில்லையாயின, (எ-று).

செயலாற்பிரிந்து நின்றமையிற் 'பேணாது' என்றும், ... நலம்

---

† தம்மகத்துள்ள - தம்மிடத்திருக்கின்ற

* நலம்பாராட்டல் - தலைமகளைப் புணர்தற்குமுன்பு இன்றியமையாமை கூறிப் புணர்ந்தபின்பும் அதிகரித்தலால், அப்புணர்ச்சி நலத்தைத் தலைமகன் புகழ்ந்து சொல்லுதல்.

பாராட்டிப் * பிரிவச்சமும் † வன்புறையுங் கூறினாளாகலிற் 'பெட்டார்' என்றுங் கூறினாள். ‡ மன்-ஒழியிசைக்கண் வந்தது. ¶ மற்று-வினைமாற்றின்கண் வந்தது. ஓகாரம் - அசைநிலை. யானுற்றவுங் கண்கள் அவரைக் காண்டற்கு விரும்பாநின்றன வென்பதாம். X இனிக் கொண்கனையென்று பாடமாயின், என் கண்கள் தம்மைக் காணுதமைகின்ற கொண்கனைத் தாங் காணு தமைகின்றனவில்லை ; இவ்வாறே தம்மை யொருவர் விழையாதிருக்கத் தாமவரை விழைந்தார் உலகத்துளரோ வென்றுரைக்க. இதற்கு மன் அசைநிலை.

தெளி:—[காதலர்பிரிந்து போனாரல்லர்; அவர் இங்கு இருக்கின்றார்; அவரைப் பார்க்குமளவும் நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) பேணுது-(மனத்தால்) விரும்பாதிருந்தும்,

"உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன், குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடியிடைதோள், புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய், மணந்தாழ் புரிகுழலா ளல்குல் போல வளர்கின்றதே." என்று திருக்கோவையார் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

* பிரிவச்சம் - பிரிதற்கு அஞ்சுதல். "பிரிவச்சமென்பது தான் பிரிய அஞ்சிற்றும் பிரிவச்சம் ; அவளைப்பிரியவஞ்சுவித்ததும் பிரிவச்சம் ; ஆகலிற் பிரிவச்சமெனப்பட்டது. அது யாங்ஙனம் சொல்லுமோவெனின், நின்னிற் பிரியேன், பிரியின் ஆற்றேன் என்னும்" என்று இறையனாகப்பொருளிரண்டாவது சூத்திரத்தினுரையிற் கூறப்பட்டிருக்கின்றது.

† வன்புறை - தலைமகள் ஐயுற்றவிடத்துத் தலைமகன் ஐயந்தீரவற் புறுத்திக் கூறுதல். (கைவிடேனென்று பலவுறுதிமொழிகளைக்கூறல்). "ஐயந் தீர்த்தல் பிரிவறி வுறுத்தலென், றெய்திய வன்புறை யிருவகைத்தாகும்" என்பது அகப்பொருள் விளக்கம்.

‡ அவ்வுண்மையாற்பயன்யாது என்னும் ஒழிந்தசொற்பொருளைத் தந்துநின்றமையின், மன் என்னுமிடைச்சொல் ஒழியிசைக்கண் வந்ததாயிற்று.

¶ மற்று என்னும் இடைச்சொல் உளர் என்னும் வினையைமாற்றி இலர் என்னும் வினையைத்தந்து நின்றமையின், வினைமாற்றாயிற்று.

X பேணது பெட்டா ருளர்மன்னோ கொண்கனைக், காணு தமைவில கண் என்றுபாடமானால், அதற்குக் கண் - எனதுகண்கள், கொண்கனை - (தம்மைக்காணுமற்பொருந்தியிருக்கின்ற) தலைமகனை, காணுது - (தாம்) காணுமல், அமைவில - பொருந்துகின்றன வில்லை, பேணுது-(இவ்வாறே தம்மை யொருவர்) விழையாதிருக்க, பெட்டார் - (தாமவரை)விரும்பினார், உளரோ-(உலகத்தில்) இருக்கின்றாரோ, என்பதுரை. இவ்வுரைக்கு மன் என்பது அசைநிலை.

பெட்டார் - (சொல்மாத்திரத்தால்) விரும்பியவர், உளர் மன் - (இங்கே) இருக்கின்றார், (அவ்விருத்தலால் பயன்யாது), கண் - கண்கள், மற்று அவர்க்காணாது - அவரைக் காணாமல், அமைவில - பொறுக்கின்றன இல்லையாயின, (எ - று).

(காதலர்) செயலாற்பிரிந்து நின்றமையால் 'பேணாது' என்றும், முன்னே நலம்பாராட்டிப் பிரிவச்சமும் வன்புறையும் சொன்னாராகலால் 'பெட்டார்' என்றும் சொல்லினாள். மன் - ஒழியிசைப் பொருளில் வந்தது. மற்று - வினைமாற்றுப் பொருளில் வந்தது. ஒகாரம்-அசைநிலை. யான்பொறுக்கவும் கண்கள் அவரைக் காணுதற்கு விரும்புகின்றன வென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழிக்கு மனத்தால்விரும்பாது சொல் மாத்திரத்தால் விரும்பிய தலைவரை என்கண்கள்காண விரைகின்றனவென்றாள் என்பது.

8. Here he is who loved me with his lips, but not with his heart ; but mine eyes cannot rest by not seeing him.



௯. வாராக்கால் துஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண்.

[நீயுமாற்றி நின்கண்களுந் துயில்வனவாதல் வேண்டுமென்ற
தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) காதலர் வாராதஞான்று அவர் வரவு பார்த்துத் துயிலா ; வந்தஞான்று அவர் பிரிவஞ்சித் துயிலா ; ஆகலான், * அவ்விருவழியும் என்கண்கள் பொறுத்தற்கரிய துன்பத்தினையுடைய, ().

† ஆயிடையெனச் சுட்டு நீண்டது. இனி அவற்றிற்குத் துயில் ஒருஞான்றுமில்லை யென்பதாம்.

தெளி:—[நீயும்பொறுத்து உன்கண்களும் துயில்வனவாதல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) வாராக்கால் - (காதலர்) வாராத நாள்களில், துஞ்சா - (அவர் வரவுபார்த்துத்) தூங்காவாம், வரின் - வந்தநாள்களில், துஞ்சா - (அவர் பிரிவரென்று அஞ்சித்) தூங்காவாம், (ஆகலால்), ஆயிடை-அவ்விருவழியும், கண் - (எனது) கண்கள், ஆரஞருற்றன-பொறுத்தற்கரிய துன்பத்தையுடையனவாம், (எ-று).

---

* அவ்விருவழியும் - வாராதஞான்று வந்தஞான்று என்னும் இரண்டிடத்தும்.

† "தூக்கிற் சுட்டு, நீளின் யகரமுந் தோன்றுத னெறியே" என்று நன்னூல் கூறுவ திங்குணர்தற்பாலதாம்.

ஆயிடை யென்பதன்கண் அ என்னும் சுட்டு ஆ என நீண்டு நின்றது. இனி அக்கண்களுக்குத் தூக்கம் ஒருநாளும் இல்லையென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழிக்குத் தலைவர் வாராதபோதும் வந்தபோதும் என்கண்கள் தூங்காது வருந்துகின்றன வென்று கூறினாளென்பது.

9. When he comes not, they do not sleep; when he is present, no sleep comes; in either case mine eyes have troubles hard to bear.



ம. மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து

[காதலரை இவ்வூர் இயற்பழியாமல் அவர் கொடுமையை மறைக்க வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது).

**பரி:**—(இ - ள்.) எம்மைப்போலும் * அறைபறையாகிய கண்ணினையுடையார் தந்நெஞ்சின்க ணடக்கிய மறையை யறிதல் இவ்வூரின்கணுள்ளார்க்கு எளிது, (எ - று).

மறையென்றது ஈண்டு மறைக்கப்படுவதனை. அகத்து நிகழ்வதனைப் புறத்துள்ளார்க் கறிவித்தலாகிய தொழிலான் ஒற்றுமை யுண்மையின், † "அறைபறை கண்" என்றாள். இங்ஙனஞ் ‡ செய்யுள் விகார மாக்காது அறைபறைக் கண்ணாரென்று பாட மோதுவாரு முளர். யான் மறைக்கவும் இவை வெளிப்படுத்தாநின்றன வென்பதாம்.

**தெளி:**—[காதலரை இவ்வூரார் இயற்பழியாமல் அவர் கொடுமையை மறைக்க வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) எம்போல் - எம்மைப்போலும், அறைபறைகண்ணார் - அறைபறையாகிய கண்ணிணையுடையவர், அகத்து - (தமது) நெஞ்சில் (அடக்கிய), மறைபெறல் - இரகசியத்தை யறிதல், ஊரார்க்கு - இவ்வூரிலுள்ளவர்க்கு, அரிதன்று - எளிது, (எ - று).

ஆல் அசை. மறையென்றது இங்கு மறைக்கப்படுவதனை. உள்ளே நிகழ்வதனை வெளியே யிருப்பவர்க்கு அறிவித்தலாகிய தொழிலால் பறை

* அறைபறை - அறையப்படும்பறை. பறை - ஒருவாத்தியவிசேடம். "அறைபறை" என்னுங்குறளின் விசேடவுரையில் "பறை ஒருவன் கையாற் றன்னை யறிவித்த தொன்றனை யிடந்தோறுங் கொண்டுசென்று யாவரையு மறிவிக்குமாகலான்" என்று கூறியிருத்தலு மிங்குணர்தற்பாலதாம். † அறைபறையாகிய கண் என்றும் பாடமுண்டு.

‡ பறைக்கண் என்னும் பண்புத்தொகை ஒற்றுமிகாது 'பறைகண்' என்றாயது செய்யுள் விகாரமாமென்று கொள்ளாது அறைபறைக் கண்ணார் என்று பாடங் கூறுவாருமுண்டு.

யோடு கண்களுக்கு ஒற்றுமையுடைமையால் ' அறைபறை கண் ' என்றார். (காதலர் கொடுமையை) யான் மறைக்கவும் இக்கண்கள் வெளிப் படுத்துகின்றன வென்பதாம்.

(க - கூ) தலைமகள் தோழிக்கு என் மனத்துள்ள இரகசியத்தை என் கண்கள் இவ்வூரார்க்கு வெளிப்படுத்துகின்றன வென்றா ளென்பது.

10. If is easy for the people of this village to understand the mystery when eyes, as mine, like beaten drums, make plain.



## 4 - ம் அதிகாரம்.

### பசப்புறுபருவரல்:—*Suffering sallowness.*

பரி:—அது பசப்புற்றபருவரலென விரியும்; அஃதாவது பசப்புறுதலானாய வருத்தம். இதனைப் * பந்தெறிந்த வயர்வென்பது போலக் கொள்க. ‡ பசப்பாவது பிரிவாற்றுமையான் வருவதோர் நிறவேறுபாடு. † இது தலைமகனைக் காணப்பெறாதவழி நிகழ்வதாக லின், கண்விதுப்பழிதலின்பின் வைக்கப்பட்டது.

*தெளி:—பசப்புறுபருவரல் என்பது பசப்புற்றபருவரல் என்று விரியும்; அஃதாவது பசப்புறுதலாலாகிய வருத்தம். இதனைப்பந்தெறிந்த அயர்வு என்பது போலக்கொள்க. பசப்பாவது பிரிவினைப் பொறுமையால் வருவதோர் நிறவேறுபாடு. இது தலைமகனைக் காணப்பெறாத விடத்து நிகழ்வதாகலால், கண்விதுப்பழிதலின்பின் வைக்கப்பட்டது.*

---

* பந்தெறிந்தவயர்வு என்பது பந்தெறிந்ததாலுண்டாகிய அயர்வு (சோர்வு) என்று பொருள்படுதல்போன்று பசப்புறு பருவரல் என்பது பசப்புறுதலாலுண்டாகிய பருவரல் (வருத்தம்) என்று பொருள்பட்டதென்க. இங்கு உறு என்னும் வினைத்தொகை காரணப்பொருளில் வந்தது. உண்ட இளைப்பு என்பதும் இதுபோன்றதே யாம். பந்தெறிந்தவயர்வு என்றும் பாடமுண்டு.

‡ "தெங்கங்காய் போலத் திரணடுருண்ட பைங்கூந்தல், வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி, யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே, வங்கத்துச் சென்றார் வரின் ' எனவரும். இதனுள் வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலையுடையாள் மாமேனிமேல் தெங்கங் காய்போலத் திரண்டுருண்ட கோழிவெண்முட்டை யுடைத்தன்ன பசலை தணிவாம் எனக்கொண்டுகூட்டுக" என்று நன்னூல் விருத்தியுரையில் வரைந்திருப்பது இங்குக் கவனிக்கத் தக்கதாம்.

† இது - பசப்புறுபருவரல்.

க. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற.

[முன் பிரிவுடம்பட்ட தலைமகள் † அஃதாற்றாது பசந்தவழித்
தன்னுள்ளே சொல்லியது.]

பரி:—(இ - ள்) என்னை நயந்தவர்க்கு அதுபொழுது பிரிவை யுடம்பட்ட நான் அதனையாற்றாது இதுபொழுது பசந்த வென்னியல் பினை யார்க்குச்சொல்வேன், (எ - று).

பிறவென்பது அசைநிலை. உடம்படாவழி ‡ ஒழிதல்குறித்துப் பிரிவுணர்த்தினராகலின் அவரன்புடையரென்னுங் கருத்தான் 'நயந்தவர்' என்றும் இதுவேயுடம்பாடாக மேலும் பிரிவுநிகழுமாகலின் இனி அவரைக் கூடுதலரிதென்னும் கருத்தான் 'நல்காமை' என்றும், முன்னருடம்படுதலும் பின்னராற்றாது பசத்தலும் பிறர்செய்தனவல்ல வென்பாள் 'பசந்தவென் பண்பு' என்றும், யான் செய்துகொண்ட துன்பத்தினை இனி யொருவர்க்குச் சொல்லலும் பழியாமென்னுங் கருத்தால் 'யார்க்குரைக்கோ' என்றுங் கூறினள்.

தெளி:—[முன் பிரிவிற்கு உடன்பட்ட தலைமகள் அதுபொறாமல் பசப்புநிறமடைந்தவிடத்துத் தன்னுள்ளே சொல்லியது.] (இ - ள்.) நயந்தவர்க்கு - (என்னை) விரும்பிய தலைவர்க்கு, நல்காமை - பிரிவை, நேர்ந்தேன்-(அப்பொழுது) உடன்பட்ட நான், பசந்த-(அப்பிரிவைப் பொறாமல் இப்பொழுது) பசப்பு நிறமடைந்த, என் பண்பு - என்னியல்பினை, யார்க்குரைக்கோ - யார்க்குச்சொல்வேன், (எ - று).

பிறவென்பது - அசைநிலை. (தலைமகள் தான்) உடம்படாதவிடத்து ஒழிதல் குறித்துப் பிரிவை(தனக்கு) அறிவித்தாராகலால் அவரன்புடையாரென்னுங் கருத்தால் 'நயந்தவர்' என்றும், இதுவே உடம்பாடாக மேலும் பிரிவு நிகழுமாகலால் இனி அவரைக் கூடுதல் அரிதென்னுங் கருத்தால் 'நல்காமை' என்றும், முன்பு உடம்படுதலும் பின்பு பொறாமல் நிற வேறுபாடடைதலும் பிறர் செய்தனவல்ல வென்பாள் 'பசந்தவென் பண்பு' என்றும், யான் செய்துகொண்ட துன்பத்தை இனி ஒருவர்க்குச் சொல்லுதலும் பழியாமென்னுங் கருத்தால் 'யார்க்குரைக்கோ' என்றும் சொல்லினள்.

(க - து.) தலைமகள் தன்னுள்ளே தலைவர் பிரிவுக் குடன்பட்ட யான் அதனாலுண்டாய நிறவேறு பாட்டினை எவரிடத்துச் சொல்லுவேனென்றாளென்பது.

† அஃதாற்றாது - தலைமகனது பிரிவைப் பொறுக்காமல்.
‡ ஒழிதல் குறித்து - சாதலைக் கருதி.

1. I who (then) consented to the separation of my lover, to whom shall I (now) complain about my having turned sallow ?

௨. அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.

[ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பது
படச் சொல்லியது.]

பரி:—(இ-ள்.) யானாற்றியுளேனாகவும் இப்பசப்புத்தான் என்னை யுண்டாக்கினார் * அவரென்னும் † பெருமிதத்தான், என்மேனியை மேற்கொண்டு செலுத்தாநின்றது, (எ - று).

‡ "குருதிகொப் புளிக்கும் வேலான் கூந்தன்மா விவர்ந்து செல்ல" என்புழியும் இவர்தல் ¶ இப்பொருட்டாதலறிக. + இஃது × உரிமைபற்றி யூர்கின்றது; இதற்கு நீ கவலல் வேண்டா வென்பதாம்.

தெளி:—[பொறுளென்று கவலையுற்ற தோழிக்குத் தலைமகள் பொறுப்பேனென்பது தோன்றச் சொல்லியது.] (இ ள்.) (யான் பொறுத்திருக்கின்றேனாகவும்) பசப்பு - இப்பசப்புநிறம், தந்தார் அவர் என்னுந் தகையால் - (என்னை) உண்டாக்கினார் அவரென்னும் பெருமிதத்தால், என் மேனிமேல் - என் மேனியை, இவர்தந்து - மேற்கொண்டு, ஊரும் - செலுத்தா நின்றது, (எ - று).

இவர்தல் - மேற்கொள்ளல். இஃது உரிமைபற்றி ஊர்கின்றது; இதற்குத் தோழியே! நீ கவலையடைதல் வேண்டாமென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழிக்குத் தலைவர் என்னை யுண்டாக்கினாரென்னும் உரிமைபற்றிப் பசப்பு என் மேனிமுற்றும் பரவா நின்றதென்று கூறினாளென்பது.

2. This sallowness, as if proud of having been caused by him, would now climb and ride on my person.

* அவர் - தலைவர். † பெருமிதத்தான் - களிப்பு மிகுதியால்.

‡ சீவகசிந்தாமணி-விமலையாரிலம்பகம், க. இதன்பொருள். இரத்தத்தையுமிழும் (சிந்தும்) வேலையுடைய சீவகன் கூந்தலை (கழுத்தின்கண் மயிரை) யுடைய குதிரையின்மேலேறிப் போகாநிற்க என்பது.

¶ இப்பொருட்டாதல்-மேற்கொள்ளல் என்னும் பொருளினையுடையதாதல்.

+ இஃது - பசப்பு. × உரிமைபற்றி - சுதந்தரத்தினால்.

௩. சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறு
நோயும் பசலையுந் தந்து.

[அழகு நாணு மழியாமல் நீ யாற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) பிரிகின்ற ஞான்றே * அவ்விரண்டற்குந் † தலைமாறாக இக்காமநோயினையும் பசலையையும் எனக்குத் தந்து, என்மேனி அழகினையும் நாணினையும் அவர் கொண்டுபோயினார், (எ - று).

¶ எதிர் நிரனிறை. அடக்குந்தோறும் மிகுதலான், நோய் நாணிற்குத் தலைமாறாயிற்று. இனி அவர் தந்தாலல்லது + அவை யுளவாகலும் X இவையிலவாதலுங் கூடாவென்பதாம்.

தெளி:—[அழகும் நாணமும் அழியாமல் நீ பொறுத்தல்வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) (பிரிகின்ற பொழுதே) கைம்மாறு - (அவ்விரண்டற்கும்) தலைமாறாக, நோயும் பசலையும்-இக்காமநோயையும் பசலையையும், தந்து - (எனக்குத்) தந்து, சாயலு நாணும் - (என்மேனி) அழகையும் நாணத்தையும், அவர்கொண்டார்- அவர் கொண்டுபோயினார், (எ - று).

இஃது எதிர்நிரனிறை. அடக்குந்தோறும் மிகுதலால், காமநோய் நாணிற்குத் தலைமாறாயிற்று. இனி அவர் தந்தாலல்லாமல் அவை உளவாதலும் இவை இலவாதலும் கூடாவென்பதாம். இது பரிமாற்றமென்னு மலங்காரம்; அது பொருள்கொடுத்துப் பொருள் கொள்வதாகக் கூறல்.

(க - து.) தலைமகள் தோழிக்குக் காமநோயினையும் பசலையையும் எனக்குத்தந்து என்மேனி யழகினையும் நாணினையுந் தலைவர் கொண்டுபோயினாரென்று கூறினாளென்பது.

3. He has taken away my comeliness and modesty and given me in recompense love-sickness and sallowness.

---

* அவ்விரண்டற்கும் - அழகு நாண் என்னுமிரண்டற்கும்.

† தலைமாறாக - பிரதியாக (விரோதமாக).

¶ நோய்க்கு நாணும், பசலைக்குச் சாயலும்ஆக மாறி நிற்றலால் இக்குறள் எதிர்நிரனிறையாயிற்று. நிரனிறையாவது வரிசையாகச் சொல்லப்பட்ட பொருள்களுக்குச் சம்பந்தமுள்ளவற்றை யம்முறையே சொல்லுதலாம்; எதிர்நிரனிறை இவ்விதியில் மாறிவருவது. நோயைத்தந்து நாணினையும், பசலையைத்தந்து சாயலையும் கொண்டாரென்று கொள்க.

+ அவை - அழகும் நாணும். X இவை - நோயும் பசலையும்.

௪. உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு.

[பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும் அவர் நற்றிறங்களையு
மறிதியாகலின், நீட்டியாது வருவரென்றவழிச்
சொல்லியது.]

பரி:—(இ - ள்.) அவர் சொற்களை யான் மனத்தா னினையாநிற்
பேன், வாக்கா லுரைப்பதும் அவர் நற்றிறங்களையே; அங்ஙனஞ் செய்
யா நிற்கவும், பசப்பு வந்து நின்றது, இது வஞ்சனையா யிருந்தது, ()

பிறவும் ஓவும் அசைநிலை. * மெய் மற்றை மனவாக்குக்களின் வழித்
தாகலின், † அதன் கண்ணும் ‡ வரப்பாற்றன்றாயிருக்க வந்தமையின், இதன்
செயல் கள்ளமா யிருந்ததெனத் தானாற்றுகின்றமை கூறியவாறாயிற்று.

தெளி:—[தோழி பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும் அவர் நற்
குணங்களையும் நீ அறிவாயாகையால், அவர் தாமதியாதுவருவரென்ற விட
த்து அவளுக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) யான் உள்ளுவன் -
யான் - (அவரதுசொற்களை மனத்தால்) நினைக்கின்றேன், உரைப்பது -
(வாயால்) சொல்வதும், அவர்திறம் - அவரது நற்றிறங்களையே, (அவ்வாறு
செய்யா நிற்கவும்), பசப்பு - பசலைநிறம், (வந்து நின்றது), கள்ளம்-(இது)
வஞ்சனையாயிருந்தது, (எ - று).

பிறவும் ஓவும் ஆலும் அசைநிலை. மெய் மற்றை மனவாக்குக்களின்
வழியாயுள்ளதாகலால், அதனிடத்தும் பசப்பு வருந்தன்மைய தன்றாயிருக்க
வந்தமையால், இதன்செயல் கள்ளமாயிருந்ததென்று தான் பொறுக்கின்
றமையைச் சொல்லியபடியாயிற்று.

(க - து.) தலைமகள் தோழிக்குத் தலைவரதுசொற்களைநினைத்
தும் அவரது குணங்களைப் பேசியுமிருக்கும் என்னிடத்துப்பசலை
வந்தது வஞ்சனையாயிருக்கின்றதென்றாளென்பது.

4. I think (of his words); and what I say is but the theme of his worth; still is there sickly hue; and this is deceitful.



* பசப்பு மனம் வாக்குக்களிடத்து வாராமைபோல அவற்றின் வழியி
லுள்ள உடம்பினிடத்தும் வருதற்குரியதன்றாம்; அங்ஙனமிருக்க, அஃது
உடம்பினிடத்து வந்தது; வந்தமையால், இப்பசப்பின் செயல் வஞ்சனையா
யிருந்ததென்று தலைமகள் தான் பொறுத்திருக்கின்றமையைக் கூறினு
ளென்பதாம். † அதன்கண்ணும் - மெய்யி (உடம்பி) னிடத்தும்.

‡ வரற்பாற்றன்றாயிருக்க என்றும் பாடமுண்டு.

௫. உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது.

[காதலர் பிரிந்தணித்தா யிருக்கவும் ஆற்றுகின்றிலையென்ற
தோழிக்கு முன்னிகழ்ந்தது கூறியது.]

பரி:—(இ - ள்.) பண்டும் நங்காதலர் உங்கே செல்வாராக, என் மேனி பசப்பூர்வ திங்கே யன்றே, அப்பெற்றியது இன்று பிறிதோன்றமோ, (எ - று).

* உவக்காண் இவக்காணென்பன ஒட்டிநின்ற விடைச்சொற்கள். † தேயவண்மையாற் காலவண்மை கருதப்பட்டது. ‡ அவர் செலவும் பசப்பினது வரவும் பகலிரவுகளின் செலவும் வரவும் போல்வ தறிந்துவைத்து அறியாதாய்போல நீ சொல்லுகின்ற தென்னையென்பதாம்.

தெளி:—[காதலர்பிரிந்து சமீபமாயிருக்கவும் நீ பொறுக்கின்றிலை யென்ற தோழிக்குத் தலைமகள் முன்னே நிகழ்ந்தது சொல்லியது.] (இ-ள்.) (முன்னும்) எங்காதலர் - நமதுகாதலர், உவக்காண்-உவ்விடத்தே, செல்வார்-(பிரிந்து) செல்வாராக,என்மேனி-எனதுவடிவம், பசப்பூர்வது— பசலைநிறமடைவது, இவக்காண் - இங்கே, (அன்றே), (அத்தன்மையதாய பசப்பு இன்று வேறொன்றாமோ), (எ - று).

உவக்காண் இவக்காணென்பன ஒட்டிநின்ற விடைச்சொற்கள். உவக்காண் என்னும் தேயவண்மையாற் காலவண்மை கருதப்பட்டது. அவரது செலவும் பசப்பினது வரவும் பகலிரவுகளின் செலவும் வரவும் போல்வதை அறிந்திருந்தும் அறியாதாய்போன்று நீ சொல்லுகின்றது என்னையென்பதாம். தேயம் - இடம்; அண்மை - சமீபம்.

•(க - து.) தலைமகள் தோழிக்குக் காதலர் பிரிந்ததும் பசப்பு வந்துவிட்டது; யான் பொறுத்திருப்ப தெவ்வாறும் என்று கூறினாள் என்பது.

5. Just as my lover separated then, did not pallor spread on•my body ?



* உங்கு இங்கு என்னும் சுட்டிடைச்சொற்கள் காண் என்னும் இடைச்சொல்லோடொட்டி உவக்காண் இவக்காண் என்று விகாரப்பட்டு நின்றமையின், 'உவக்காண் இவக்காண் என்பன ஒட்டிநின்றவிடைச்சொற்கள்' என்று கூறப்பட்டது. உகரச்சுட்டு நடுவிலுள்ள பொருளையும் பின்னுள்ள பொருளையும் மேலுள்ள பொருளையும், இகரச்சுட்டுச் சமீபத்திலுள்ள பொருளையு முணர்த்தி நிற்கும்.

† 'உவக்காணெங்காதலர்' என்று கூறினமையால், காதலர் சமீப •தேசத்திலிருக்கின்றாரென்பது பெறப்பட்டது ; அதனாலவர் சமீபகாலத்தில் வருவாரென்பது கருதப்பட்டது. ‡ அவர் - காதலர்.

௬. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) விளக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவரு மிருளே போலக் கொண்கன் முயக்கினது மெலிவுபார்த்து நெருங்கி வரும் இப்பசப்பு, (எ - று).

* பார்க்குமென்பன இலக்கணைச் சொல். முன் பிரியாதிருக்கவுந் தனக்கவகாசம் பார்த்துவரும் பசப்புப் பிரிவுபெற்றால் என் செய்யா தென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) விளக்கு - விளக்கினது, அற்றம் பார்க்கும் - சோர்வுபார்த்து நெருங்கிவருகிற, இருளேபோல் - இருளை போன்று, பசப்பு - இப்பசப்புநிறமானது, கொண்கன் - தலைவனுடைய, முயக்கு - புணர்ச்சியினது, அற்றம்பார்க்கும் - சோர்வு பார்த்து நெருங்கி வரும், (எ - று).

பார்க்குமென்னு மிரண்டும் இலக்கணைச்சொல். முன் பிரியாதிருக்கவும் தனக்குச் சமயம்பார்த்து வரும் பசப்புப் பிரிவுபெற்றால் (என்னை) என்ன செய்யாதென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழிக்குக் காதலர் பிரிந்துள்ளபோது யான் பசப்பின்றியிருத்தல் முடியாதென்று ளென்பது.

6. Just as darkness waits for the failing light (to fill the place), so does the pallor wait for the laxity of my lover's embrace.



௭. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கோள் வற்றே பசப்பு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) முன்னொரு ஞான்று காதலரைப் புல்லிக்கிடந்த யான் அறியாது புடைபெயர்ந்தேன்; அப்புடைபெயர்ந்த வளவிலே பசப்பு அள்ளிக்கொள்வதுபோல வந்து செறிந்தது, (எ - று).

* நெருங்கிவருதலைப் பார்க்கும் என்று கூறினமையின், பார்க்குமென்னு மிரண்டும் இலக்கணைச் சொல்லாயின. பார்க்குந்தன்மை யில்லாத இருளிற்கும் பசப்பிற்கும் பார்க்குந்தன்மை யுளதாகக் கூறினமையின், இது பாராதது பார்ப்பதுபோற் கூறிய இலக்கணையாம். இலக்கணையாவது ஒருபொருளி னிலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பதாம். கண்ணிற்குரிய பார்க்குந்தன்மை இருளிற்கும் பசப்பிற்குந் தந்துரைத்தவாறுணர்க.

¶ கொளவென்பது குறைந்து நின்றது. அள்ளிக்கொள்வது-அள்ளிக்கொள்ளப்படும் பொருள். அப்புடைபெயர்ச்சிமாத்திரத்திற்கு † அவ்வாறுயது இப்பிரிவின்கணுமாறு சொல்லவேண்டுமோ வென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ-ள்.) புல்லிக்கிடந்தேன் - (முன்னொருநாள் காதலரைத்) தழுவிக்கிடந்த நான், புடைபெயர்ந்தேன் - (அறியாது) சிறிது விலகினேன், அவ்வளவில் - அச்சிறிதுவிலகிய வளவிலே, பசப்பு - பசப்பு நிறமானது, அள்ளிக்கொள்வற்றே - அள்ளிக் கொள்ளப்படும் பொருள்போல வந்து நிறைந்தது, (எ - று).

கொளவென்பது அகரங்குறைந்து கொள் என நின்றது. அச்சிறிது விலகிய மாத்திரத்திற்கு அவ்வாறாகிய பசப்பு இப்பிரிவிடத்து ஆகும் விதம் சொல்லவேண்டுமோ வென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழிக்கு யான் தலைவரைத் தழுவிக்கிடந்த ஒருநாள் சிறிதுவிலகினேன்; விலகியவளவிலேயே எனக்குப் பசப்புண்டாயிற்றென்று தனது அனுபவங்கூறினாளென்பது.

7. I who lay in close embrace (unwittingly) turned aside ; forth with, this hue came on me.

அ. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில.

[நீ யிங்ஙனம் ‡ பசக்கற்பாலையல்லையென்ற தோழியொடு புலந்து சொல்லியது.]

பரி:—(இ-ள்.) இவள் ஆற்றியிராது பசந்தாளென்று என்னைப் பழிக்கூறுவதல்லது இவளை யவர் துறந்து போயினாரென்று அவரைக் கூறுவாரொருவருமில்லை, (எ - று).

'என்பார்' என வேறுபடுத்துக்கூறினாள்; தன்னையே * நெருங்குதல் பற்றிப் புலக்கின்றமையின்.

தெளி:—[நீ இவ்வாறு பசப்புநிறமடைவது தகுதியாகாதென்ற தோழியோடு பிணங்கித் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) இவள்—,பசந்தாளென்பதல்லால் - (பொறுத்திராது) பசலைநிற மடைந்தாளென்று (என்

¶ கொள்வதென்பது (கொள் எனக்) குறைந்து நின்றது என்றும் பாடமுண்டு; கொளலென்பது குறைந்து நின்றது என்றும் பாடமுண்டு.

† அவ்வாறுயது—அள்ளிக்கொள்ளப்படும் பொருள்போல வந்து நிறைந்த பசப்பு.

‡ பசக்கற்பாலையல்லை—பசப்புநிற மடைதற் குரியையல்லை.

* நெருங்குதல் - பொறுத்திருக்க வேணடுமென்று பன்முறையுங் கண்டித்துக்கூறுதல்.

னைப்) பழிசொல்லுவ தல்லாமல், இவளை—, அவர்—, துறந்தாரென்பார்—துறந்து போயினாரென்று (அவரைச்) சொல்லுவார், இல் - (ஒருவரும்) இல்லை, (எ - று)..

தலைமகள் தோழி தன்னையே நெருங்குதல் பற்றிப் பிணங்குகின்றாளாகலின், அவளை 'என்பார்' என்று வேறுபடுத்திச் சொல்லினாள்.

(க - து.) தலைமகள் தோழியோடு பிணங்கி, என்னைவிட்டுப் பிரிந்த தலைவரைப் பழியாது, அப்பிரிவு காரணமாகப் பசப்பு நிறமடைந்த என்னைப்பழிப்பது தகாதென்று கூறினாளென்பது.

8. Besides those who cast a slur that she has turned sallow, there are none who say he has deserted her.



௯. பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) இப்பிரிவை யானே யுடம்படும் வகை சொல்லியவர் இன்று நின்கருத்தான் நல்ல நிலையின ராவராயின், என்மேனி * பட்டதுபடப் பசப்பதாக, (எ - று).

நன்னிலையராதல் - † நன்மைக்கண்ணே நிற்றலையுடையராதல் பட்டாங்காகவென ஆக்கம் வருவித்துரைக்க. முன் இப்பிரிவின் கொடுமையறியாத வென்னை இதற்குடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராகவே வேண்டுவது, என் மேனியும் பசப்பும் யாதுசெய்யினென் னென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது.

தெளி:—[இதுவுமது.] (இ-ள்.) நயப்பித்தார் - (இப்பிரிவை யானே) உடம்படும்வகை சொல்லியவர், நன்னிலையராவரெனின் - (இன்று உன் கருத்தால்) நல்லநிலையின ராவராயின், என்மேனி - என்னுடம்பு, பட்டாங்கு (ஆக) - பட்டதுபட, பசக்க - பசலைநிற மடைவதாக, (எ - று).

நன்னிலையராதல் - நன்மைக்கண்ணே நிற்றலையுடையராதல். ஆகவென்னும் ஆக்கச்சொல் வருவித்துப் பட்டாங்காக எனச் சொல்லப்பட்டது. முன் இப்பிரிவின் கொடுமையை யறியாத என்னை இப்பிரிவிற்கு உடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராகவே வேண்டுவது, என்மேனியும் பசப்பும் யாது செய்யின் என் என்பது தோன்ற நின்றமையால், மன்னென்னுமிடைச்சொல் ஒழியிசைப்பொருளில் வந்தது.

---

* பட்டதுபட - துன்பமடைவதடைய.

† நன்மைக்கண்ணே - நல்லொழுக்கத்தினிடத்தே.

(க-து.) தலைமகள் தலைவர் பசலையினைப் புனைபவராயின், என் மேனி பசலைநிறமடைதல் எனக்கினிதே யாமென்றாளென்பது.

9. If he be clear of guilt who won my consent for his departure, let my body suffer its due and turn sallow.

௰. பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின்.

[தலைமக ளாற்றுதற்பொருட்டுத் தோழி தலைமகனை யியற்பழித்தவழி அவள் இயற்படமொழிந்தது.]

**பரி:—(இ-ள்.) அன்று தாங் * குறை நயப்பித்துக் † கூடினவர்க்கு இன்று நல்காமையை நட்டார் தூற்றாராயின், பசப்புற்றாளென வேற்றுமையாலன்றிப் பசப்புத்தாளுயினாளென ஒற்றுமையாற் றந்சொல்ல அப்பெயரைப் பெறுதல் எனக்கு நன்று, (எ - று)**

‡ நட்டாரென்பது அவாய் நிலையான் வந்தது. இயற்பழித்தல் பொறாது புலக்கின்றாளாகலின், இகழ்ச்சிக் குறிப்பாற் கூறினாள். அவரை அருளிலரென்னாது இன்னும் பசந்தாளிவளென்கையே யானுற்றுவேறி யாவதென்பதாம்.

**தெளி:—**[தலைமகள் பொறுத்தற் பொருட்டுத் தோழி தலைமகனை இயற்பழித்தவிடத்து அவள் இயற்படச் சொல்லியது.] (இ - ள்.) நயப்பித்தார் - (அன்று தாம்) குறை நயப்பித்துக் கூடினவர்க்கு, நல்காமை (இன்று) அருளாமையை, தூற்றாரெனின் - (நட்புடையார்) தூற்றாராயின், பசப்பென - (பசப்புற்றாளென்று வேற்றுமையாலன்றிப்) பசப்புத் தாளுயினுளென்று (ஒற்றுமையால் தாம்) சொல்ல, பேர்பெறுதல் - அப்பெயரைப் பெறுதல், நன்று - (எனக்கு) நன்றாம், (எ - று).

நட்புடையாரென்பது அவாய் நிலையால் வந்தது. தலைமகள் தோழி தலைமகனை யியற்பழித்தற்குப் பொறாமற் பிணங்குகின்றாளாகலால் 'பசப்பெனப் பேர்பெறுத னன்றே' என்று இகழ்ச்சிக் குறிப்பால் சொல்லினாள். அவரை அருளிலரென்னாது இன்னும் பசலையடைந்தாள் இவளென்று கூறுதலே நான் பொறுக்கும்வழி யாவ தென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியோடு பிணங்கித் தலைவர் அருள் செய்யாமையை நட்டார் தூற்றாராயின், பசப்புத் தாளுயினாள் என்னும் பெயரைப் பெறுதல் எனக்கினிதா மென்றாளென்பது.

---

* குறைநயப்பித்து - தமது குறைகளை விரும்பி யேற்குமாறுசொல்லி.

† கூடினவர் என்றும் பாடமுண்டு.

‡ தூற்றார் என்னும்வினை நட்டார் என்னும் வினைமுதலை அவாய் (வேண்டி) நிற்றலின், அது வருவிக்கப்பட்டது.

10. It is well to be said of me that I have turned sallow, if friends refrain from reproaching with unkindness him who won my love then.



## 5 - ம் அதிகாரம்.

### தனிப்படர் மிகுதி:—*The solitary anguish.*

**பரி:—அது தனியாகிய படர்மிகுதியெனா விரியும்; அஃதாவது படர்மிகுதி தலைவன்கணின்றித் தன் கண்ணதே யாதல் கூறுதல்.† அறமும் ‡ பொருளு நோக்கிப் பிரிதலின் அவன்கண் இல்லையாயிற்று**

---

† *அறநோக்கிப் பிரிதல் - காவற் பிரிவாம். காவற்பிரிவு - நாடுகாத்தற்குப் பிரியும் பிரிவு. இறையனாரகப்பொருள் "ஓதல் காவல்" என்னுஞ் சூத்திரத்தினுரையில் "இனி நாடுகாத்தற்குப் பிரியுமென்பது நலிவாருளராக நலிவுகாத்தற்குப் பிரியுமென்பதன்று; நாட்டகத்துநின்றும் நகரகத்து வந்து தமக்கு உற்றது உரைக்கல்லாத மூத்தார்களும் பெண்டீர்களும் இருக்கை முடவரும் கூனரும் குருடரும் பிணியுடையாரும் இத்தொடக்கத்தார்தம் முறைக்கருமங் கேட்டுத் திருத்துதற் பொருட்டாகவும், காட்டகத்து வாழும் உயிர்ச் சாதிகள் ஒன்றனையொன்று நலிவன உளவாயினவிடத்துத்தீதென்று அவற்றை முறை செய்தற்கும், கொடிவலைப்பட்டுக் கிடந்தனவற்றைத் துறை நீக்குதற் பொருட்டாகவும், வள னில்வழி வளந் தோற்றுவித்தற் பொருட்டாகவும், தேவகுலமே சாலையே அம்பலமே யென்று இத்தொடக்கத்தனவற்றை யாராய்தற்கும், அழிகுடியோம்புதற்கும் பிரியுமென்பது. அல்லதூஉம் பிறந்த உயிர் தாயைக்கண்டு இன்புறுவதுபோலத்தன்னாற் காக்கப்படும் உயிர்வாழ் சாதிகள் தன்னைக்கண்டு இன்புறுதலிற்றான் அவைகட்கும் தன் உருவுகாட்டுதற்கும், மாற்றரசர் ஒற்று வந்த விடத்து அவர் முன்னம் தனது ஊக்கம் காட்டுதற்பொருட்டாகவும் பிரியும். அதனானே மாற்றரசர் திறைகொடுப்பாரென்பது" என்று கூறப்பட்டிருக்கின்றது.*

‡ *பொருள் நோக்கிப் பிரிதல் - பொருளீட்டுதல் காரணமாகப் பிரியும் பிரிவு. தஞ்சைவாணன் கோவையினுரையில் "பொருள்வயிற் பிரிவு என்பது பொருளீட்டுதல் காரணமாகப் பிரியும் பிரிவு எனின், முன்பொருளிலனும்; ஆகவே, 'என்னுநர்ப்பணித்தலு மிரந்தோர்க்கீதலும் நள்ளுநர் நாட்டலும் நயவாரொறுத்தலும்' என்னுமிவையெல்லாம் பொருட்குறைபாடுடையார்க்கு நிகழாமையான், இக்குறைபாடெல்லாம் உடையனும்; அவையுடையானது பொருவிறப் பென்னையோவெனின், பொருளிலனாய்ப் பிரியுமென்பதன்று; தன்முதுகுரவராற் படைக்கப்பட்ட பலவேறு வகைப்பட்ட பொருள்களெல்லாங் கிடந்தது, மன்னன் அதுகொண்டு துய்ப்பது ஆண்மைத்தன்மை யன்றெனத் தனது தாளாற்றலாற் படைத்த பொருள் கொண்டு வழங்கி வாழ்தற்குப் பிரியுமென்பது. அல்லதூஉம் தேவகாரி*

* இது † பசப்புற்று வருந்தியாட் குரியதாகலின், பசப்புறு பருவரலின் பின் வைக்கப்பட்டது.

தெளி:—தனிப்படர்மிகுதியென்பது தனிமையாகிய படர்மிகுதி யென்றுவிரியும்; அஃதாவது படர்மிகுதி தலைமகனிடத்தில்லாமல் தன்னிடத்தேயாதலைத் தலைமகள் சொல்லுதல். தலைமகன் அறமும் பொருளுங் கருதிப் பிரிதலால், தனிப்படர்மிகுதி அவனிடத்தில்லையாயிற்று. இது பசப்புற்று வருந்திய தலைமகளுக்குரியதாகலால், பசப்புறுபருவரலின் பின்னர் வைக்கப்பட்டது. படர் - துன்பம்.

க. தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி.

[ ‡ காதலரும் நின்னினுமாற்றாராய்க் கடிதின்வருவர்; நீயவரோடு பேரின்பநுகர்தி யென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) தம்மாற் காதலிக்கப்படுங் கணவர் தம்மைக் காதலிக்கப் பெற்ற மகளிர் பெற்றாரன்றே காமநுகர்ச்சியென்னும் பரலில்லாத கனியை, (எ - று).

¶ காமம் - ஆகுபெயர். அத்து அல்வழிக்கண் வந்தது. முன்னைநல்வினை இல்வழிப் பெறப்படாமையிற் 'பெற்றார்' என்றும், | அவராற் றடையின்றி நுகரப்படுதலிற் 'காழில்கனி' என்றும் கூறினார். நங்காதலர் பிரிதலேயன்றிப் பின் வாராமையுமுடைமையின், ⁝ அக்கனி யாம் பெற்றிலே மென்பதாயிற்று.

தெளி:—[காதலரும் உன்னினும் பொறுக்காதவராயக் கடிதில் வருவர்; நீ அவரோடு பேரின்பத்தை அனுபவிப்பாயென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ-ள்.) தாம்வீழ்வார்-தம்மால் விரும்பப்படுங் கணவரும் பிதிர்க்காரியமுந் தனது தாளாற்றலாற் படைத்த பொருளாற்செயத் தனக்குப் பயன்படுவன; என்னை ? 'தாயப்பொருளாற் செய்தது தேவரும் பிதிரரும் இன்புறார்' ஆகலான் அவர்களையும் இன்புறுத்தற்குப் பிரியுமெனக்கொள்க " என்று கூறப்பட்டிருக்கின்றது.

* இது - தனிப்படர்மிகுதி.

† பசப்புற்று - (தலைமகனது பிரிவைச் சகிக்க முடியாமையால்) நிற வேறுபாடடைந்து. ‡ காதலர் என்றும் பாடமுண்டு.

¶ காமம் என்னும் கருவியின்பெயர் அதன்காரியமாகிய நுகர்ச்சியை (புணர்ச்சியை) யுணர்த்துதலால், கருவியாகு பெயராம். காமநுகர்ச்சி - காமானுபவம்.

| அவரால் - பெற்றமகளிரால்.

⁝ அக்கனி - காமத்துக்காழில்கனி. காமநுகர்ச்சி காமத்துக்காழில் கனியென்று உருவகஞ் செய்துரைக்கப்பட்டது.

வர், தம்வீழ-தம்மை விரும்ப, பெற்றவர்-பெற்றமகளிர், காமத்து-காமநுகர்சசியென்னும், காழில் - வித்தில்லாத, கனி-பழத்தை, பெற்றாரே-பெற்றாரன்றே, (எ - று).

காமம்-கருவியாகுபெயர். காமத்து என்பதன்கணுள்ள அத்து அல்வழிக்கண்வந்த சாரியை. (காமநுகர்ச்சி) முன்னை நல்வினையில்லாவிடத்துப் பெறப்படாமையால் 'பெற்றார்' என்றும், அவரால் தடையில்லாமல் (காமம்) அனுபவிக்கப்படுவதால் 'காழில் கனி' என்றும் சொல்லினன். நங்காதலர் பிரிதலேயல்லாமல் பின் வாராமையுமுடைமையால், அக்கனியை யாம் பெற்றிலேமென்பதாயிற்று.

(க - து.) தலைமகள் தோழியை நோக்கி, தாம் விரும்பும் கணவரால் விரும்பப்பட்ட மகளிரே காமநுகர்ச்சியைப் பெற்றாராவர் என்றாள் என்பது.

1. The women who are beloved by those they love, have obtained the seed-less luscious fruit of sexual delight.



உ. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு,
வீழ்வா ரளிக்கு மளி.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) அறமும் பொருளுநோக்கிப் பிரிந்தாற் றம்மை † யின்றியமையா மகளிர்க்கு அவரை யின்றியமையாக் கணவர் அளவறிந்துவந்து செய்யுந்தலையளி தன்னையே நோக்கி உயிர்வாழ்வார்க்கு வானம் அளவறிந்து வந்து பெய்தாற்போலும், (எ - று).

நங்காதலர் நம்மை விழையாமையின் அத்தலையளியில்லை யாகலான், மழைவறந்துழி ‡ அதனன் ¶ வாழாதார்போல இறந்துபடுதலே நமக்குள்ளதென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) (அறமும் பொருளும் நோக்கிப் பிரிந்தால்) வீழ்வார்க்கு - (தம்மை) விட்டிருக்கமாட்டாத மகளிர்க்கு, வீழ்வார் - (அவரை) விட்டிருக்கமாட்டாத கணவர், அளிக்கும் - அளவறிந்து வந்து செய்யும், அளி - தலையளி, வாழ்வார்க்கு - (தன்னையே நோக்கி) உயிர்வாழ்வார்க்கு, வானம் - மேகம், பயந்தற்று - அளவறிந்து வந்து மழை பெய்தாற்போலும், (எ - று).

† இன்றியமையா - இல்லாது முடியாத, அஃதாவது அவசியமாக வேண்டிய.

‡ அதனன் - மழைபெய்யாமையினால்.

¶ வாழ்வார்போல என்றும் பாடமுண்டு.

நம்காதலர் நம்மை விரும்பாமையால் அத்தலையளியில்லை யாகலால், மழை பெய்யாவிடத்து அதனால் வாழாதார்போல இறத்தலே நமக்கு உள்ள தென்பதாம். தலையளி - பேரன்பு ; அஃதாவது முகமலர்ந்தினியகூறல். ஆல் - அசை.

(க - து.) தலைமகள் கணவரருள்பெற்ற மகளிரே வாழ்தற் குரியராவரென்றாள் என்பது.

2. The bestowal of love by the beloved on those they love, is like heaven showering rain on those who live by it.



௩. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) தாம் விழையுங் கணவரான் விழையப்படு மகளிர்க்கு ஏற்புடைத்து; காதலர் பிரிந்தாராயினும் நம்மை நினைந்து கடிதின் வருவர், வந்தால் நாமின்புற்று வாழ்துமென்றிருக்குந் தருக்கு, (எ).

நாம் அவரான் வீழப்படாமையின், நமக்கமைவது இறந்துபாடென் பதாம்.

தேளி:—[இதுவுமது.] (இ - ள்.) வீழுநர் - (தாம்) விரும்புங்கணவ ரால், வீழப்படுவார்க்கு - விரும்பப்படுகின்ற மகளிர்க்கு, (காதலர் பிரிந்தா ராயினும் நம்மை நினைந்து கடிதின் வருவார், வந்தால் நாம் இன்புற்று), வாழுநமென்னும் - வாழ்வோமென்றிருக்கும், செருக்கு-தருக்கு, அமை யும் - ஏற்புடையதாம், (எ - று).

நாம் அவரால் விரும்பப்படாமையால், நமக்குப்பொருந்துவது இறந்து படுதலென்பதாம். இறந்துபடுதல்-சாதல். தருக்கு-இறுமாப்பு.

(க - து.) தலைமகள் தாம் விரும்புங் கணவரால் விரும்பப்படு மகளிர்க்கு *அவர் பிரிந்தவிடத்தும் நாம் இன்புற்று வாழ்வோ மென்னுஞ்செருக்கு உண்டாமென்றாளென்பது.

3. The boast that says "we shall live to enjoy" belongs to those only who are loved by their beloved.



௪. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

[காதலரை யியற்பழித்தலையளுசி அவரருளின்மை மறைத்த நீ கடவுட் கற்பினையாகலிற் கற்புடை மகளிரால் நன்குமதிக்கப்படுதி யென்ற தோழிக்குச் சொல்லியது.]

புரி:—(இ-ள்.) கற்புடை மகளிரால் நன்கு மதிக்கப்படுவோரும் தாம் விரும்புங் கணவரான் விரும்பப்படாராயிற் றீவினையாட்டியர், ()

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. * கெழீஇயின்மை—நல்வினையின்மை; அஃது † அருத்தாபத்தியாற் றீவினை யுடைமையாயிற்று. தீவினை யுடையேற்கு ‡ அந்நன்கு மதிப்பாற் பயனில்லை யென்பதாம்.

தெளி:—[காதலரை இயற்பழித்தலுக்கு அஞ்சி அவாது அருளில்லாமையை மறைத்த நீ தெய்வத்தன்மை பொருந்திய கற்புடையை யாகலால், கற்புடைய மகளிரால் நன்கு மதிக்கப்படுவோயென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ-ள்.) வீழப்படுவோர்-(கற்புடையமகளிரால்) நன்கு மதிக்கப்படுவோரும், தாம் வீழ்வார்-தாம் விரும்புங் கணவரால், வீழப்படாஅரெனின்-விரும்பப்படாராயின், கெழீஇயிலர்-தீவினையுடையவராவர்.

வீழப்படுவோரும் என்ற உயர்வு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. கெழீஇயின்மை - நல்வினை யில்லாமை; அந்நல்வினை யில்லாமை அருத்தாபத்தியால் தீவினை யுடைமையாயிற்று. தீவினையுடையேனுக்கு அந் நன்கு மதிப்பால் பயனில்லை யென்பதாம்.

(க-து.) தலைமகள் தோழியை நோக்கித் தாம் விரும்பும் கணவரால் விரும்பப்படாத மகளிர்க்கு யாதொரு சிறப்புமில்லை என்றாளென்பது.

4. Even those who are esteemed (by virtuous women) will luckless prove, if they be not loved by their beloved.



ரு. நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

[அவர்மேற் காதலுடைமையின், அவர் கருத்தறிந் தாற்றினை யென்ற தோழிக்குச் சொல்லியது.]

புரி:—(இ-ள்.) நம்மாற் காதல்செய்யப்பட்டவர் நமக்கென்ன வின்பத்தைச் செய்வர்; ¶ அவ்வாறே தாமும் நங்கட்காதல் செய்யாவழி, (எ-று).

* கெழீஇயின்மை - பொருந்துதலில்லாமை; கெழுமுதல் - பொருந்துதல், இன்மை - இல்லாமை. கெழீஇ என்பது கெழுமு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்; அஃதிங்கு நல்வினையை யுணர்த்தி நின்றது.

† இங்ஙன மன்றாயின் இதுகூடாதென் றுணர்வது அருத்தாபத்தியாம். நல்வினையின்றாயின் தீவினையின்றுதல் கூடாதென்பது இங்கருத்தாபத்தியாம். நல்வினையின்மை சம்பவித்தலால் தீவினையுடைமை பெறப்பட்டது.

‡ அந்நன்கு மதிப்பால் - கற்புடையமகளிர் மேம்பாடுசெய்து பேசுதலால். ¶ அவ்வாறே - நாம் காதல் செய்தபடியே.

எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அக்காதலுடைமையால் நாம் பெற்றது துன்பமே யென்பதாம்.

தெளி:—[அவர் மேல் காதலுடைமையால், அவர் கருத்தறிந்து பொறுத்தாயென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) நாம் காதல்கொண்டார் - நம்மால் காதல் செய்யப்பட்டவர், நமக்கு—,எவன் - என்ன வின்பத்தை, செய்ப - செய்வார், (அவ்வாறே), தாங்காதல் கொள்ளாக்கடை - தாமும் (நம்மிடத்துக்) காதல் செய்யாத விடத்து, (எ - று).

தாமுமென்ற எதிரது தழுவிய வெச்ச வும்மை செய்யுள் விகாரத்தாற்றொக்கு நின்றது. அக்காதலுடைமையால் நாம்பெற்றது துன்பமேயென்பதாம். காதல் - ஆசை. ஓ - அசை.

(க - து.) தலைமகள் தோழியைநோக்கி நம்மிடத்துக் காதல் செய்யாத தலைவர் நமக்கென்ன இன்பத்தைச் செய்யப்போகின்றாரென்றுசொன்பது.

5. What will he who is beloved by me, do to me if I am not beloved by him.



௬. ஒருதலையா னின்னாது காமங்காப் போல
இருதலை யானு மினிது.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) மகளிர் ஆடவரென்னு மிருதலையினும் வேட்கை ஒருதலைக்கண்ணேயாயின் அஃதின்னாது; காவினது பாரம்போல இருதலைக்கண்ணுமொப்பின், அஃதினிது, (எ - று).

† மூன்றனுருபுகள் ஏழன்பொருண்மைக்கண் வந்தன: ‡ கா—ஆகு பெயர். என்மாட்டுண்டாய வேட்கை அவர்மாட்டு முண்டாயின், யானிவ் வாறு துன்பமுழத்தல் கூடுமோ வென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) (மகளிர் ஆடவர் என்னும் இரண்டிடத்திலும்) காமம் - ஆசையானது, ஒருதலையான் - ஓரிடத்திலே, (உண்டாயின்), இன்னாது - (அவவாசை) துன்பஞ்செய்வதாம், காப்போல - காவடியினது பாரம்போல, இருதலையானும் - இரண்டிடத்திலும், (ஒத்திருக்குமாயின்), (அவ்வாசை), இனிது - இன்பஞ்செய்வதாம், (எ - று).

---

† ஒருதலையான் இருதலையான் என்பவற்றிலுள்ள ஆன் என்னும் மூன்றனுருபுகள் தமக்குரிய பொருளைவிட்டு ஏழனுருபி னிடப்பொருளில் வந்தன. இவ்வாறு வருதல் உருபுமயக்கமெனப்படும்.

‡ கா (காவடி) என்னு மிடப்பெயர் அதன்கணுள்ள பாரத்தினை யுணர்த்துதலால், இடவாகுபெயராம்.

ஆனுருபுகள் கண்ணுருபின் பொருளில் வந்தன. கா - இடவாகு பெயர். என்னிடத்து உண்டாகிய ஆசை அவரிடத்தும் உண்டாயின், நான் இப்படி துன்பமனுபவித்தல் கூடுமோ வென்பதாம்.

(க - து.) தலைமகள் மகளிர் ஆடவரென்னு மிருவரிடத்தும் காமம் காவடியின் பாரம்போல ஒத்திருக்குமாயின், இனிதாம் என்றாளென்பது.

6. Love, like the weight of the *kavadi*, pains if it lies in one end only, but pleases if it is balanced on both sides.

---

எ. பருவரலும் பைதலுங் காணான்கொல் காம
னொருவர்க ணின்றொழுகு வான்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காமநுகர்தற்குரிய விருவரிடத்தும் ஒப்பநிற்றலொழிந்து ஒருவரிடத்தே நின்று பொருகின்ற காமக்கடவுள் † அவ்விடத்துப் பசப்பானுய பருவரலும் படர்மிகுதியும் அறியான்கொலோ, (எ - று).

‡ விழைவும் வெறுப்புமின்றி எல்லார்கண்ணு நிகழ்ந்தனவறிதற்குரிய கடவுளும் என்கண் வேறுபட்டான்; இனி யானுய்யுமாறென்னை யென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) (காமத்தை யனுபவித்தற்குரியஇருவரிடத்தும் சமமாக நிற்றலொழிந்து) ஒருவர்கணின்று - ஒருவரிடத்தே நின்று, ஒழுகுவான் - போர்செய்கின்ற, காமன் - காமக்கடவுளென்னும் மன்மதன், (அவ்விடத்தில் பசப்பாலாகிய), பருவரலும் - வருத்தத்தையும், பைதலும் - துன்பமிகுதியையும், காணான்கொல் - அறியானோ'

விருப்பும் வெறுப்புமில்லாமல் எல்லாரிடத்தும் நிகழ்ந்தனவற்றை யறிதற்குரிய (காமக்)கடவுளும் என்னிடத்து வேறுபட்டான்; இனி யான் பிழைக்கும்வித மெப்படி யென்பதாம். ஒழுகுவானென்பது பெயரெச்சப் பொருளில் வந்தது.

(க - து.) தலைமகள் காமவேதனையைப் பொறுத்துக்கொள்ள முடியாது, காமக்கடவுள் காதலரிடத்துப் பருவரலையும் பைதலையும் அறியான் போலுமென்றவனை இழித்துக் கூறினாளென்பது.

---

† அவ்விடத்து - காதலருள்ள விடத்தில்.

‡ "வேண்டுதல் வேண்டாமையிலான்" என்று கடவுள் வாழ்த்தில் கூறியிருப்பது மறிக.

7. Would not Kama who abides and contends in one party (only) witness the pain and wasting grief (in that party).



அ. வீழ்வாரி னின்சொற் பெறுஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

[தலைமகன் றூதுவரக்காணாது சொல்லியது.]

பரி:—(இ - ள்.) தம்மால் விரும்பப்படுங் காதலர்திறத்துநின்றும் ஓரின்சொல்லளவும் பெறதே பிரிவாற்றி உயிர்வாழ்கின்ற மகளிர்போல வன்கண்மையுடையார் இவ்வுலகத்தில்லை, (எ - று).

காதலர் திறத்துச்சொல் யாதானும் எனக்கினிதென்னுங் கருத்தால் 'இன்சொல்' என்றாள். இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. யான் * வன்கண்ணேனாகலின், † அதுவும் பெறாது உயிர்வாழாநின்றே னென்பதாம்.

தெளி:—[தலைமகனது தூதுவரக்காணாமல் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) வீழ்வாரின் - (தம்மால்) விரும்பப்படுங் காதலரிடத்திருந்து, இன்சொல் - ஓரின்சொல்லளவும், பெறுஅது - பெறாமலே,வாழ்வாரின் - (பிரிவினைப்பொறுத்து) உயிர்வாழ்கின்ற மகளிர்போல,வன்கணார்-தைரிய முடையவர், உலகத்து - இவ்வுலகத்தில், இல் - இல்லை, (எ - று).

காதலரிடத்திருந்துவருஞ் சொல் யாதாயினும் எனக்கு இனிதாமென்னுங் கருத்தால் 'இன்சொல்' என்றாள். இன்சொல்லும் என்ற இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. நான் வன்கண்ணேனாகலால், அதுவும் பெறாமல் உயிர்வாழ்கின்றே னென்பதாம்.

(க் - து.) தலைமகள் தந்தலைவரிடத்திருந்து ஓரின்சொல்லளவும் பெறாது அவரது பிரிவினைப் பொறுத்து வாழுமகளிரேகொடியவ ரென்றாளென்பது.

8. There is no one in the world braver than they who can live out their life without receiving even a kind word from their lover's (lips).



கூ. நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) என்னால் நச்சப்பட்ட காதலர் என்மாட் டன்பில ராயினும் அவர் திறத்து யாதானு மோர்சொல்லும் என்செவிக் ‡ கினியதாம், (எ - று).

* வன்கண்ணேனாகலின் - கொடுமையுடையேனாகலின். † அதுவும்- ஓரின்சொல்லளவும். ‡ கினியவாம் என்றும் பாடமுண்டு.

இழிவுசிறப்பும்மை, அவர் வாரலரென்னுஞ் சொல்லாயினும் அமையு மென்பதுபட நின்றது. அதுவும் பெற்றிலேனென்பதாம்.

**தேளி:—**[இதுவுமது.] (இ - ள்.) நசைஇயார் - (என்னால்) விரும் பப்பட்டகாதலர், நல்காரெனினும் - (என்னிடத்து) அன்பில்லாதவரே யானாலும், அவர்மாட்டு - அவர்திறத்து, இசையும் - யாதானுமோர் சொல் லும், செவிக்கு - என்காதுக்கு, இனிய(து)-இன்பஞ்செய்வதாம், (எ-று).

நல்காரெனினும் என்ற இழிவு சிறப்பும்மை, அவர் (காதலர்) வாரா ரென்னுஞ் சொல்லாயினும் (என்செவிக்கு) இனிதா யமையுமென்பது தோன்ற நின்றது. அச்சொல்லும் பெற்றிலேனென்பதாம்.

(க - ரு) தலைமகள் காதலர் என்மேலன்பிலராயினும் அவரி டத்திருந்து வரும் யாதாயினுமொருசொல்லும் எனக்கினிதா மென்றாளென்பது.

9. Though my beloved accords no grace on me, still any of his words is sweet to my ears.

ய. உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு.

[தலைமகன்றூதுவரப்பெறாது தான் றூதுவிடக்கருதியாள்
நெஞ்சொடு சொல்லியது.]

**பரி:—**(இ - ள்.) **நின்னோடுறுதார்க்கு நின்னுறுநோயை யுரைக்க லுற்ற நெஞ்சே! நீயாற்றுயாயினும் அரிதாய * அதனையொழிந்து, நினக் குத்துயரஞ் செய்கின்ற கடலைத் தூர்க்க முயல்வாயாக, † அஃதெளிது.**

உரைக்கலுற்றது அளவிறந்தநோ யாகலானும் ‡ கேட்பார் உறவில ராகலானும் ¶ அது முடிவதொன்றன்று; முடிந்தாலும் பயனில்லையென் பது கருதாது முயலாநின்றாயென்னுங் | குறிப்பான் 'வாழிய' என்றான்.

**தேளி:—**[தலைமகனது தூதுவரப்பெறமல் தான் தூதுவிட நினைத்த தலைமகள் நெஞ்சோடு சொல்லியது.] (இ - ள்.) உறாஅர்க்கு - (உன் னோடு) உறாதவர்க்கு, உறுநோய் - (உனது) மிகுந்தநோயை, உரைப்பாய்- சொல்லலுற்ற, நெஞ்சு - நெஞ்சே, (நீ பொறாயாயினும் அரிதாகிய அதனை யொழிந்து),கடலை - (உனக்குத் துயரஞ்செய்கின்ற) கடலை, செறாஅஅய்- தூர்க்க முயற்சிசெய்வாயாக, (அஃது எளிது), (எ - று).

* அதனை - உன்னுடன் பொருந்தாதவர்க்கு உனது மிகுந்த காம நோயைச் சொல்லத் தொடங்கியதை.

† அஃது - கடலைத் தூர்த்தல். ‡ கேட்பாரென்றது தலைவரை.

¶ அது - உரைக்கலுற்றது. | குறிப்பான் - இகழ்ச்சிக் குறிப்பால்.

(தலைமகள் நெஞ்சே! நீ உன்னோடு பொருந்தாதார்க்கு) சொல்லலுற்றது அளவிறந்தநோ யாகலாலும் கேட்பார் உறவிலராகலாலும் அது முடிவதொன்றன்றாம்; முடிந்தாலும் பயன் இல்லை யென்பது கருதாமல் முயல்கின்றாய் என்னுங் குறிப்பால் 'வாழிய' என்றாள். உரைப்பாயென்பது பெயரெச்சப்பொருளில் வந்தது.

(க - து.) தலைமகள் உன்னோடு கூடாத தலைவர்க்கு உனது நோயைச்சொல்லத்தொடங்கிய நெஞ்சே! நீ அதனை யொழித்து உனக்குக் காமநோயை மிகச்செய்யும் கடலைத்தூர்க்க முயல்வாயாக என்றாளென்பது.

10. Farewell O my mind! would you who relate your great grief to strangers, try to fill up your own sea of (grief).



## 6-வது அதிகாரம்.

## நினைந்தவர் புலம்பல்:—Sad memories.

**பரி:—அஃதாவது முன்கூடிய ஞான்றையின்பத்தினை நினைந்து தலைமகடனிமை யெய்தலும், * பாசறைக்கட் டலைமகன் றனிமையெய்தலுமாம். இவ்வாறு இருவர்க்கும் பொதுவாதல்பற்றிப் பன்மைப்பாலாற் கூறப்பட்டது. † இது படர்மிகுதி தன்கண்ணதாகநினைந்த தலைமகட்குமுரித்தாகலின், அவ்வியைபுபற்றித் தனிப்படர் மிகுதியின்பின் வைக்கப்பட்டது.**

**தேளி:**—அஃதாவது முன்கூடிய காலத்தின்பத்தை நினைந்து தலைமகள் தனிமை யடைதலும், பாசறையிடத்துத் தலைமகன் தனிமையடைதலுமாம். இவ்வாறு தனிமையடைதல் தலைமகன் தலைமகளென்னு மிருவர்க்கும் பொதுவாதல் பற்றி 'நினைந்தவர்' என்று பலர்பாலால் சொல்லப்பட்டது. இது படர்மிகுதி தன்னிடத்ததாக நினைந்த தலைமகளுக்கும் உரியதாகலால், அச்சம்பந்தம்பற்றித் தனிப்படர்மிகுதியின்பின் வைக்கப்பட்டது. படர்மிகுதி - பெருந்துன்பம்.

க. உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
**கள்ளினுங் காம மினிது.**

* பாசறை - பகைமேற் சென்றோருறைவிடம். பாசறைக்கண் தலைமகன் தனிமை யெய்தல் - துணைவயிற் பிரிவாம்; அஃதாவது நண்பாகிய வேந்தனுக்குப் பகைவேந்தர் இடையூறுற்றவிடத்து அவ்விடையூறுதீர்த்தற் பொருட்டுத் தலைமகன் துணையாகப் பிரிதல்.

† இது - நினைந்தவர் புலம்பல்.

[தூதாய்ச்சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) முன்கூடிய ஞான்றையின்பத்தினைப் பிரிந்துழி நினைந்தாலும் அதுபொழுது பெற்றற்போல நீங்காத மிக்க மகிழ்ச்சியைத் தருதலால், உண்டுழியல்லது மகிழ்ச்சி செய்யாத கள்ளினுங் காமம் இன்பம் பயத்தலுடைத்து, (எ - று).

தன்றனிமையுந் தலைமகளை மறவாமையுங் கூறியவாறு.

தெளி:—[தூதாய்ச் சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது.) (இ - ள்.) (முன்கூடிய காலத்தின்பத்தை) உள்ளினும் - (பிரிந்த விடத்து) நினைந்தாலும், (அப்பொழுது பெற்றாற்போன்று), தீராப் பெருமகிழ் செய்தலால்-நீங்காத பெருமகிழ்ச்சியைத் தருதலால், கள்ளினும் - (உண்ட போதல்லது மகிழ்ச்சி செய்யாத) கள்ளைப்பார்க்கிலும், காமம்-, இனிது - இன்பந்தருதலுடையது, (எ - று).

தலைமகன் தனது தனிமையையும், தலைமகளை மறவாமையையும் சொல்லியவாறும்.

(க-து.) தூதாய்ச்சென்ற பாங்கனுக்குத் தலைமகன் மகிழ்ச்சி செய்வதில் கள்ளினும் காமம் மேன்மையுடையதாமென்றுனென் பது.

1. Sexual love is sweeter than liquor, as the thought of it creats an unfailing rapturous joy.



உ. எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) தம்மால் விரும்பப்படுவாரைப் பிரிவின்கணினைந்தால் அந்நினைந்தவர்க்கு அப்பிரிவான் வருவதோர் துன்பமில்லையாம்; அதனாற் காமம் எத்துணையேனு மினிதொன்றேகாண், (எ-று).

புணர்ந்துழியும் பிரிந்துழியும் ஒப்ப வினிதென்பான் எனைத்துமினிது என்றான். சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. தானுற்றியவகை கூறிய வாறு.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) தாம் வீழ்வார் - தம்மால் விரும்பப் படுவாரை, நினைப்ப - (பிரிவினிடத்து) நினைந்தால், (அந்நினைந்தவர்க்கு), வருவதொன்று - (அப்பிரிவால்) வருவதோர் துன்பம், இல்—இல்லையாம், (அதனால்), காமம்-, எனைத்தும் - எவ்வளவாயினும், ஒன்றினிதேகாண் - இன்பந்தருவ தொன்றே காண், (எ - று).

(காமம்) புணர்ந்த விடத்தும் பிரிந்த விடத்தும் சமமாக இனிமையைத்தருவதென்பான் எனைத்து மினிது என்றான். எனைத்தும் என்ற

வுயர்வு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. தலைமகன் தான் பொறுத்திருந்த விதத்தைச் சொல்லிய வாறும்.

(க-து.) தலைமகன் காமம் நினைக்குந் தோறும் இன்பத்தைச் செய்தலால், அதனினும் சிறந்தது பிறிதொன்றில்லையென்றுளென் பது.

2. Even to think on one's own lover knows no grief ; sexual love in any degree is always sweet.



௩. நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும்.

[தலைமகனை நினைந்து வருந்துகின்ற தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.]

**பரி:—(இ - ள்.) எனக்குத் தும்மல் எழுவதுபோன்று தோன்றிக் கெடாநின்றது ; அதனாற் காதலர் என்னை நினைப்பார்போன்று நினையாராகல் வேண்டும், (எ - று).**

சினைத்தல் - அரும்புதல். சேய்மைக் கண்ணராய கேளிர் நினைந்துழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மலுண்டாமென்னு முலகியல்பற்றித் தலைமகனெடுத்துக்கொண்ட வினை முடிவதுபோன்று முடியாமை யுணர்ந்தாள் சொல்லியதாயிற்று.

**தெளி:—**[தலைமகனை நினைந்து வருந்துகின்ற தலைமகள் தோழிக்குச் சொல்லியது.] (இ - ள்.) (எனக்கு) தும்மல்-, சினைப்பதுபோன்று - எழுவதுபோன்று, (தோன்றி), கெடும் - கெடுகின்றது, (அதனால்), நினைப்பவர்போன்று - (காதலர் என்னை) நினைப்பார் போன்று, நினையார்கொல்- நினையாராகல் வேண்டும், (எ - று).

சினைத்தல் - அரும்புதல். தூரதேயத்துள்ளாராகிய உறவினர் நினைந்த விடத்து அந்நினைக்கப்பட்டவர்க்குத் தும்மல் தோன்றுமென்னும் உலக வழக்குப்பற்றித் தலைமகன் எடுத்துக்கொண்ட தொழில் முடிவதுபோன்று முடியாமையை யறிந்ததலைமகள் சொல்லியதாயிற்று.

(க-து.) தும்மல் தோன்றியவிடத்துத் தலைமகள் தோழியை நோக்கிக் காதலர் என்னை நினைக்கின்றாரென்று கூறினாளென்பது.

3. A fit of sneezing threatens, but passes away; therefore, my beloved seemes to think of me, but his fancies stray.



௪. யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) எம்முடைய நெஞ்சத்து அவர் எப்பொழுது முளரேயா யிராநின்றார், அவ்வகையே அவருடைய நெஞ்சத்தும் யாமு முளமாதுமோ, ஆகேமோ? (எ-று).

ஓகார விடைச்சொல் ஈண்டிடைவிடாமை யுணர்த்தி நின்றது. உள மாயும் வினை முடியாமையின் வாராராயினாரோ, அது முடிந்தும் இலமாக லின் வாராராயினாரோவென்பது கருத்து.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) எங்நெஞ்சத்து-எமது நெஞ்சத்தில், அவர்-, ஓஒவுளரே - (எப்பொழுதும்) உள்ளவராயேயாயிருக்கின்றார், (அப் படியே), அவர் நெஞ்சத்து-அவரது நெஞ்சிலும், யாமும்—, உளேங்கொல்- உளமாகின்றேமோ, (ஆகேமோ), (எ - று).

ஒகார விடைச்சொல் இங்கு இடைவிடாமையை உணர்த்தி நின்றது. (காதலர்) யாம் இருந்தும் தொழில் முடியாமையால் வாராராயினாரோ, அத்தொழில் முடிந்தும் யாம் இல்லாமையால் வாராராயினாரோ வென்பது கருத்து. இடைவிடாமை-நடுவே நீங்காமை.

(க - து.) தலைமகள் எமது நெஞ்சத்திற் காதலரெப்போது மிருப்பதுபோல அவர் நெஞ்சத்தும் யாமிருக்கின்றேமோ என்று ளென்பது.

4. He continues to abide in my heart; do I likewise abide in his?



ரு. தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) தம்முடைய நெஞ்சின்கண்ணே யாஞ்செல்லாமல் எம்மைக் காவல்கொண்ட காதலர் தாமெம்முடைய நெஞ்சின்கண் ஒழி யாது வருதலை நாணார்கொல்லோ, (எ - று).

ஒருவரைத் தங்கண் வருதற்கு ஒருகாலு முடம்படாது தாமவர்கட் பல காலுஞ் சேறல் நாணுடையார் செயலன்மையின் 'நாணார்கொல்' என்றாள்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) தந்நெஞ்சத்து - தமது நெஞ்சினிடத்தே, (யாம் செல்லாமல்), எம்மைக் கடிகொண்டார் - எம்மைக் காவல் கொண்டகாதலர், (தாம்), எந்நெஞ்சத்து - எமது நெஞ்சினிடத்து, ஓவா வரல்-ஒழியாமல் வருதலுக்கு, நாணார்கொல் - நாணாரோ, (எ - று).

ஒருவரைத் தம்மிடத்து வருதலுக்கு ஒருகாலும் உடம்படாமல் தாம் அவரிடத்துப் பலகாலுஞ் செல்லுதல் நாணுடையார் செயலல்லாமையால் 'நாணார்கொல்' என்றாள்.

(க - து.) தலைமகள் காதலரது நெஞ்சினிடத்து யாஞ் செல்லாதிருக்க, எம்முடைய நெஞ்சினிடத்து அவர் ஒழியாது வருதல் தகாதென்றாளென்பது.

5. He who has imprisoned me in his heart, has he no shame to ceaselessly intrude my heart?



கூ. மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா
னுற்றநா ளுள்ள வுளேன்.

[அவரொடு புணர்ந்தஞான்றையின்பத்தை நினைந்து † இறந்துபாடெய்தா நின்றாய்; அதுமறத்தல்வேண்டு மென்றாட்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) யான் அவரொடு புணர்ந்த ஞான்றையின்பத்தை நினைதலான் இத்துன்ப வெள்ளத்தும் உயிர்வாழ்கின்றேன்; ‡ அது வின்றயின் யான் ¶ வேறெவற்றல் உயிர்வாழ்வேன்? (எ - று).

நாள் - ஆகுபெயர். உயிர்வாழ்தற்கு வேறுமுள; அவை பெற்றிலேனென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அவை அவன் றூதுவருதல், தன் றூதுசேறன் () முதலாயின. அவையாவுமின்மையின், இதுவல்லது எனக்குப் பற்றுக்கோடில்லை யென்பது கருத்து.

தெளி:—(அவரோடு கூடிய காலத்தின்பத்தை நினைந்து இறந்துபடுதலை அடைகின்றாய்; அதனை மறத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.) (இ - ள்.) யான் அவரோடு - யான் அத்தலைவருடன், உற்றநாள்—கூடியகாலத் தின்பத்தை, உள்ள - நினைதலால், உளேன்- (இத்துன்ப வெள்ளத்திலும்) உயிர்வாழ்கின்றேன் மற்று - அது இல்லையாயின், யானென்னுளேன் - யான் வேறெவற்றால் உயிர்வாழ்வேன், ()

நாள் என்னும் காலப்பெயர் அந்நாளிலுண்டாய இன்பத்தினை யுணர்த்துதலால் காலவாகு பெயராம். (அவரோடு யான் உற்றநாளின்பத்தை யுள்ளுதலே யல்லாமல்) உயிர்வாழ்தற்கு வேறுமுண்டு; அவை பெற்றிலேனென்பது தோன்ற நின்றமையால், மன் ஒழியிசைப் பொருளில் வந்தது. அவை அவனது தூதுவருதல், தனது தூதுசெல்லுதல் முதலாயின. அவை யாவும் இல்லாமையால், இந்நினைப்பல்லாமல் எனக்குப் பற்றுக்கோடு இல்லையென்பது கருத்து. ஒ-அசை. பற்றுக்கோடு - ஆதாரம்.

---

† இறந்துபாடெய்தாநின்றாய் - பெருந்துன்பத்தை யடைகின்றாய்.

‡ அது - (அவரோடு புணர்ந்தஞான்றை யின்பத்தை) நினைத்தல்.

¶ வேறெத்தால் என்றும் பாடமுண்டு.

() முதலாயின என்றமையின், காதலர்வருந் தேரொலி கேட்டல், காதலர் வருதல் முதலியவற்றையுங் கொள்க.

(க - து.) தலைமகள் தோழிக்கு யான் தலைவரோடு புணர்ந்த காலத்தின்பத்தை நினைதலால் உயிர்வாழ்கின்றேன்; அது இல்லாவிட்டால், வேறெவற்றா லுயிர்வாழ்வேனென்று ளென்பது.

6. I live by pondering over my former days of bliss enjoyed with him; if it were not so, how could I live?



எ. மறப்பி னெவனுவன் மற்கோன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடும்.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்.) † அவ்வின்பத்தை மறத்தலறியேனாய் இன்றுள்ளா நிற்கவும், பிரிவு என்னுள்ளத்தைச் சுடாநின்றது; அங்ஙனம் பிரிவாற்றாத யான் மறந்தால் இறந்து படாது உளேனாவது () எவற்றால்,(எ-று)

‡ செயப்படுபொருள் ‡ அதிகாரத்தான் வந்தது. மன் ஈண்டும் ¶ அதுபடநின்று ஒழியிசையாயிற்று. கொல் - அசைநிலை.

தெளி:—(இதுவுமது.) (இ - ள்.) மறப்பறியேன்-(அவ்வின்பத்தை) மறத்தலறியேனாய், உள்ளினும் - (இன்று) நினையா நிற்கவும், (பிரிவானது), உள்ளம் - (என்) உள்ளத்தை, சுடும் - சுடுகின்றது, (அவ்வாறு பிரிவினைப் பொறாத நான்), மறப்பின் - மறந்தால், எவனுவன் - சாவாது உளேனாவது எவற்றால், (எ - று).

அவ்வின்பத்தை யென்னுஞ் செயப்படுபொருள் அதிகாரத்தால் வந்தது. மன்னென்பது இங்கும் மேற்குறளுரையிற் கூறியது தோன்ற நின்று ஒழியிசைப் பொருளதாயிற்று. கொல் - அசைநிலை.

(க - து.) தலைமகள் யான் தலைவரோடு புணர்ந்தகாலத் தின்பத்தைமறந்தால் இறவாதிருப்பது எவற்றாலாமென்று ளென்பது.

7. I have never forgotten (the bliss); even to think of it burns my spirit; could I live, if I should ever forget it?



அ. எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு.

---

† அவ்வின்பத்தை - யான் காதலரோடு கூடிய காலத் தின்பத்தை.

() எத்தால் என்றும் பாடமுண்டு.

‡ மறக்கப் படுவது என்றும் பாடமுண்டு.

‡ நினைந்தவர் புலம்பலென்னு மிவ்வதிகாரத்தினால்.

¶ அதுபட - உயிர்வாழ்தற்கு வேறுமுள, அவை பெற்றிலேனென்பது தோன்ற.

(இத்துன்ப மறிந்துவந்து காதலர் நினக்கின்பஞ்
செய்வ ரென்றாட்குச் சொல்லியது.)

**பரி:**—(இ-ள்.) தம்மை யானெத்துணையும் மிக நினைந்தாலும் † அதற்கு வெகுளார்; காதலர் எனக்குச் செய்யுமின்பமாவது ‡ அவ்வளவன்றே? (எ-று).

வெகுளாமை - அதற்குடம்பட்டு நெஞ்சின்கணிற்றல். தனக்கு அவ்வின்பத்திற் சிறந்த தின்மையின், அதனைச் 'சிறப்பு' என்றாள். ¶ காதலர் நம்மாட் டருளென்றும், செய்யுங் குணமென்றும் பாடமோதுவாருமுளர். தோழி கூறியவதனைக் குறிப்பானிகழ்ந்து கூறியவாறு.

**தெளி:**—[இத்துன்பத்தை அறிந்துவந்து காதலர் உனக்கு இன்பத்தைச் செய்வாரென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ-ள்.) எனைத்து நினைப்பினும் - (யான் தம்மை) எவ்வளவும் மிக நினைந்தாலும், காயார் - (அதற்குக்) கோபியார், காதலர் - தலைவர், செய்யுஞ் சிறப்பு - (எனக்குச்) செய்யுமின்பமாவது, அனைத்தன்றோ - அவ்வளவன்றோ?

கோபியாமை-அந்நினைத்தற்கு உடன்பட்டு நெஞ்சின்கணிற்றல். தனக்கு அவ்வின்பத்திலும் சிறந்தது இல்லாமையால், அதனைச் 'சிறப்பு' என்றாள். தலைமகள் தோழிசொல்லிய வதனைக் குறிப்பால் இகழ்ந்துசொல்லியவாறும்.

(க-து.) தலைமகள் தோழிக்குக் காதலர் யான் எவ்வளவு நினைந்தாலுங் கோபியாது, அதற்குடன்பட்டு என்னெஞ்சின்கணின்று இன்பஞ் செய்கின்றாரென்றாள் என்பது.

8. However much I may think of him he excites no wrath; is this not so much the delight my beloved bestows on me?



கூ. விளியுமென் னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து.

[தலைமகன் றூதுவரக் காணாது வருந்துகின்றாள் ✚ வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.]

† அதற்கு - மிகநினைத்தற்கு.

‡ அவ்வளவன்றோ - வெகுளாதிருத்த லல்லவோ.

¶ காதலர் செய்யுஞ் சிறப்பு என்பதற்குப் பிரதியாகக் காதலர் நம்மாட்டருள் என்றும், காதலர் செய்யுங் குணம் என்றும் பாடங் கூறுவாருமுண்டு.

✚ வற்புறுத்தும் - (தூதுவரும்; அஞ்சவேண்டாமென்று) உறுதிமொழி கூறும்.

பரி:—(இ - ள்.) முன்பெல்லாம் நாமிருவரும் வேறல்லமென்று சொல்லுவார தளியின்மையை மிகவு நினைந்து எனதினியவுயிர் † கழியா நின்றது, (எ - று).

அளியின்மை - பின்வருவாராதலுமாய்ப் பிரிதலும், பிரிந்து வாராமையும், ஆண்டுநின்றுழித் தூதுவிடாமையும் ‡ முதலாயின. பிரிவாற்றல் வேண்டுமென வற்புறுத்தாட்கு என்னுயிர் கழிகின்றது பிரிவிற்கன்று, அவரன்பின்மைக்கென ¶ எதிரழிந்து கூறியவாறு.

தெளி:—[தலைமகனது தூதுவரக் காணாது வருந்துகின்ற தலைமகள் வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.] (இ - ள்.) வேறல்லமென்பார் - (முன்பெல்லாம் நாமிருவரும்) வேறல்லேமென்று சொல்லுவாரது, அளியின்மை - அருளில்லாமையை, ஆற்றநினைந்து - மிகவும் நினைந்து, னின்னுயிர் - எனது இனியவுயிர், விளியும் - கழிகின்றது, (எ - று).

அளியின்மை - பின்வருவாராதலுமாய்ப் பிரிதலும், பிரிந்துவாராமையும், அங்கு நின்றவிடத்துத் தூதுவிடாமையும் முதலாயின. பிரிவினைப் பொறுத்தல் வேண்டுமென்று வற்புறுத்திக் கூறுந்தோழிக்கு என்னுயிர் கழிகின்றது பிரிவைக் குறித்தன்று, அவரது அன்பில்லாமையைக் குறித்தென்று (தலைமகள்) எதிரழிந்து சொல்லியவாறும்.

(க - து.) தலைமகள் தோழிக்குக் காதலரது அருளில்லாமையை நினைந்து என்னுயிர் வருந்துகின்றதன்றி, அவரது பிரிவை நினைந்து வருந்தவில்லையென்று சொன்னது.

9. My dear life is wasting away by pondering too much over the ungracious deeds of him who said we were not different.



௧0. விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி.

[வன்புறை யெதிரழிந்தாள் காமமிக்க X கழிபடாற் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) மதியே! o என்னெஞ்சினை இடைவிடா திருந்தே விட்டுப் போயினாரை யானென் கண்ணளவானாயினும் எதிர்ப்படும் வகை நீ படாதொழிவாயாக, (எ - று).

† கழியா நின்றது - வருந்துகின்றது.

‡ முதலாயின என்றமையின், தூதுவிட நினையாமை முதலியவற்றையுங்கொள்க.

¶ எதிரழிந்து - (தோழிக்கு) எதிரே வருந்தி.

X கழிபடர் - பெருந்துன்பம்.

o என்னெஞ்சின் என்றும் பாடமுண்டு.

கண்ணளவா னெதிர்ப்படுதலாவது மதி † இருவரானு நோக்கப்படுதலின் இருவர் கண்ணும் ‡ அதன்கண்ணே சேர்தல். ¶ முதலொடு வினைக்கொற்றுமை யுண்மையிற் சென்றாரைக்காண என்றும், || குறையுறுகின்றாளாகலின் 'வாழி' என்றுங் கூறினாள். * இனிப்படாதென்பது பாடமாயின், கனவிடைக் கண்ணினாற் காணுமாறு மதி படுகின்றதில்லையென அதனாற் றுயில்பெறாது வருந்துகின்றாள் கூற்றாக்குக. இப்பொருட்கு வாழியென்பது அசைநிலை.

**தெளி:**—[தோழிகூறிய வன்புறைக்கு எதிரழிந்ததலைமகள் காமமிக்க கழிபடரால் சொல்லியது.] (இ - ள்.) மதி - சந்திரனே, விடாஅது—(என்னெஞ்சினை) இடைவிடாதிருந்தே, சென்றாரை - (விட்டுப்) போயினாரை, (யானென்), கண்ணினால் - கண்ணளவாலாயினும், காண - எதிர்ப்படும்வகை, படாஅதி - (நீ) மறையாதிருப்பாயாக, (எ - று).

கண்ணளவா லெதிர்ப்படுதலாவது மதியிருவராலும் பார்க்கப்படுதலால் இருவர் கண்களும் அதனிடத்தே சேர்தல். (தலைவனென்னும்) முதலுடன் (அவரது கண் என்னும்) உறுப்பிற்கு ஒற்றுமை யிருக்கின்றமையால் சென்றாரைக்காண என்றும், குறையுறுகின்றாளாகலால் மதியே! நீ 'வாழி' என்றும் சொல்லினாள்.

(க - து.) தலைமகள் சந்திரனே! யான் காதலரை யுன்னிடத்துக்காண நீ மறையாதிருப்பாயாக என்று சொன்னது.

10. O Moon! may you live. Set not that my eyes may see him who departed, ever biding with me



† இருவரானும் - தலைமகன் தலைமகளென்னு மிருவரானும்.

‡ அதன்கண்ணே - அச்சந்திரனிடத்தே.

¶ சந்திரனைக்காணும் தலைமகளுடைய அவனது கண்ணுக்கு உறுப்புத்தற்கிழமைச் சம்பந்தமிருத்தல் பற்றிச் சென்றாரைக்காண என்று கூறினாள். தலைமகனது கண் சம்பந்தப்பட்டுள்ள சந்திரனிடத்தது தன்னுடைய கண் சம்பந்தப்பட்டிருத்தலையே தலைமகள் அவனைக் காண்டலாகக் கருதினளென்க.

|| குறையுறுகின்றாள்-தன்னுடைய குறைகளைச் சொல்லுகின்றாள்.

* படாஅதி யென்பதற்குப் பிரதியாகப் படாது என்பது பாடமானால், கண்ணினாற்காண-கனவினிடத்துக (காதலரைக்) கண்ணினாற் காணும்படி, மதிபடாது - சந்திரன் மறைகின்றானில்லையென்று அச்சந்திரன் மறையாமையால் நித்திரை யடையாது வருந்துகின்றவளது சொல்லாக்குக. இவ்வர்த்தத்திற்கு வாழியென்பது அசைநிலை.

## 7-வது அதிகாரம்.

## * கனவுநிலையுரைத்தல்:—Relating the dreams.

**பரி:—அஃதாவது தலைமகள் தான் கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல். அக்கனவு † நனவின்கணினைவு மிகுதியாற் கண்டதாகலின், ‡ இது நினைந்தவர் புலம்பலின்பின் வைக்கப்பட்டது.**

**தெளி:**—*அஃதாவது தலைமகள் தான் கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல். அக்கனவு நனவினிடத்துள்ள நினைவின் மிகுதியால் கண்டதாகலால், இது நினைந்தவர் புலம்பலின்பின் வைக்கப்பட்டது.*

க. காதலர் தூதொடு வந்த கனவினுக்
 கியாதுசெய் வேன்கொல் விருந்து.

[*தலைமகன் தூது வரக்கண்டாள் சொல்லியது.*]

**பரி:—(இ - ள்.) யான் வருந்துகின்ற தறிந்து அது தீரக் காதலர் விடுத்த தூதினைக்கொண்டு என்மாட்டுவந்த கனவினுக்கு யான் விருந்தாக யாதனைச் செய்வேன், (எ - று).**

*விருந்தென்றது விருந்திற்குச் செய்யுமுபசாரத்தினை. ¶ அது | கனவிற்கொன்று காணுமையின் 'யாதுசெய்வேன்' என்றாள்.*

**தெளி:**—[*தலைமகன் தூதுவரக்கண்ட தலைமகள் சொல்லியது.*) (இ - ள்.) (*யான் வருந்துகின்றதை அறிந்து அதுதீர*) *காதலர் - தலைவர்,* (விடுத்த), *தூதொடு - தூதினைக்கொண்டு, வந்த - (என்னிடத்து) வந்த,*

* *கனவு - சொப்பனம். எந்த அவஸ்தையி (காலத்தி)ல் இந்திரியங்களின் சகாயமில்லாமல் ஹிதா என்னும் நாடியில் தங்கியிருக்கின்ற ஜாக்கிரத்தின் (நனவின்) சம்ஸ்காரத்தால் (வாசனையால்) விஷயங்கள் அறியப்படுகின்றனவோ அது சொப்பனுவஸ்தை யெனப்படும். சொப்பனுவஸ்தையில் சீவனுக்கு ஸ்தானம் - கண்டம், சக்தி - ஞானம், மத்திமை - வாக்கு, போகம் - சூட்சுமம், குணம் - ராசதம், பெயர் - தைஜசனும்.*

† *சொப்பன சுழுத்தி யவஸ்தைகளுக்கு வேருயும் இந்திரியங்களாலுண்டாகும் ஞானத்திற்கும் அதன் சம்ஸ்காரத்திற்கும் ஆதாரமாயுமிருக்கும் காலம் ஜாக்கிராவஸ்தை (நனவு) எனப்படும். இவ்வவஸ்தையில் சீவனுக்கு நேத்திரம் - ஸ்தானம், கிரியை - சக்தி, வைகரி - வாக்கு, போகம் - ஸ்தூலம், குணம் - சத்துவம், பெயர் - விசுவனும்.*

‡ *இது - கனவுநிலையுரைத்தல்.*

¶ *அது - உபசாரம்.*

| *நனவிலொன்று காணுமையான் என்றும் பாடமுண்டு.*

கனவினுக்கு - சொப்பனத்திற்கு, விருந்து - (யான்) விருந்தாக, யாதுசெய் வேன் - எதனைச் செய்வேன், (எ - று).

கொல் - அசைநிலை. விருந்தென்றது விருந்தினர்க்குச் செய்யும் உப சாரத்தை. அது கனவிற்கு ஒன்று காணாமையால் 'யாதுசெய்வேன்' என்றாள்.

(க - து.) காதலரது தூதுவரக் கனவிற்கண்ட தலைமகள் அக்கனவை வியந்து கூறினாளென்பது.

1. What feast shall I prepare for the dream which brought to me my lover's message.



உ. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.

(தூதுவிடக் கருதியாள் சொல்லியது.)

பரி:—(இ - ள்.) துஞ்சாது வருந்துகின்ற என் கயல்போலு மீண் கண்கள் * யானிரந்தாற் றுஞ்சுமாயின் கனவிடைக் காதலரைக் காண் பேன், கண்டால் அவர்க்கியா னுற்றியுளோறுய தன்மையை யானே விரி யச்சொல்வேன், (எ - று).

'கயலுண்கண்' என்றாள்; கழிந்த † நலத்திற்கிரங்கி. உயல் - காம நோய்க்குத் தப்புதல். தூதர்க்குச் சொல்லாது யாமடக்குவனவும் சொல் லுவனவற்றுள்ளுஞ் சுருக்குவனவற்றின் பரப்புந் தோன்றச் சொல்வே னென்னுங் கருத்தாற் 'சாற்றுவேன்' என்றாள். இனி ‡ அவையுந் துஞ்சா; ¶ சாற்றலுங் கூடாதென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக் கண் வந்தது. () முன்னுங்கண்டாள் கூற்றாகலின், கனவுநிலை யுரைத்த லாயிற்று.

தெளி:—[தூதுவிடக் கருதிய தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) கயலுண்கண் - (தூங்காது வருந்துகின்ற எனது) கயல்போலும்மையிட்ட கண்கள், யான் இரப்ப - யான் இரந்தால், துஞ்சின் - தூங்குமாயின், (கன வினிடத்துக் காதலரைக் காண்பேன் கண்டால்), கலந்தார்க்கு - அக்காத

* யானிரந்தால் - யான் யாசித்து வேண்டினால்.

† நலத்திற்கு - அழகிற்காக.

‡ அவையும் - கண்களும்.

¶ சாற்றலும் - தலைவர்க்கு யான் பொறுத்திருக்கின்றேனாகிய தன் மையைச் சொல்லுதலும்.

() முன்னுங்கண்டாள்-முன்னுங் காதலரைக் கனவினிடத்துக் கண்ட தலைமகளாது.

லர்க்கு, உயலுண்மை - (யான்) பொறுத்திருக்கின்றேனுய தன்மையை, சாற்றுவேன்—(யானே) விரியச்சொல்லுவேன், (எ - று).

'கயலுண்கண்' என்றாள்; கழிந்தநலத்திற்கிரங்கி. உயல் - காம நோய்க்குத் தப்புதல். தூதர்க்குச் சொல்லாமல் யாம் அடக்குவனவும் சொல்லுவன வற்றுள்ளும் சுருக்குவனவற்றின் விரிவும் தோன்றச்சொல்லு வேனென்னுங் கருத்தால் 'சாற்றுவேன்' என்றாள். இனி அவையுந்துஞ்சு வனவல்ல; சாற்றுவதும் கூடாதென்பதுதோன்ற நின்றமையால், மன் ஒழியிசைப்பொருளில் வந்தது. முன்னுங்கண்டவளது சொல்லாகலால் (இக்குறள்) கனவுநிலை யுரைத்தலாயிற்று.

(க - து.) தலைமகள் என் கண்களுறங்குமாயின், கனவினிடத்துக் காதலரைக் கண்டு அவர்க்கு யான் பொறுத்திருக்கின்ற விதத்தை விரித்துச் சொல்வேனென்று ளென்பது.

2. If my dark fish - like eyes will close in sleep as I implore, I will fully relate the tale of my sufferings to my lord.

---

௩ நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர்

[ஆற்றாளெனக் கவன்றாட்கு ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நனவின்கண் வந்து தலையளி செய்யாதாரை யான் * கனவின்கட் கண்ட காட்சியானே என்னுயிருண்டாகா நின்றது.

† மூன்றனுருபுகள் ஏழன் பொருண்மைக்கண் வந்தன. ‡ அக்காட்சி யானே யாஞற்றியுளேனுகின்றேன், நீ கவலல்வேண்டாவென்பதாம்.

தெளி:—[பொறுக்கமாட்டாளென்று கவலையுற்ற தோழிக்குப் பொறுப்பேனென்பது தோன்றத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) நனவினான் - நனவினிடத்து, (வந்து), நல்காதவரை - தலையளி செய்யாத தலைவரை, கனவினான் - (யான்) கனவினிடத்து, காண்டலின் - (கண்ட) காட்சியாலே, என்னுயிர் —, உண்டு - உண்டாகாநின்றது, (எ - று).

---

* கனவின்கட் காண்டலானே என்றும் பாடமுண்டு.

† நனவினான் கனவினான் என்னும் (ஆன் என்னும்) மூன்றனுருபுகள் தமக்குரிய பொருளைவிட்டு நனவின்கண், கனவின்கண் என ஏழனுருபி னிடப்பொருளில் வந்தன. இவ்வாறு வருவது உருபுமயக்க மெனப்படும்.

‡ அக்காட்சியானே-காதலரை யான் கனவினிடத்துக் கண்ட காட்சியாலே.

மூன்றனுருபுகள் ஏழனுருபின் பொருளில் வந்தன. அக்காட்சியாலே யான் பொறுத்திருக்கின்றேனென்கின்றேன், (தோழியே!) நீ கவலையுறல் வேண்டாம் என்பதாம். தலையளி - கருணை.

(க - து.) தலைமகள் தோழியை நோக்கி, யான் தலைவரைக் கனவினிடத்துக் கண்டகாட்சியாலே என்னுயிர் நீங்கா திருக்கின்றதென்றுளென்பது.

3. My lifetime passes, because in my dreams I see him who in waking hours shows no kindness.

ச. கனவினா னுண்டாகுங் காம நனவினா
னல்காரை நாடித் தாற்கு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) நனவின்கண் வந்து தலையளி செய்யாதாரை அவர் சென்றுழி நாடிக்கொண்டுவந்து கனவு தருதலான் அக்கனவின் கண்ணே எனக்கின்பமுண்டாகாநின்றது, (எ-று).

காமம் - * ஆகுபெயர். † நான்காவது மூன்றன் பொருண்மைக்கண் வந்தது. ‡ இயல்பான் நல்காதவரை அவர்சென்ற தேயமறிந்து சென்று கொண்டுவந்து தந்து நல்குவித்த கனவால் யானுற்றுவ லென்பதாம்.

தெளி:—(இதுவுமது.) (இ-ள்.) நனவினான் - நனவின்கண் (வந்து), நல்காரை - அருள்செய்யாதவரை, நாடி - (அவர் சென்றவிடத்துத்) தேடி, தாற்கு—(கொண்டுவந்து கனவு) தருதலால், கனவினான் - அக்கனவினிடத்தே, காமம் - (எனக்கு) இன்பம்,உண்டாகும்-உண்டாகின்றது, (எ - று).

காமம் - கருவியாகுபெயர். நான்கனுருபு மூன்றனுருபின் பொருளில் வந்தது. இயல்பாக அருள்செய்யாதவரை அவர் சென்ற தேயத்தை யறிந்து சென்று கொண்டுவந்து கொடுத்து அருள்செய்வித்த கனவால் யான் பொறுப்பேனென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழிக்குத் தலைவரைக் கனவினிடத்துக் காண்டலால்,எனக்குஅக்கனவினிடத்து இன்பமுண்டாகின்றதென்றுளென்பது

---

* காமமென்னுங் கருவியின் பெயர் அதனாலுண்டாகும் இன்பத்தை யுணர்த்துதலால், கருவியாகு பெயராம்.

† தாற்கு என்னுங் குவ்வுருபு (நான்கனுருபு) தனக்குரிய பொருளை விட்டு மூன்றனுருபின் கருவிப்பொருளில் வந்தது.

‡ இயல்பாக என்றும் பாடமுண்டு.

4. I enjoy some pleasure in my dream because it searches out and makes me see him who does not favor me in my wakefulness.

௫. நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) முன்னனவின்கண் அவரைக்கண்டு நுகர்ந்த வின்பந்தானு மினிதாயிற்று; அப்பொழுதே, இன்று கனவின்கட் கண்டு நுகர்ந்த வின்பமும் அக்கண்டபொழுதே யினிதாயிற்று; அதனான் எனக் * கிரண்டுமொத்தன, (எ - று).

† இனிதென்பது முன்னுங் கூட்டப்பட்டது. ‡ கனவு—ஆகுபெயர். ¶ முன்னும்யான்பெற்ற () திவ்வளவே; இன்னும் | அதுகொண்டாற்றுவ லென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) நனவினான் - (முன்னே) நனவினிடத்து, கண்டதூஉம் - (அத்தலைவரைக்) கண்டனுபவித்த வின்பமும், ஆங்கே - அப்பொழுதே, இனிது - இனிதாயிற்று, கனவுந்தான் - (இன்று) கனவினிடத்து, (கண்டனுபவித்தவின்பமும்), கண்டபொழுதே - அக் கண்டபொழுதே, இனிது - இனிதாயிற்று, (அதனால் எனக்கு இரண்டும் ஒத்தன), (எ - று).

இனிதென்பது முன்னுங் கூட்டப்பட்டது. கனவு - இடவாகுபெயர். முன்னும் யான் பெற்றது இவ்வளவே; இன்னும் அதுகொண்டு பொறுப் பேனென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழிக்குத் தலைவரை யான் முன் நன விற்கண்டனுபவித்த இன்பமும் இப்போது கனவிற் கண்டனு பவித்த இன்பமும் எனக்கொத்திருக்கின்றன வென்றாளென்பது.

5. It was sweet when I beheld him in my waking hours; it is equally pleasant when I see him in my dreams.



---

* இரண்டும் - காதலரை நனவின்கண் கண்டனுபவித்த இன்பமும் கனவின்கண் கண்டனுபவித்த இன்பமும்.

† இனிது என்பது கண்டதூஉம் என்பதனோடுங் கூட்டப்பட்டது.

‡ கனவு என்னும் இடப்பெயர் அங்கு அனுபவித்த இன்பத்தினை யுணர்த்துதலால், இடவாகுபெயராம்.

¶ முன்னும் - காதலர் பிரியாததன் முன்னும்.

() இவ்வளவே - இவ்வள வின்பமே.

| அதுகொண்டு-அவ்வளவின்பங் கொண்டு.

௬. நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) † நனவென்று சொல்லப்படுகின்ற ஒருபாவி இல்லையாயின், கனவின்கண் வந்து கூடியகாதலர் என்னைப்பிரியார்.

ஒன்றென்பது அதன் கொடுமை விளக்கி நின்றது. ‡ அஃது இடையே புகுந்து கனவைப் போக்கி அவரைப் பிரிவித்ததென்பது பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. கனவிற்பெற் றாற்றுகின் றமை கூறியவாறு.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) நனவெனவொன்று - நனவென்று சொல்லப்படுகின்ற ஒருபாவி, இல்லையாயின்-இல்லையானால், கனவினான்-கனவினிடத்து, (வந்து கூடிய), காதலர் - தலைவர், நீங்கலர் - (என்னைப்) பிரியார், (எ - று).

ஒன்றென்பது அந்நனவின்கொடுமையை விளக்கிநின்றது. அது நடுவே புகுந்து கனவைப்போக்கி அவரைப் பிரிவித்த தென்பது தோன்ற நின்றமையால், மன் ஒழியிசைப்பொருளில்வந்தது. (தலைமகள்) கனவினிடத்துக்காதலரைப்பெற்றுப் பொறுக்கின்றமையைச் சொல்லியவாறும்.

(க - து.) தலைமகள் தோழிக்கு நனவில்லையாயின், தலைவரைக் கனவின்கண் விடாதுகூடியிருப்பே னென்று ளென்பது.

6. If there were no such thing as wakeful state, my beloved who came in my dream would never depart from me.



எ. நனவினா னல்காக் கொடியார் கனவினா
னென்னெம்மைப் பீழிப் பது.

[விழித்துழிக் காணாளாயினாள் கனவிற்கூட்ட நினைந்து ஆற்றாளாய்ச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) ஒரு ஞான்றும் நனவின்கண் வந்து தலையளி செய்யாத கொடியவர் நாடோறுங் கனவின்கண் வந்து நம்மை வருத்துவது எவ்வியைபு பற்றி, (எ - று).

பிரிதலும் பின்னினைந்து வாராமையு நோக்கிக் 'கொடியார்' என்றும், கனவிற் றோண்மேலராய் விழித்துழிக்காரத்தலின் † அதனானுந் தன்ப

† "அழுக்கா றெனவொரு பாவி" என்னுங்குறளும், "இன்மையென வொரு பாவி" என்னுங் குறளும் இங்குணர்தற்பாலனவாம்.

‡ அஃது - நனவு. ¶ அதனானும் -கனவிற் றோண்மேலராய் விழித்துழிக்காத்தலினாலும்.

மாகா நின்றதென்பாள் 'பீழிப்பது' என்றுங் கூறினள். † நனவினில்லது கனவினுமில்லை யென்பார், ‡ அது கண்டிலமென்பதாம்.

தெளி:—[விழித்தவிடத்துத் தலைமகனைக் காணாதவளாகிய தலைமகள் கனவிற் புணர்ச்சியை நினைந்துபொறுக்காதவளாய்ச்சொல்லியது.] (இ-ள்.) நனவினான் - (ஒருநாளும்) நனவில் (வந்து), நல்கா - அருள்செய்யாத, கொடியார்-கொடியவர், கனவினான், (நாள்தோறும்) கனவில் (வந்து), எம்மை—,பீழிப்பது - வருத்துவது, என் - எசசம்பந்தம் பற்றி, (எ - று).

தன்னைவிட்டுப் பிரிதலும் பின்னிணைந்து வாராமையும் நோக்கிக் 'கொடியார்' என்றும், கனவில் தோளின்மேலராய் விழித்தபோது மறைதலால் அதனாலும் துன்பமாகின்றதென்பாள் 'பீழிப்பது' என்றும் சொல்லினள். உலகத்தார் நனவில் இல்லாதது (காணாதது) கனவிலும் இல்லை யென்பார், யாம் அதுகண்டிலமென்பதாம்.

(க - து.) தலைமகள் ஒருநாளும் நனவின்கண் வந்து அருள செய்யாததலைவர் நாள்தோறும் கனவின்கண் வந்து என்னை வருத்துதல் தகுதியுடையதாகாதென்றாள் என்பது.

7. The cruel one who would not favour me in my wakeful state, why should he thus torment me in my nightly dreams?



அ. துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்த ராவர் விரைந்து.

[தானாற்றுதற்பொருட்டுத் தலைமகனை ¶ யியற்பழித்தாட்கு இயற்பட மொழிந்தது.]

**பரி:—(இ - ள்.) என்னெஞ்சு விடாதுறைகின்ற காதலர் யான் றுஞ்சும்பொழுது வந்து என்றோண்மேலராய்ப் பின் விழிக்கும் பொழுது விரைந்து பழைய நெஞ்சின்கண்ணராவர், (எ - று).**

கலவிவிட்டு மறையுங் கடுமைபற்றி 'விரைந்து' என்றாள். ஒருகாலும் என்னினீங்கி யறியாதாரை நீ நோவற்பாலையல்லை யென்பதாம்.

தெளி:—(தான் பொறுத்தற்பொருட்டுத் தலைமகனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்படச் சொல்லியது.) (இ - ள்.) (என்னெஞ

† நனவினில்லது கனவினுமில்லையென்பது உலக வழக்கு. சீவன் சாக்கிர (நனவு) வாசனாவிஷய போகத்தை மனமென்னுங் கரணத்தாலனுபவிக்கும் காலம் சொப்பனமாமென்ப திங்குணர்தற் பாலதாம்.

‡ ஒருநாளும் நனவின்கண் வந்து தலையளிசெய்யாத கொடியவரை நாள்தோறுங் கனவின்கண் காணுதலால், யாம் அது (நனவினில்லது கனவினு மில்லையென்பதைக்) கண்டிலம் என்று தலைமகள் கூறினள்.

¶ இயற்பழித்தல்-காதலர் அன்பிலரென்று பாங்கிபழித்துப்பேசுதல்.

பின்கண் விடாமல் உறைகின்ற காதலர்) துஞ்சுங்கால் - (யான்) தூங்கும்போது, (வந்து எனது), தோண்மேலராகி - தோளின்மேலுள்ளவராகி, விழிக்குங்கால் - (பின்) விழிக்கும்போது, விரைந்து—,நெஞ்சத்தாரவர் - (பழைய) நெஞ்சிலுள்ளவராவர், (எ - று).

புணர்ச்சியைவிட்டு மறையுங் கடுமைபற்றி 'விரைந்து' என்றாள். ஒருகாலும் என்னினின்றும் நீங்கி யறியாத காதலரை (தோழியே!) நீ பழித்துப் பேசவேண்டாமென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியை நோக்கித் தூங்கும்போது என் தோளின்மே லிருக்குந் தலைவர் விழிக்கும்போது விரைந்து என் மனத்திலிருக்கின்றா ரென்றாள் என்பது.

8. When I sleep, my beloved rests embracing me; but when I wake up, he hastens to fill my heart.



௯. நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) தமக்கொரு காதலரின்மையின் அவரைக் கனவிற் கண்டறியாத மகளிர் தாமறிய நனவின்கண் வந்து நல்காத நங்காதலரை அன்பிலரென நோவா நிற்பர், (எ - று).

இயற்பழித்தது பொறாது புலக்கின்றாளாகலின், † நன்மைதோன்றக் கூறினாள். தமக்குங் காதலருளராய் அவரைக் கனவிற்கண் டறிவாராயின், நங்காதலர் கனவின்கணுற்றி நல்குதலறிந்து நோவாரென்பதாம்.

தெளி:—(இதுவுமது.) (இ-ள்.) (தமக்கு ஒரு காதலர் இல்லாமையால்) கனவினான் - கனவில், காதலர்க் காணாதவர் - அக்காதலரைக் கண்டறியாத மகளிர், நனவினான் - (தாம் அறிய) நனவில், (வந்து),நல்காரை- அருள்செய்யாத (நமது) காதலரை, நோவர் - (அன்பிலரென்று) நோவா நிற்பர், (எ - று).

தலைமகள் பாங்கி இயற்பழித்தது பொறாது பிணங்குகின்றாளாகலால்,*நன்மை தோன்றச் சொல்லினாள். தமக்கும் காதலருளராய் அவரைக் கனவிற் கண்டு அறிவாராயின், நமது காதலர் கனவினிடத்து (நாம் அறியவந்து) பொறுத்திருக்கும் வகைசெய்து அருள்செய்தலறிந்து நோவாரென்பதாம்.

*† துஞ்சுங்காற் றோண்மேலராவர், விழிக்குங்கால் நெஞ்சத்தாராவர், கனவின்கண் நல்குவரென்று,தலைமகளது நன்மை தோன்றக் கூறினாள்.

(க - து.) தலைமகள் கனவில்வந்து எனக்கு அருள்செய்கின்ற காதலரை நனவிற்காணாதமகளிர் அன்பிலரென்று பழிக்கின்றனரென்றாள் என்பது.

9. They who have no lovers to behold in their dreams, blame him who shows not in my waking hours.

ம. நனவினா னல்கிநீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர்.

(இதுவுமது.)

பரி:—(இ - ள்.) இவ்வூரின் மகளிர் நனவின்கண் நம்மை நீத்தாரென்று நங்காதலரைக் கொடுமை கூறநிற்பர்; அவர் கனவின்கண் நீங்காது வருதல் கண்டறியாரோ, (எ - று).

* என்னொடு தன்னிடை வேற்றுமையின்றாயின், யான் கண்டது தானுங் கண்டமையும்; † அது காணாது அவரைக்கொடுமை கூறுகின்றமையின் அயலாளேயா மென்னுங் கருத்தால் 'இவ்வூரவர்' என்றாள்.

தெளி:—(இதுவுமது.) (இ - ள்.) இவ்வூரவர் - இவ்வூரிலுள்ள மகளிர், நனவினான் - நனவினிடத்து, நல்கிநீத்தாரென்பர் - நம்மைவிட்டு நீங்கினரென்று (நமது காதலரைக் கொடுமை) சொல்லாநிற்பர், கனவினான்- (அவர்) கனவினிடத்து, காணார்கொல் - (நீங்காது வருதலைக்) கண்டறியாரோ, (எ - று).

என்னோடு (அவள்) தன்னிடத்து வேற்றுமை யில்லையானால், (அவள்) யான்கண்டது தானுங்கண் டமைவள் ; அதுகாணாமல் அவரைக் கொடுமை சொல்லுகின்றமையால் அயலாளேயாம் என்னுங் கருத்தால் 'இவ்வூரவர்' என்றாள்.

(க - து.) தலைமகள் எமது கனவினிடத்து நீங்காது வருகின்ற காதலரை யறியாதமகளிர் நனவினிடத்து நம்மை விட்டுப் பிரிந்தாரென்றவரைப் பழிகூறா நிற்பரென்றாள் என்பது.

10. The women of this town say that he has forsaken me in my waking hours ; they surely see him not visiting me in my dreams.

---

* என்னொடு தன்னிடை - தலைவியாகிய என்னுடன் தோழியாகிய தன்னிடத்து ; எனக்கும் அவளுக்கும் என்பதாம்.

† அது காணாது - கனவினிடத்துக் காதலர் நீங்காது வருதலைக் காணாமல்.

## 8-வது அதிகாரம்

### பொழுதுகண்டிரங்கல்:—

### Lamenting at the approach of night.

பரி:—அஃதாவது மாலைப்பொழுது வந்துழி அதனைக்கண்டு தலைமகளிரங்குதல். † கனாமுந்துறாத வினையில்லை என்பதுபற்றிப் பகற்பொழுதாற்றி யிருந்தாட்கு உரியதாகலின், ‡ இது கனவுநிலை யுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது மாலைப்பொழுது வந்தவிடத்து அதனைக்கண்டு தலைமகள் இரங்குதல். கனாமுந்துறாத வினையில்லை யென்பது பற்றிப் பகற்பொழுது பொறுத்திருந்த தலைமகளுக்கு உரியதாகலால், இது கனவு நிலை யுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

க * மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.

[பொழுதொடு புலந்து சொல்லியது.]

பரி:—(இ - ள்.) பொழுதே ! நீ முன்னாள்களின் வந்த மாலையோவெனின், அல்லை ; இருந்தவாற்றான் அந்நாட் காதலரை மணந்த மகளிருயிரை யுண்ணும் இறுதிக்காலமா யிருந்தாய், (எ - று).

முன்னாள் - ¶ கூடியிருந்த நாள். + அந்நாண் மணந்தாரெனவே, பின் பிரிந்தாராதல் பெறுதும். | வாழியென்பது குறிப்புச்சொல்

† பழமொழி—கல்வி 2. கனவினிடத்து முந்துறாத (நனவினிடத்து நிகழாத) வினை நிகழுவதில்லை என்பது.

நனவில் நிகழும் வினையின் சம்ஸ்காரமே கனவில் நிகழுதலால், கனவில் ஒருவினை நிகழுமாயின் அதற்குமுன் நனவின்கண் அவ்வினை நிகழ்ந்திருக்கவேண்டுமென்பது கருத்து. கனவு நிலையுரைத்தலின் ஏழாவது குறளின் விசேடவுரையில் "நனவினில்லது கனவினு மில்லையென்பார், அது கண்டிலம்" என்றிருத்தலுங் காண்க. (கல்லாதான் கண்ட கழிநுட்பங் கற்றார்முற், சொல்லுங்காற் சோர்வு படுதலால் - நல்லாய், வினாமுந்துறாத வுரையில்லை யில்லை, கனாமுந்துறாத வினை என்பது பழமொழி.) "நனவிற்றான் செய்தது மனத்த தாகலிற், கனவிற் கண்டு கதுமென வெரீஇ" என்று கலித்தொகை-(குறிஞ்சிக்கலி 13.) கூறுவதும் இங்குணர்தற்பாலதாம்.

‡ இது - பொழுதுகண்டிரங்கல்.

* மாலைநீயல்லை என்றும் பாடமுண்டு.

¶ கூடியிருந்த நாள் - தலைமகனைத் தலைமகள் கூடியிருந்தநாள்.

+ அந்நாள் - முன்னாள்.

| வாழியென்பது மாலைப்பொழுதே ! நீ வாழமாட்டாய் என்பது தோன்ற நின்ற இகழ்ச்சிக் குறிப்புச்சொல்.

* "வாலிழை மகளி ருயிர்ப்பொதி யவிழ்க்குங் காலை" என்றாற்போலஈண்டுப் பொதுமையாற் கூறப்பட்டது. † வேலை யென்பது ஆகுபெயர். ‡ வேலையென்பதற்கு வேலா யிருந்தா யென்பாரு முளர்.

தெளி:—[தலைமகள் பொழுதொடு பிணங்கிச் சொல்லியது.] (இ-ள்.) பொழுது - பொழுதே, நீ மாலையோவல்லை - நீ (முன்னாள்களில் வந்த) மாலையோ (என்றால்) அல்லை, மணந்தார் - (இருந்தவிதத்தால் அந்நாள்களில் காதலரைக்) கூடிய மகளிரது, உயிருண்ணும் - உயிரை யுண்ணுகிற, வேலை - முடிவுக்காலமா யிருந்தாய், (எ - று).

முன்னாள் - கூடியிருந்த நாள். அந்நாள் மணந்தாரெனவே, பின் பிரிந்தாராதல் பெறப்பட்டது. வாழி யென்பது இகழ்ச்சிக் குறிப்புச்சொல். இங்கு மாலைக்காலத்தின் தன்மை பொதுவகையாற் சொல்லப்பட்டது. வேலை யென்பது காரியவாகு பெயர்.

(க - து.) தலைமகள் மாலைப்பொழுது கணவரைப் பிரிந்தார்க்கு இறுதிக்காலமா யிருக்கின்றதென்றதனை வெறுத்துக் கூறினாளென்பது.

1. Live, o evening hour! Thou art not (the former) evening, but the season that slays the hearts of brides.

உ. ¶ புன்கண்ணை வாழி | மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை.

[ † தன்னுட்கையாற்றை அதன்மேலிட்டுச் சொல்லியது.]

* கலித்தொகை-நெய்தற்கலி. 2. இதன்பொருள். பரிசுத்தமான வாபரணங்களையுடைய மகளிரது உயிரை (அவ்வுயிரைப்)பொதிந்து (மறைத்து) நின்றவுடலினின்றும் போக்கும் (மாலைக்) காலத்தினது என்பது.

† முடிவு என்னும் பொருளதான வேலையென்னுங் காரியப்பெயர் அதற்குக் காரணமான காலத்தினை யுணர்த்துதலால், காரிய வாகுபெயராம். ‡ வேலையென்பதனை முன்னிலை யொருமைக் குறிப்புவினை முற்றாக்கி அதற்கு வேற்படையா யிருந்தாய் என்று பொருள் கூறுவாருமுண்டு.

¶ "புன்கண்கூர் மாலை புலம்புமென் கண்ணேபோற், றுன்ப முளவாய்த் துயிலப் பெறுதியால்" என்பதுமிங்குக் கவனித்தற்பாலதாம்.

| மாலைக்காலம் பகற்காலமென்றாவதுஇராக்காலமென்றாவது குறிப்பிட்டறியக் கூடாமைபற்றி 'மருண்மாலை' என்று கூறப்பட்டது.

† தன்னுட்கையாற்றை - தன்னிடத்துள்ள துன்பத்தை.

பரி:—(இ - ள்.) மயங்கியமாலாய், நீயு மெம்போலப் புன்கணுடையையாயிருந்தாய் ; நின்றுணையும் எந்துணைபோல வன்கண்மையுடையதோ ? கூறுவாயாக, (எ - று).

*மயங்குதல் - பகலுமிரவுந் தம்முள்ளே விரவுதல் ; * கலங்குதலுந் தோன்ற நின்றது. புன்கண் - ஒளியிழத்தல் ; அதுபற்றித் துணையுமுண்டாக்கிக் கூறினாள். எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. எமக்குத் துன்பஞ் செய்தாய், நீயு மின்பமுற்றிலை யென்னுங் குறிப்பால் 'வாழி' என்றாள்.*

தெளி:—[*தலைமகள் தன்னுட்கையாற்றை அம்மாலைப் பொழுதின் மேல் வைத்துச் சொல்லியது.*] (இ - ள்.) *மருண்மாலை-மயங்கியமாலையே,* (*நீயும்*), *புனகண்ணை(எம்மைப்போலப்)-புன்கண்ணுடையையா யிருந்தாய், நின்றுணை* - *உனது துணையும், எங்கள்போல் - எமது துணைபோல, வன் கண்ணதோ - இரக்கமில்லாமையை யுடையதோ,* (*சொல்லுவாயாக*), ()

*மயங்குதல் - பகலும் இரவும் தம்முள்ளே கலத்தல் ; அம்மயங்குத லென்பது கலங்குதலுந் தோன்ற நின்றது. புன்கண் - ஒளியிழத்தல்; அவ்வொளி யிழத்தல் பற்றி மருண்மாலைக்குத் துணையும் உண்டாக்கிச் சொல்லினாள். துணையுமென்ற இறந்தது தழுவிய வெச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. எமக்குத் துன்பஞ் செய்தாய், நீயும் இன்பமுற்றிலையென்னு மிகழ்ச்சிக் குறிப்பால் 'வாழி' என்றாள்.*

(க - து.) *தலைமகள் மாலைப்பொழுதே! உனது துணையும் எமது துணைபோலக் கொடுமையுடையதோ என்றாள் என்பது.*

2.. Long live o dark eventide ! You (too) are sightless (like myself) ; Is your help - mate (also) as hard - hearted as is my spouse?



௩. பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

[*ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.*]

பரி:—(இ - ள்.) காதலர் கூடிய நாளெல்லாம் என்முன் நடுக்க மெய்திப் † பசந்து வந்த மாலை இந்நாள் எனக்கிறந்துபாடு வந்து தோன்றி ‡ அதற்குளதாந் துன்பம் ஒருகாலைக்கொருகால்மிக வாரா நின்றது, (எ - று).

---

* கலங்குதல் - தெளிவின்றியிருத்தல்.

† பசந்து - மங்கி.

‡ *அதற்குளதாந் துன்பம் - அவ்விறத்தலுக் குண்டாகுந் துன்பம்.*

† குளிர்ச்சிதோன்ற மயங்கிவரு மாலையென்னுஞ் செம்பொருள் * இக்குறிப் புணராநின்றது. துனி - உயிர்வாழ்தற்கண் வெறுப்பு. ‡ அதனால் யானாற்றுமாறென்னை யென்பது குறிப்பெச்சம்.

**தெளி:**—[பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது,] (இ - ள்.) (காதலர் கூடிய நாளெல்லாம்) பனியரும்பி - (என் முன்னே) நடுக்கமடைந்து, பைதல்கொண்மாலை - பசத்துவந்த மாலைப் பொழுதானது, துனியரும்பி - (இந்நாள் எனக்கு) இறந்துபடுதல் வந்து தோன்றி, துன்பம்—(அதற்கு உண்டாகும்) துன்பம், வளர - (ஒருகாலைக் கொருகால்) மிக, வரும்-வாராநின்றது, (எ - று).

குளிர்ச்சிதோன்ற மயங்கிவரும் மாலையென்னுஞ் செம்பொருள் இக்குறிப்பு அறியநின்றது. துனி - உயிர்வாழ்தலில் வெறுப்பு. அதனால் யான் பொறுக்கும் விதம் என்னென்பது குறிப்பெச்சம்.

(க - து.) தலைமகள் தோழியோடு காதலருள்ளபோது என் முன்னே நடுங்கிவந்த மாலைப்போது இப்போ தெனக்கு மிகு வருத்தத்தைச்செய்கின்றதென்றாள் என்பது.

3. The evening that came in with trembling and dimness (when my lover was beloved), now brings me an aversion for life and growing sorrow.

---

௪. காதல ரில்வழி மாலை கொலைக்களத்
ஏதிலர் போல வரும்.

[இதுவுமது.]

**பரி:**—(இ - ள்). காதலருள்ள பொழுதெல்லாம் என்னுயிர் தளிர்ப்ப வந்தமாலை, அவரில்லாத இப்பொழுது அஃதொழிந்து நிற்றலேயன்றிக் கொல்லுங் களரியிற் கொலைஞர் வருமாறுபோலஅவ்வுயிரைக் கோடற்கு வாராநின்றது. (எ - று).

ஏதிலர் - அருள்யாதுமில்லார். முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ் செய்துவந்த பொழுதும் இன்று எனக்குப் பகையாய்த் துன்பஞ் செய்ய என்னுயிர்மேல் வாராநின்றது; இனி யானாற்றுமா றென்னை யென்பதாம்.

---

† பனியரும்பி - குளிர்ச்சிதோன்ற, பைதல்கொண்மாலை - மயங்கி வரும் மாலைக்காலம் என்னுஞ் செம்பொருள் (செஞ்சொல் வாயிலாகப் பெறப்படும் பொருள்) (காதலர்கூடியநாளெல்லாம் என் முன்) நடுக்கமெய்திப் பசந்துவந்த மாலை என்னுமிக் குறிப்புப்பொருளுணரா நின்றது.

* ஈண்டுக் குறிப்புணரா நின்றது என்றும் பாடமுண்டு.

‡ அதனால் - உயிர்வாழ்தற்கண் வெறுப்புண்டாக வரும் மாலைக்காலத்தினால்.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) மாலை - (காதலர் உள்ள பொழுதெல்லாம் என்னுயிர் தளிர்க்க வந்த) மாலை, காதலரில்வழி - அக்காதலரில்லாத இப்பொழுது, (என்னுயிர் தளிர்க்க வருதலொழிந்து நிற்றலேயல்லாமல்), கொலைக்களத்து- கொலைசெய்யுமிடத்தில், ஏதிலர்போல - கொலைஞர் (வருமாறு)போல, வரும் - (அவ்வுயிரைக் கொள்ளுதற்கு) வருகின்றது, (எ - று).

ஏதிலர் - அருள் சிறிதுமில்லாதவர். முன்னெல்லாம் எனக்கு நட்பாயின்பஞ் செய்து வந்த பொழுதும் இன்று எனக்குப் பகையாய்த் துன்பஞ் செய்ய என்னுயிர்மீது வருகின்றது; யான் பொறுக்கும்விதம் என்னென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியோடு காதலரில்லாத விப்பொழுது மாலைக்காலம் என்னுயிரைக்கொள்ள வருகின்றதென்றாள்.

4. When my lover is absent, the evening hour comes in like slayers on the field of slaughter.

ரு. காலைக்குச் செய்தநன் றென்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காலையும் மாலையும் அவர் கூடிய ஞான்றுபோலாது இஞ்ஞான்று வேறுபட்டு வாரா நின்றன; அவற்றுள், யான் காலைக்குச்செய்த வுபகாரம் யாது, மாலைக்குச் செய்த அபகாரம் யாது, (எ - று)

* கூடியஞான்று பிரிவரென்றஞ்சப் பண்ணிய காலை † அஃதொழிந்து இஞ்ஞான்று கங்குல் வெள்ளத்திற்குக் கரையாய் வாரா நின்ற தென்னுங் கருத்தால் 'நன்றென்கொல்' என்றும், கூடியஞான்று இன்பஞ் செய்து வந்த மாலை ‡ அஃதொழிந்து இஞ்ஞான்று அளவிறந்துன்பஞ் செய்யாநின்றதென்னுங் கருத்தாற் பகையெவன்கொல் என்றுங் கூறினாள். § பகை- ஆகுபெயர். தன்னோடொத்த காலைபோலாது மாலை தன் கொடுமையாற் றுன்பஞ் செய்யாநின்றதென்பதாம்

தெளி:—(இதுவுமது.)(இ-ள்.)(காலையும் மாலையும் அக்காதலர் கூடிய நாள்போ லாகாமல் இப்போது வேறுபட்டு வருகின்றன;அவற்றுள்) யான்-

* கூடியஞான்று - காதலர் புணர்ந்தகாலத்தில்.

† அஃதொழிந்து - அஞ்சப்பண்ணுவதொழிந்து.

‡ அஃதொழிந்து - இன்பஞ்செய்வதொழிந்து.

§ பகையென்னுங் காரியப்பெயர் அதற்குக் காரணமான அபகாரத்தை யுணர்த்துதலால், காரியவாகுபெயராம்.

நான், காலைக்குச் செய்த—, நன்று - உபகாரம், என் - யாது, மாலைக்குச் செய்த—,பகை - அபகாரம், எவன் - யாது, (எ - று).

சொல்லிரண்டும் அசைநிலைகள். கூடிய நாளில் பிரிவாரென்று அஞ்சப் பண்ணிய காலை அது நீங்கி இந்நாளில் கங்குல் (இருள்) வெள்ளத்திற்குக் கரையாய் வருகின்றதென்னுங் கருத்தால் 'நன்றென்கொல்' என்றும், கூடிய நாளில் இன்பஞ் செய்துவந்த மாலை அது நீங்கி இந்நாளில் அளவில்லாத துன்பஞ் செய்யா நின்றதென்னுங் கருத்தால் பகையெவன்கொல் என்றும் சொல்லினாள். பகை - காரியவாகுபெயர். தன்னோடு ஒத்த காலை போலாகாமல் மாலை தன் கொடுமையால் துன்பஞ்செய்கின்றதென்பதாம்.

(க-து.) தலைமகள் தோழியோடு யான் காலைப்பொழுதிற்குச் செய்த உபகாரம்யாது ; மாலைப்பொழுதிற்குச் செய்த அபகாரம யாது என்றாள் என்பது.

5. What good have I done to the morning hour (to bring me relief) and what evil have I done to the evening hour (to renew my grief)?



சு. மாலைநோய் செய்தல் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன்.

[இன்று இன்னையாகின்ற நீ அன்று அவர்பிரிவிற்குடம்பட்ட தென்னையென்றாட்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ் செய்து போந்த மாலை இன்று பகையாய்த் துன்பஞ் செய்தலைக் காதலர் பிரிதற்கு முன்னே அறியப் பெற்றிலேன், (எ - று).

இங்ஙனம் * வேறுபடுத லறிந்திலேன்; அறிந்தேனாயின் அவர் பிரிவிற்குடம்படே னென்பதாம்.

தெளி:—(இன்று இத்தன்மையளாகின்ற நீ அன்று அவர் பிரிவிற்கு உடம்பட்டதெப்படியென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.) (இ-ள்.) மாலை - (முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ் செய்துவந்த) மாலை, நோய்செய்தல் - (இன்று பகையாய்த்) துன்பஞ் செய்தலை, மணந்தார் - காதலர், அகலாத காலை - பிரிதற்கு முன்னே, அறிந்ததிலேன் - அறியப் பெற்றிலேன், (எ - று).

இவ்வாறு (மாலை) வேறுபடுதல் அறிந்திலேன் ; அறிந்தேனாயின் அவர் பிரிவிற்கு உடன்படே னென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியோடு மாலைப்பொழுது இப்போது பகையாய்த் துன்பஞ் செய்தலைக் காதலர் பிரிதற்கு முன்பு அறிந்திலே னென்றாள் என்பது

---

* வேறுபடுதல்-முன்னெல்லாம் எனக்கு நட்பா யின்பஞ் செய்துவந்த மாலைக்காலம் இப்போது வேறுபட்டுப் பகையாய்த் துன்பஞ் செய்தல்.

6. I never knew the pangs that the evening hour brings till my husband's departure.



எ காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

(மாலைப்பொழுதின்கண் இன்னையாதற்குக் காரணை மென்னை யென்றாட்குச் சொல்லியது.)

**பரி:—**(இ - ள்.) இக்காம நோயாகிய பூ காலைப்பொழுதின்கண் அரும்பிப் பகற்பொழுதெல்லாம் பேரரும்பாய் முதிர்ந்து மாலைப்பொழுதின்கண் மலரா நிற்கும், (எ - று).

துயிலெழுந்த பொழுதாகலிற் கனவின்கட் கூட்ட நினைந்தாற்றுதல் பற்றிக் ' காலையரும்பி ' என்றும், பின் பொழுது செலச்செல அது மறந்து பிரிவுள்ளி யாற்றாளாதல் பற்றிப் 'பகலெல்லாம் போதாகி' என்றும், தத்தந் துணையை யுள்ளிவந்து சேரும் விலங்குகளையும் மக்களையுங் கண்டு தான் அக்காலத்தி னுகர்ந்த வின்பநினைந்தாற்றாமை மிகுதல்பற்றி ' மாலை மலரும் ' என்றுங் கூறினாள். பூப்போல இந்நோய் காலவயந்த தாகா நின்றதென்பது உருவகத்தாற் பெறப்பட்டது. * ஏகதேச வுருவகம்.

**தெளி:—**(மாலைப்பொழுதில் இத்தன்மையளாதற்குக் காரணம் யாதென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.) (இ - ள்.) இந்நோய் - இக்காமநோயாகிய பூ, காலையரும்பி - காலைப்பொழுதில் அரும்பி, பகலெல்லாம் போதாகி - பகற்பொழுதெல்லாம் பேரரும்பாய் முதிர்ந்து, மாலைமலரும் - மாலைப்பொழுதில் மலரா நிற்கும், (எ - று).

துயிலினின்றெழுந்த பொழுதாகலால் கனவில் தலைமகனோடு புணர்ந்தமையை நினைந்து பொறுத்தல் பற்றிக் ' காலையரும்பி ' என்றும், பின்பு பொழுது செல்லச் செல்ல அப்புணர்ந்தமையை மறந்து பிரிவை நினைத்துப் பொறுளாதல்பற்றிப் 'பகலெல்லாம் போதாகி'என்றும், தமது தமது துணைகளை நினைத்துவந்து சேரும் விலங்குகளையும் மக்களையும் கண்டு தான் அக்காலத்தில் அனுபவித்த இன்பத்தை நினைந்து பொறாமை மிகுதல்பற்றி 'மாலை மலரும்' என்றும் சொல்லினாள். பூவைப்போன்று இக்காமநோய் அரும்புதல் முதலிய தொழிலால் காலத்தின் வசத்த தாகா நின்றதென்பது உருவகத்தாற் பெறப்பட்டது. இஃது ஏகதேச வுருவகவணி.

* ஆற்றுதல் முதலிய செயல்களை அரும்புதல் முதலிய செயலாக வுருவகஞ்செய்தவர், அதற்கியையக் காமநோயைப் பூவாக வுருவகஞ் செய்யாமையின், இஃது ஏகதேச வுருவகமாயிற்று.

(க - து.) தலைமகள் தோழியோடு காமநோய் காலைப்பொழுதில் தோன்றிப் பகற்பொழுதில் வளர்ந்து மாலைப்பொழுதில் அதிகரிக்கின்றதென்று ஏன்பது.

7. This love - sickness buds forth in the morning, and grows all day long and blossoms in the evening.

அ. அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) முன்னெல்லாம் இனியதாய்ப்போந்த ஆயன்குழல் இதுபொழுது அழல்போலச் சுடுவதாய மாலைக்குத் தூதுமாய் அது வந்தென்னைக் கொல்வுழிக் கொல்லும் படையுமாயிற்று, (எ - று).

பின்னின்ற போலுமென்பது * உரையசை. முன்னரே † வரவுணர்த்தலிற் றூதாயிற்று ; ‡ கோறற்கருவி யாகலிற் படையாயிற்று. தானே சுடவல்லமாலை ¶ இத்துணையும் பெற்றால் என்செய்யா தென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) ஆயன்குழல் - (முன்னெல்லாம் இன்பஞ்செய்வதாய் வந்த) இடையனது வேணுநாதம், அழல்போலும்- (இப்போது) நெருப்புப்போலச் சுடுவதாகிய, மாலைக்குத்தூதாகி - மாலைக்குத்தூதுமாய், (அம்மாலைவந்து என்னைக் கொல்லுமிடத்து), கொல்லும் படை - கொலைசெய்யும் படையுமாயிற்று, (எ - று).

பின்னுள்ள போலுமென்பது உரையசை. (ஆயன்குழல்) முன்னரே (மாலையின்) வரவை அறிவித்தலால் தூதாயிற்று; (அம்மாலை) கொல்லுதற்குக் கருவியாகலின் படையாயிற்று. தானே சுடவல்லமாலைப்பொழுது இந்தத் துணையையும் பெற்றால் யாது செய்யாதென்பதாம். வேணுநாதம் - வேய்ங்குழலோசை. வேய் - மூங்கில். படை - ஆயுதம்.

(க-து.) தலைமகள் ஆயன் குழலோசை மாலைக் காலத்திற்குத் துணையாகி வந்து என்னை வருத்துகின்றதென்றாளென்பது.

8. The shepherd's flute sounds like the forerunner of of the hour of the evening's fiery anguish, and is become a murderous weapon.

* சிறிதுபொருளுணர்த்து மிடைச்சொல் உரையசையாம்.

† வரவுணர்த்தலிற் றூதாயிற்று— (ஆயன்குழல்) மாலைக்காலத்தின் வரவை யறிவித்தலால், அம்மாலைக்காலத்திற்குத் தூதாயிற்று.

‡ கோறற்கருவியாகலின்— (ஆயன்குழல்) அம்மாலைக்காலம் வந்து கொல்லும்போது அக்கொல்லுதற்குச் சாதனமாயிருத்தலால்.

¶ இத்துணையும்—ஆயன்குழலாகிய இத்துணையை (உதவியை)யும்.

௯. பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.

(இதுவுமது.)

பரி:—(இ - ள்.) இதற்கு முன்னெல்லாம் யானே மயங்கி நோயு ழந்தேன்; இனிக் கண்டாரும் மதிமருளும் வகை மாலை வரும்பொழுது இப்பதியெல்லாம் மயங்கி நோயுழக்கும், (எ - று).

* மதிமருளவென்பது மதிமருண்டெனத் திரிந்துநின்றது. கூற்ற மாகக் கருதிக் கூறினாளாகலின் 'மாலைபடர்தரும் போழ்து' என்றாள். † யான் இறந்துபடுவ லென்பதாம். ‡ மாலை மயங்கிவரும் போழ்தென் பதி மதிநிலைகலங்கி நோயுழக்குமென் றுரைப்பாருமுளர்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) (இதற்கு முன்னெல்லாம் யானே மயங்கி நோயால் வருந்தினேன்) மதிமருண்டு - (இனிக்கண்டாரும்) மதி மயங்கும் வகை, மாலை-மாலைக்காலம், படர்தரும் போழ்து-வரும்பொழுது, பதி - இவ்வூரெல்லாம், மருண்டு - மயங்கி, பைதலுழக்கும் - நோயை யனு பவிக்கும், (எ - று).

மதிமருள என்னும் செயவெனெச்சம் மதிமருண்டு எனச்செய்தெ னெச்சமாகத் திரிந்து நின்றது. (மாலைப்பொழுதை) யமனாகவெண்ணிக் கூறினாளாகலால் 'மாலை படர்தரும் போழ்து' என்றாள். யான் இறந்து படுவன் என்பதாம்.

(க - து.) தலைமகள் மாலைக்காலம் வரும்போது இவ்வூரா ரெல்லாம் மயங்கி வருத்தத்தை யடைவாராயின், யான் யாது செய்வேனென்று என்பது.

9 When the evening shades come on confusing every one's mind, the whole town will become confused and be afflicted with grief.

௰. பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர்.

---

* மருண்டு என்னும் செய்தெனெச்சம் படர்தரும் என்னும் வேறு வினைமுதலின் வினையைக்கொண்டு முடிதற்கு விதியில்லாமையால், 'மதி மருளவென்பது மதிமருண்டெனத் திரிந்துநின்றது' என்று கூறப்பட் டது. இங்கு வேறு வினைமுத லென்றது மாலையை.

† யான் இறந்துபடுவல்-(மதிமருளும்வகை மாலைக்காலம் வருவதால்) நான் செத்துப்போவேன்.

‡ மாலை மருண்டு படர்தரும் போழ்து பதி மதிமருண்டு பைத லுழக் கும் என்றன்வயஞ்செய்து, அதற்கு மாலை (மாலைப்பொழுது) மயங்கிவரும் பொழுது (என்) பதி (ஊரிலுள்ள யாவரும்) மதி (அறிவு) நிலைகலங்கி நோயை யனுபவிக்கும் என்றுபொருள் கூறுவாருமுண்டு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காதலர் பிரிவைப் பொறுத்துஇறந்துபடாதிருந்த என்னுயிர் இன்று பொருளியல்பே தமக்கியல்பாக வுடையவரை நினைந்து, இம்மயங்குமாலைக்கண்ணே இறந்துபடாநின்றது, (எ-று).

*குறித்தபருவங்கழியவும் பொருண்முடிவுநோக்கிவாராமையிற் சொல் வேறுபடாமையாகிய தம்மியல்பொழிந்தவர் அப்பொருளியல்பே தம்மியல் பாயினர்; காலமிதுவாயிற்று; இனி நீ சொல்கின்றவாற்றாற் பயனில்லை யென்பதாம்.

தெளி:—(இதுவுமது.) (இ - ள்.) மாயா என் உயிர் - (காதலரது பிரிவைப் பொறுத்து) இறவாதிருந்த என்னுயிரானது, பொருண்மாலை யாளரை - (இப்பொழுது) பொருளியல்பே தமக்கியல்பாகவுடையவரை, உள்ளி - நினைந்து, மருண்மாலை-இம்மயங்கும் மாலைப்பொழுதிலே, மாயும்-மாய்கின்றது, (எ - று).

வருதற்குக் குறித்த பருவம் கழியவும் பொருள் முடிவு நோக்கி வாரா மையால் சொல்வேறுபடாமையாகிய தம்மியல்பொழிந்தவர் அப்பொரு ளியல்பே தம்மியல்பாயினர்; காலம் இதுவாயிற்று; இனி (தோழியே) நீ சொல்லுகின்றவிதத்தால் பயன் இல்லையென்பதாம்.

(க - து.) தலைமகள் மாலைக்காலத்தில் பொருள் கருதிப் பிரிந்த காதலரை நினைந்து மிகவும் வருந்துகின்றேனென்றாள்.

10. My hitherto unextinguished life now perishes in this darkening eve remembering him who has the nature of wealth.



9-வது அதிகாரம்.

உறுப்புநலனழிதல்:—Wasting away of the limbs.

பரி:—அஃதாவது தலைமகடன் கண்ணும், தோளும், நுதலுமுதலாய அவயவங்கள் தம்மழகழிதல். ‡ இஃது இரக்கமிக்குழிநிகழ்வதாகலின், பொழுதுகண்டிரங்கலின்பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது தலைமகளது கண்ணும், தோளும், நெற்றியும் முதலாகிய அவயவங்கள் தம்மழகழிதல், இஃது இரக்கமிகுந்தவிடத்துநிகழ் வதாகலால், பொழுதுகண்டிரங்கலின்பின் வைக்கப்பட்டது.

க. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண்.

* குறித்தபருவம் - (காதலர்) வருவேனென்று குறிப்பிட்டுக் கூறிய காலம். ‡ இஃது-உறுப்பு நலனழிதல்.

[ஆற்றாமைமிகுதியான் வேறுபட்ட தலைமகட்குத்
தோழி சொல்லியது.]

பரி:—(இ-ள்.) இவ்வாற்றமை நங்கண்ணே நிற்பத் தாம் சேணி டைச் சென்ற காதலரை நீ நினைந்தழுதலால் நின்கண்கள் ஒளியிழந்து முன்றமக்கு நாணிய * நறுமலர்கட்கு இன்று தாம் நாணிவிட்டன, ().

நமக்கென்பது வேற்றுமை மயக்கம். † உள்ளவென்பது உள்ளி யெனத்திரிந்து நின்றது. உள்ளுதலென்பது காரணப்பெயர் காரியத்திற் காய வாகுபெயர் ‡ இவை கண்டார் அவரைக் ¶ கொடுமை கூறுவர்; நீயாற்றல் வேண்டுமென்பது கருத்து.

தெளி:—[பொருமையின் மிகுதியால் வேறுபட்ட தலைமகளுக்குத் தோழிசொல்லியது.] (இ-ள்.) சிறுமை - இப்பொறுமை, நமக்கொழிய - நம்மிடத்தே நிற்க, சேட்சென்றார் - (தாம்) தூரதேயத்திற் சென்ற காத லரை, உள்ளி - (நீ) நினைந்தழுதலால், கண்-(உன்) கண்கள்,(ஒளியிழந்து), நறுமலர் - (முன்னே தமக்கு நாணிய) நறுமலர்களுக்கு, நாணின-(இன்று தாம்) நாணிவிட்டன, (எ - று).

நமக்கு என்பதன் நான்கனுருபு தனக்குரிய பொருளைவிட்டு நம் மிடத்து என ஏழனுருபின் இடப்பொருளில் வந்தது; இவ்வாறு வருவது வேற்றுமை மயக்கமெனப்படும். உள்ள என்னும் செயவெனெச்சம் உள்ளி யெனத் திரிந்து நின்றது. உள்ளுதல் என்னும் காரணப்பெயர் அதன் காரியமாகிய அழுதலையுணர்த்துதலால், காரணவாகுபெயராம். இவற்றைக் கண்டார் அவரைக் கொடியவரென்று சொல்லுவர்; நீ பொறுத்தல்வேண்டு மென்பது கருத்து.

(க - து.) தோழி தலைவியே! நீ காதலரை நினைந்தழுதலால் உன் கண்கள் ஒளியிழந்து வாட்டமடைந்துவிட்டன என்றாள்.

1. While we endure misery, your eyes weep for him who wanders afar, and are ashamed to see the fragrant flowers.

---

* நறுமலர்கள் - வாசனையுள்ள பூக்கள்; அவை குவளை, தாமரை முத லியனவாம்.

† உள்ளவென்பது காரணப்பொருளில் வந்த (இறந்தகால) செயவெ னெச்சம். செய்தென்னும் வாய்பாட்டுவினையெச்சம் காரணப்பொருளில் வாராமையின், 'உள்ளவென்பது உள்ளியெனத் திரிந்து நின்றது' என்று கூறப்பட்டது.

உள்ள, கண் நறுமலர்க்கு நாணின என்று கொள்க. உள்ளுதல் காரணம்; நாணுதல் - காரியம்.

‡ இவை - ஒளியிழந்துள்ள உன் கண்களை.

¶ கொடுமை கூறுவர் - அன்பில்லாதவரென்று சொல்லுவர்.

உ. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண்

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) பசப்பெய்தன்மே * னீர்வாரிகின்ற நின் கண்கள் நம்மானயக்கப்பட்டவாது நல்காமையைப் பிறர்க்குச் சொல்லுவபோலா நின்றன; இனி நீயாற்றல் வேண்டும், (எ-று).

*சொல்லுவபோறல் † அதனை ‡ யவருணர்தற் ¶ கனுமானமாதல். § நயந்தவர்க்கென்று பாடமோதுவாருமுளர்*

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) *பசந்து - பசப்படைதல்மேல், பனிவாருங்கண் - நீர்வாரகின்ற (உனது) கண்கள், நயந்தவர் - (நம்மால்) விரும்பப்பட்டவரது, நல்காமை - நல்காமையை, சொல்லுவபோலும் - (பிறர்க்குச்) சொல்லுவபோலாகின்றன, (இனி நீ பொறுத்தல்வேண்டும்).*

*(கண்கள்) சொல்லுவபோறல் - அதனை அவர் அறிதற்கு அனுமான மாதல். நல்காமை-அருள்செய்யாமை. போறல் - போலுதல்.*

*(க - து.) தோழி தலைவியே! அழாநின்ற உன்கண்கள் தலைவரது அருளின்மையைப் பிறர்க்குச் சொல்வனபோலாகின்றன வென்றாளென்பது.*

2. The discolored eyes that shed tears, seem to indicate the lack of love of our beloved.



ந. தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள்.

---

** நீர்வார்கின்ற - அழுகின்ற.*

*† அதனை - நல்காமையை (அருள்செய்யாமையை).*

*‡ அவர் - பிறர்.*

*¶ ஈண்டனுமானமாமாறு:—தலைமகன் தலைமகளுக்கு அருள்செய்ய வில்லை என்பது பிரதிஞ்ஞை; தலைமகளது கண்களினின்றும் நீ ரொழுகுதலால் என்பது ஏது; கணவரது அருள்பெறாதவருந்தும் மகளிர் போல என்பது உதாரணம்.*

*[தலைமகள் தலைமகனது அருள்பெறாமையைப் பிறருணர்தற்கு அவளது நீர்வார்கின்ற கண்கள் சாதனமாயிருக்கின்றன வென்பது திரண்டபொருளாம்.]*

*§ நயந்தவர் என்பதற்குப்பிரதியாக நயந்தவர்க்கு(விரும்பப்பட்டவர்க்கு) என்று பாடங்கூறுவாருமுண்டு.*

[இதுவுமது.]

பரி:—(இ-ள்.) காதலர் மணந்த ஞான்று இன்பமிகுதியாற் பூரித்த நின் றோள்கள் இன்று அவர் பிரிந்தமையை விளங்க உணர்த்துவபோல மெலியாநின்றன, இது தகாது, (எ - று).

அன்று மவ்வாறு பூரித்து † இன்று மிவ்வாறு மெலிந்தால் ‡ இரண்டுங் கண்டவர் கடிதினறிந்து அவரைத் ¶ தகவின்மை கூறுவரென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) மணந்தநாள் - (காதலர்) கூடிய நாளில், (இன்பமிகுதியால்), வீங்கிய - பூரித்த, தோள் - (உனது) தோள்கள், தணந்தமை-(இன்று அவர்) பிரிந்தமையை, சாலவறிவிப்பபோலும் - விளங்க அறிவிப்பனபோன்று இளைக்கின்றன, (இது தகாது), (எ - று).

அன்றும் அவ்வாறு பூரித்து இன்றும் இவவாறு இளைத்தால் இரண்டுங் கண்டவர் விரைவில் அறிந்து அவரைத் தகவில்லாமை சொல்லுவ ரென்பதாம்.

(க - து.) தோழி தலைவியை! காதலரைக் கூடியநாளில் பூரித்த உன் தோள்கள் அவர் பிரிந்தமையைப் பிறர்க்கு விளங்க அறிவித்தல்போல இளைக்கின்றன வென்றுரைத்ததென்பது.

3. These withered shoulders that swelled (with joy) on the nuptial day, now seem to announce our separation clearly to the public.

ச. பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

*[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) அன்றுந் தந்துணைவர் நீங்குதலான் அவரால் பெற்ற செயற்கை யழகே யன்றிப் பழைய வியற்கை யழகுமிழந்த இத் தோள்கள் இன் $ றதற்குமேலே தம்பெருமை யிழந்து வளை கழலாநின்றன; || இவை யிங்ஙனந் சொற்பாலவல்ல, (எ - று).

* அன்றும் - கூடிய நாளிலும். † இன்றும் - பிரிந்தநாளிலும்.

‡ இரண்டும் - பூரித்தலும் மெலிதலுமாகிய விரண்டையும்.

¶ தகவின்மை கூறுவரென்பதாம் - குறித்தபருவத்து வாராமை, அன்பில்லாமை, சொற்றவறினமை முதலியவற்றைக் கூறிப் பழிப்பரென்பதாம். தகவு - குறித்த பருவத்து வருதல் முதலியனவாம்.

$ அதற்குமேலே - செயற்கை யழகே யன்றிப் பழைய வியற்கை யழகையு மிழந்ததற்குமேலே.

|| இவை - தோள்கள்.

பெருமையிழத்தல் - மெலிதல். பைந்தொடி - பசியபொன்னாற்செய்த தொடி. சோருமென்னும் வினைத்தொழில் தோண்மே நின்றது. அன்றும் பிரிந்தாரென்று அவரன்பின்மை யுணர்த்தி இன்றுங் குறித்த பருவத்து வந்திலரென்று அவர் பொய்ம்மை யுணர்த்தா நின்றன; இனி * அவற்றைக் கூறுகின்றார்மேற் குறையுண்டோ வென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) துணைநீங்கி - (அன்றும் தமது) துணைவர் நீங்குதலால், (அவரால் பெற்ற செயற்கை யழகே யல்லாமல்), தொல்கவின் - பழைய இயற்கை யழகும், வாடியதோள் - இழந்த இத்தோள்கள், (இன்று அதற்குமேலே), பணை நீங்கி - (தமது) பெருமை யிழந்து, பைந்தொடி - வளையல்கள், சோரும் - கழலுகின்றன, (இவை இவ்வாறு செய்யுந் தன்மையனவல்ல), (எ - று).

பெருமையிழத்தல் - (தோள்கள்) இளைத்தல். பைந்தொடி - பசிய பொன்னாற்செய்த வளையல். வளையலது தொழிலான சோருதலைத் தோள் மேலேற்றித் தோள்சோரும் என்று கூறினமையின், இது இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேலாய வுபசார வழக்காம். தோள்கள் அன்றும் பிரிந்தாரென்று அவரன்பில்லாமையை யுணர்த்தி இன்றுங் குறித்த பருவத்தில் வந்திலரென்று அவர் பொய்ம்மையை யுணர்த்துகின்றன; இனி அவற்றைச் சொல்லுகிறவர்மீது குறையுண்டோ வென்பதாம்.

(ந - து.) தோழி தலைவியை! காதலர் பிரிவால் செயற்கை யழகேயன்றி யியற்கையழகு மிழந்த உன் தோள்கள் வளையல்கள் கழலுமாறு மிகவும் மெலிந்தனவென்று சொன்னது.

4. Owing to the separation of the lover, the shoulders have lost their wonted charms, and the gold armlets have become loose.



௫ கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்.) † கவவுக்கை நெகிழினும் ‡ ஆற்றதாட்த இக்கால நீட்டத்து என்றுமென்று நினையாத கொடியாரது கொடுமையைத் தாமே சொல்லாநின்றன, வளைகளுங் கழன்று பழையவியற்கை யழகு மிழந்த இத்தோள்கள், இனி ¶ யதனை யாமறைக்குமாறென்னை?

* அவற்றை - காதலரது அன்பில்லாமையையும் பொய்ம்மையையும்.

† கலித்தொகை (பாலைக்கலி - 32.) "கவவுக் கைநெகிழாது (அகத்திடுதலை யுடைய கையை நெகிழாதே)" என்று கூறுவ திங்குணர்தற்பாலதாம். ‡ ஆற்றுதாள் என்றும் பாடமுண்டு.

¶ அதனை - கொடியாரது கொடுமையை.

* உரைக்குமென்பது † அப்பொருண்மை தோன்ற நின்ற குறிப்புச் சொல். ‡ ஒடு வேறுவினைக்கண் வந்தது. அவரொடு கலந்த தோள்களே சொல்லுவனவானால், அயலார் சொல்லுதல் சொலல்வேண்டுமோ வென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) கொடியார் - (கழுவுங்கை விலகினும் பொருதவனுக்கு இக்கால நீட்டிப்பில் என்றுமென்று நினையாத) கொடியவரது, கொடுமை - கொடுமையை, உரைக்கும் - (தாமே) சொல்லுகின்றன, தொடியொடு - வளைகளுக்கு முன்று, தொல்கவின் வாடியதோள்- பழைய (இயற்கை) யழகுமழிந்த தோள்கள், (இனி அதனை யாம் மறைக்கும் விதம் யாது,) (எ - று.)

உரைக்கும் என்பது அப்பொருள் தோன்ற நின்ற குறிப்புச்சொல். 'தொடியொடு' என்ற ஒடுவுருபு வேறு வினையில் வந்தது. அவரொடு கலந்த தோள்களே (அவரது கொடுமையை) சொல்லுவனவானால், அயலார் சொல்லுதல் சொலல்வேண்டுமோ வென்பதாம்.

(க - து.) 'தொழி தலைவியே' வளையல்களுடன் தமதழகையுமிழந்த உன் தோள்கள் தலைவரது அன்பில்லாமையைப் பிறர்க்குத் தெரிவிக்கின்றன வென்றுமென்பது.

5. These wasted shoulders with the loosened bracelets now declare the cruelty of the pitiless one.

---

* குறிப்புச்சொல்லாகிய உரைக்குமென்பது செய்யுமென்னுமுற்று ஆண் பெண் ஒன்று பல என்னும் பாற்பாலுக்கும் பொதுவாயினும், ஈண்டுப் பொதுமையினின்றும் நீங்கிச் சொல்லாநின்றன என்று பலவின்பாற்கண் வந்தது. தோள் உரைக்கும் என்று கூறினமையின், உரைக்கும் என்பது இலக்கணச்சொல். இலக்கணச் சொல் குறிப்புச் சொல்லின் பாற்படுவதாம்.

† அப்பொருண்மை - விளங்க வுணர்த்துவபோல மெலியா நின்றன என்னுமப்பொருள். இவ்வதிகாரத்தின் மூன்றாவது குறளிலுள்ள 'சால வறிவிப்பபோலும்' என்பதற்கு 'விளங்க வுணர்த்துவபோல மெலியாநின்றன' என்று பொருள் வரைந்திருப்பதுணர்க.

பாத்துமென்னும் பொருண்மை என்றும் பாடமுண்டு.

‡ 'தொடியொடு தொல்கவின் வாடியதோள்' என்றவிடத்து வாடிய என்னும் வினைகொண்டு முடியும்பொருள் கவின்; அக்கவினது தொழில் வாடல்; அவ்வாடுதற்றொழிலுண்டாதற்கு உண்டாகும் வேறுதொழில் சோர்தல்; அச்சோர்தலையுடையது தொடியாதலால், தொடி வேறுவினையுடனிகழ்ச்சிப் பொருளில் வந்ததாமென்க.

சு. தொடியொடு தோணெகிழ * நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற ணொந்து.

*[தானாற்றுதற்பொருட் டியற்பழித்த தோழிக்குத்
தலைமகள் சொல்லியது.]*

பரி:—(இ - ள்.) யானாற்றவும் என்வயத்த வன்றித் தொடிகள் கழலுமாறு தோள்கண் மெலிய, † அவற்றைக்கண்டு, நீ யவரைக் கொடியரெனக் கூறுதலைப் பொறாது யானென்னுள்ளே நோவா நின்றேன், (எ-று).

*ஒடு மேல்வந்த பொருண்மைத்து. யானாற்றே ணுகின்றது அவர் வாரா ததற் கன்று; நீ கூறுகின்றதற் கென்பதாம்.*

தெளி:—*(தான் பொறுத்தற்பொருட்டுத் தலைமகனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் சொல்லியது.)* (இ - ள்.) *(யான் பொறுக்கவும் என் வயத்தனவாகாது) தொடியொடு - வளையல்கள் கழலும்படி, தோணெகிழ - தோள்கள் மெலிய, (அவற்றைக் கண்டு), அவரைக் கொடியரெனக் கூறல்- (நீ) அக்காதலரைக் கொடியவரென்று சொல்லுதலை, நொந்து-பொறாமல், நோவல் - (யான் என்னுள்ளே) நோகின்றேன், (எ - று).*

*தொடியொடென்ற ஒடுவுருபு மேலுள்ள குறளிற்போல வேறு வினை யில் வந்தது. யான் பொறாதவளாகின்றது அவர் வாராதிருத்தற்கன்று; (தோழியே!) நீ சொல்லுகின்றதற் கென்பதாம்.*

(க - து.) *தலைமகள் தோழியே! நீ காதலரைக் கொடியரெனப் பழித்துக் கூறுதல்பற்றி நான் வளையல்கள் கழலும்படி தோள்களிளைக்க வருந்துதல் மேலும் மிகவும் வருந்துகின்றே னென்றாளென்பது.*

6. I grieve to hear you call him a cruel man, because the armlet has loosened from my wasted arm.



எ. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து.

*[அவ்வியற் பழிப்புப் பொறாது தன் னெஞ்சிற்குச்
சொல்லியது.]*

பரி:—(இ - ள்.) நெஞ்சே! இவர் கொடியா ரென்கின்றவர்க்கு நீ சென்று என் மெலிகின்ற தோளினால் விளைகின்ற ஆரவாரத்தைச்

---

*நோவல் - அல்லீற்றுத் தன்மை யொருமை வினைமுற்று.

† அவற்றை - தொடிகள் கழலுமாறு தோள்கள் மெலிவனவற்றை.

சொல்லி ஒரு மேம்பாடெய்த வல்லேயோ? வல்லேயாயின், அதனை யொப்பதில்லே, (எ - று).

* 'கொடியார்க்கு' என்பது கொடியரல்ல ரென்பது தோன்ற நின்ற குறிப்புச்சொல், 'வாடுதோள்' என்பதும் † அவைதாமே வாடா நின்றன வென்பது தோன்ற நின்றது ()பூசல்-ஆகுபெயர்; + அஃது அவள்தோளுே க்கி யியற்பழித்தன்மேலும் அதனுற் றனக்காற்ருமை மிகன் மேலும் நின் றது. ‡ நின்னுரை கேட்டலும் அவர் வருவர்; வந்தால் ¶ இவையெல்லாம் நீங்கும்; நீங்க, $ அஃதெனக்குக் § காலத்தினுற்செய்த நன்றியாமாகலின், || அதன் பயனெல்லா மெய்துதி யென்னுங்கருத்தாற் 'பாடுபெறுதியோ' என்ருள்.

தெளி:—(அவ்வியற்பழித்தல் பொருது தலைமகள் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.) (இ - ள்.) நெஞ்சே-,கொடியார்க்கு - (இத்தோழி)கொடி யவரென்று சொல்லுகின்றவர்க்கு, (நீசென்று),என் வாடுதோள் - எனது மெலிகின்ற தோளினுல், (விளைகின்ற), பூசல்-ஆரவாரத்தை, உரைத்து- சொல்லி, பாடு - ஒரு மேம்பாட்டை, பெறுதியோ - அடையவல்லேயோ? (வல்லேயாயின், அதனை யொப்பது இல்லை), (எ - று).

'கொடியார்க்கு' என்பது கொடியவரல்லரென்பது தோன்றநின்ற குறிப்புச்சொல். வாடுதோளென்பதும் அவைதாமே வாடா நின்றன வென் பது தோன்ற நின்றது பூசல்—கருவியாகுபெயர் ; அஃது அத்தோழி தோளைப்பார்த்துத் தலைமகனை யியற்பழித்தல் மேலும் அவ்வியற்பழித்த லால் தனக்குப் பொறுக்காமை மிகுதல் மேலும் நின்றது.உன் சொல்லைக் கேட்டவுடன் அவர் வருவார் ; வந்தால் இவையெல்லாம் நீங்கும் ; நீங்கவே,

---

*.கொடியாரென்னு முடன்பாட்டுச்சொல் கொடியாரல்லரென்னும் எதிர்மறைப்பொருளை யுணர்த்தினமையின், குறிப்புச்சொல்லாயிற்று. இது விதிச்சொல் மறைப்பொருளாகி வந்ததாம்.

† அவை - தோள்கள்.

() பூசலென்னுங் கருவிப்பெயர் அதனுலாகிய ஆரவாரத்தையுணர்த்து தலால், கருவியாகுபெயராம். பூசல் - சண்டை. + அஃது - ஆரவாரம்.

‡ நின்னுரை - நெஞ்சே ! உன் வார்த்தையை.

¶ இவையெல்லாம்-தோழி தலைமகனது ஒழுக்கத்தைப் பழித்தலும், கண்கள் நாணுதலும், அழுதலும், தோள்கள் மெலிதலுமாகிய இவை யெல்லாம்.

$ அஃது - நின்னுரை.

§ திருக்குறள் செய்ந்நன்றி யறிதல்,உ. இதன் பொருள். ஒருவனுக்கு முடிவு வந்தவிடத்து ஒருவன் செய்த வுபகாரம் என்பது.

|| அதன் பயனெல்லாம் - அந்நன்றியின் (அவ்வுபகாரத்தின்) பிர யோஜன மெல்லாம்.

அஃது எனக்குக் காலத்தினுற் செய்த நன்றியா மாகலின், அதன் பயனெல்லாம் அடைவாயென்னுங் கருத்தால் 'பாடு பெறுதியோ' என்றாள்.

(க - து.) தலைமகள் தன்னெஞ்சை நோக்கி, நெஞ்சே! நீ எனது தோள்களின் மெலிவாலுண்டாகுந் துன்பத்தைக் காதலர்க்குரைத்து எனக்கு நன்மையுண்டாக்க வேண்டுமென்றதனை வேண்டிக்கொண்டனள் என்பது.

7. Can you O my heart! gain glory by complaining to the alleged cruel one the clamour of my wasting shoulders.



அ. முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.

[ ‡ வினைமுடித்து மீடலுற்ற தலைமகன் முன்னிகழ்ந்தது நினைந்து தன்னுள்ளே சொல்லியது.]

பரி: —(இ - ள்.) தன்னையிறுக முயங்கிய கைகளை இவட்குநோமென்று கருதி ஒருநாள் நெகிழ்த்தேனாக ; அத்துணையும் பொறாது † பைந்தொடிகளை யணிந்த பேதையது நுதல் பசந்ததுஃ அப்பெற்றித்தாய நுதல் இப்பிரிவிற்கியாது செய்யுமோ, (எ - று).

இனிக் கடிதிற் செல்லவேண்டுமென்பது கருத்து.

தெளி:—[மேற்கொண்ட வினையை முடித்துத் திரும்பி வருதலுற்ற தலைமகன் முன்னிகழ்ந்தது நினைந்து தன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) முயங்கிய கைகளை - (தன்னையிறுகத்) தழுவிய கைகளை, (இவளுக்கு நோமென்று நினைத்து), ஊக்க - (ஒருநாள் யான்) தளர்த்தினேனாக, (அவ்வளவும் பொறாமல்), பைந்தொடிப்பேதை - பைந்தொடிகளையணிந்த பேதையினது, நுதல் - நெற்றியானது, பசந்தது - நிற வேறுபாடடைந்தது, (அத்தன்மையதாய நெற்றி இப்பிரிவிற்கு யாது செய்யுமோ)? (எ - று).

இனி விரைவிற் செல்லவேண்டுமென்பது கருத்து.

(க - து.) வினைமுடித்துத் திரும்பிவரும் தலைமகன் தனதுறிது பிரிவினாலுண்டாகிய தலைமகளது நுதற்பசப்பைக் கருதி விரைந்து செல்ல வெண்ணினனென்பது.

---

‡ வினைமுடித்துமீடலுற்ற தலைமகன்-ஒருவேந்தனுக்குதவி செய்யப்பிரிந்து வினை (சண்டையை) முடித்துத் திரும்பிய தலைமகன்.

† பைந்தொடிகளை - பசும்பொன்னாற்செய்த வளையல்களை.

8. When I once loosened the pressure of my embracing arms, the forehead of the woman with gold armlet grew wan. (What would such a forehead do to this separation?)

கூ. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) அங்ஙனங் கைகளை யுக்குதலான் அம்முயக்கிடை யே சிறு காற்று நுழைந்ததாக அத்துணை யிடையீடும் பொறாது, பேதையுடைய பெரிய மழைக் கண்கள் பசப்புற்றன; அத்தன்மைய வான கண்கள் மலைகளுங் காடும் நாடுமாய * இவ்விடையீடுகளையெல் லாம் யாங்ஙனம் பொறுத்தன? (எ - று).

தண்மை - ஈண்டு மென்மைமேனின்றது. போழவென்றது உடம்பி ரண்டும் ஒன்றானது தோன்ற நின்றது. மழை - குளிர்ச்சி

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) (அவ்வாறு கைகளைத்தளர்த்தலால்) முயக்கிடை—அப்புணர்ச்சிக்கு நடுவே, தண்வளிபோழ-சிறுகாற்று நுழைந்ததாக, (அவ்வளவு இடையீடும் பொறாமல்), பேதை பெருமழைக்கண் - பேதையினது பெரியமழைக் கண்கள், பசப்புற்ற - பசலைநிறமடைந்தன, (அத்தன்மையனவாய கண்கள் மலைகளும் காடும் நாடும் ஆகிய இவ்விடை யீடுகளை யெல்லாம் எவ்வாறு பொறுத்தன)? (எ - று).

தண்மை-இங்கு (காற்றினது) மென்மைமேல் நின்றது. போழ என் றது இருவருடம்பும் ஒன்றானமை தோன்ற நின்றது. மழை - குளிர்ச்சி. தண்வளி - மெல்லிய (சிறு) காற்று.

(க - து.) தலைமகன் தனது சிறிது பிரிவினாலுண்டாகிய தலைமகளது கண்களின் பசப்பை யெண்ணி வருந்தினனென்பது.

9. When but a breath of breeze found entrance during our embrace, the woman's large liquid eyes turned sallow. (How did such eyes endure the intervening mountains, forests and countries?)

ம. கண்ணின் பசப்போ பருவரலெய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) தண்வளி போழவந்த கண்ணின் பசப்புத் துன்ப முற்றது, தனக்கயலாய ஒண்ணுதல் விளைத்த பசப்பைக் கண்டு, ().

* இவ்விடையீடுகளை - இத்தடைகளை.

* அது கைகளை யூக்க அவ்வளவிற் பசந்தது ; யான் கைகளையு மூக்கி மெய்களு நீங்கிச் சிறுகாற்று ஊடறுக்கும் துணையும் பசந்திலனெனத் தன் வன்மையும் † அதன் மென்மையுங் கருதி ‡ வெள்கிற் றென்பதாம் ; ஆகவே, அவளுறுப்புக்கள் ஒன்றினொன்று முற்பட்டு ¶ நலனழியும் ; யாங் கடிதிற் சேறுமென்பது கருத்தாயிற்று.

தெளி:—[இதுவுமது.] ( இ - ள்.) கண்ணின் பசப்பு - (சிறுகாற்று நுழையவந்த) கண்ணின் பசப்பு, பருவரலெய்தின்று - துன்பமடைந்தது, ஒண்ணுதல் - (தனக்கு அயலாகிய) ஒளிபொருந்திய நெற்றி, செய்தது - விளைத்த பசப்பை, கண்டு - பார்த்து, (எ - று).

அது கைகளைத் தளர்த்த அவ்வளவில் பசந்தது ; (கண்) யான் கைகளையுந் தளர்த்தி மெய்களும் நீங்கிச சிறுகாற்று உள்ளே வந்து நுழையுமட்டும் பசந்திலே னென்று தன்வன்மையையும் அதன்மென்மையையும் கருதி வெள்கிற்றென்பதாம் ; ஆகவே, அவளுறுப்புக்கள் ஒன்றினொன்று முற்பட்டு நலனழியும், யாம் கடிதிற் செல்லுவோ மென்பது கருத்தாயிற்று. பசப்பு-நிறவேறுபாடு. மெய் - உடம்பு. ஒ, எ - அசை.

(க - து.) தலைமகன் தனது சிறிது பிரிவினால் தலைமகளது உறுப்புக்கள் ஒன்றினொன்று முற்பட்டு நலனழிந்தமையை யெண்ணி வருந்தினு னென்பது.

10. Was it beholding what the bright forehead has done that the dimness of her eyes felt sorrow ?



## 10 - வது அதிகாரம்.

## நெஞ்சொடு கிளத்தல்:—Soliloquy.

பரி:—அஃதாவது ஆற்றாமை மீதூரத் தனக்கோர் பற்றுக்கோடு காணாத தலைமகள் தன்னெஞ்சொடு செய்திறனறியாது சொல்லுதல். || இஃது உறுப்புக்கள் தந்நலனழிந்தவழி நிகழ்வதாகலின், உறுப்பு நலனழிதலின் பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது பிரிவினைப்பொறுமை அதிகரிக்கத் தனக்கு ஓர் பற்றுக்கோடு காணாத தலைமகள் தன்னெஞ்சொடு செய்திறன் அறியாது

* அது - நுதல்(நெற்றி).

† அதன் மென்மையும் - நெற்றியின் மென்மையையும்.

‡ வெள்கிற்று - வெட்கமடைந்தது. ¶ நலனழியும் - அழகுகெடும்.

|| இஃது - நெஞ்சொடு கிளத்தல்.

சொல்லுதல். இஃது உறுப்புக்கள் தமது நலனழிந்தபோது நிகழ்வதாக லால், உறுப்புநல னழிதலின்பின் வைக்கப்பட்டது.

க. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்று
மெவ்வநோய் தீர்க்கு மருந்து.

[தன்னுற்றமை நீருந்திறனுடியது.]

பரி:—(இ - ள்.) நெஞ்சே! இவ்வெவ்வ நோயினைத் தீர்க்கு மருந் தாவதொன்றனை யானறியு மாற்றலிலன், எத்தன்மையதாயதொன் றயினும் நீ யறிந்தெனக்குச் சொல், (எ - று).

எவ்வம் - ஒன்றானுந் தீராமை. * உயிரினுஞ் சிறந்த நாணினை விட் டுச் செய்வதியாதொன்றாயினு மென்பாள் 'எனைத்தொன்றும்' என்றாள்.

தெளி:—(தலைமகள் தன்னுற்றமை நீருந்திறத்தைநாடியது.](இ-ள்.) நெஞ்சே-, எவ்வநோய்-இவ்வெவ்வநோயினை, தீர்க்கு மருந்து ஒன்று - தீர்க்கும் மருந்தாவதொன்றனை, (நான் அறியும் வன்மையுடையேனல்லன்), எனைத்தொன்றும்-எத்தன்மையதுயாதொன்றாயினும், நினைத்து-(நீ) அறிந்து, சொல்லாய் - (எனக்குச்) சொல்வாய், (எ - று).

எவ்வம்—ஒருவகையாலுந் தீராமை. (தலைமகள்) உயிரினுஞ் சிறந்த நாணினைவிட்டுச் செய்வது யாதொன்றாயினு மென்பாள் 'எனைத்தொன் றும்' என்றாள். எவ்வநோய் - எதனாலுந் தீராதநோய். ஓ - அசை.

(க - து.) தலைமகள்! நெஞ்சே எனது காமநோய் தீருதற் குரிய மருந்தொன்றை நீ யோசித்துச் சொல்ல வேண்டுமென் றாள் என்பது.

1. O my mind! Will you not think and tell me some medicine that can cure this incurable disease.



உ. காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு

* "தாயிற் சிறந்தன்று நாண்டைய லாருக்கந் நாண்டகைசால், வேயிற் சிறந்தமென் றோளிதிண் கற்பின் விழுமிதன்று" என்று திருக்கோவை யார் கூறுவதும், "வெளிப்பட்ட பின்றையு முரிய கிளவி" என்னு மிறை யனாகப் பொருள் சூத்திர உரையில் "நாணுக் கற்பென்னும் இரண் டல்லவோ அவள் கண்ணுள்ள; அவற்றுள் நாணிற்கற்பு வலியுடைத்து; என்னை? வலியுடையவாறெனின், 'உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணி னுஞ், செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று' என்பதாகலான்; நாண் அழியினும் கற்பழியாமை நினைக்கும்."என்றிருப்பது மிங்குணர்தற்பாலன வாம்.

[தலைமகனைக் காண்டற்கண் வேட்கை மிகுதியாற் சொல்லியது.]

பரி:—(இ-ள்.) என்னெஞ்சே! வாழ்வாயாக, அவர் நங்கட் காத லிலராகவும் நீ யவர் வரவுநோக்கி வருந்துதற்கேது நின்பேதைமை யே, பிறிதில்லை, (எ-று).

நம்மை நினையாமையின் நங்கட் காதலிலரென்ப தறியலாம்; * அஃ தறியாமை மேலும் அவர்பாற் செல்லக் கருதாது அவர் வரவு பார்த்து வருந்தா நின்றாய்; இது நீ செய்துகொள்கின்ற தென்னுங் கருத்தாற் 'பேதை மை' என்றாள். வாழி இகழ்ச்சிக் குறிப்பு. யாமவர்பாற் சேறலே அறிவாவ தென்பதாம்.

தெளி:—(தலைமகள் தலைமகனைக் காணுதலில் ஆசை மிகுதியால் சொல்லியது.) (இ - ள்.) என்னெஞ்சு - என் நெஞ்சே, வாழி - வாழ்வா யாக, அவர் -, காதலிலராக - (நம்மிடத்து) ஆசையிலராகவும், நீ நோவது- நீ (அவர் வரவு பார்த்து) வருந்துதற்குக் காரணம், பேதைமை - (உன்) அறியாமையே, (வேறு இல்லை), (எ - று).

தலைமகள் நெஞ்சே! காதலர் நம்மை நினையாமையால் நம்மிடத்து ஆசையிலரென்ப தறியலாம்; அதனையறியாமல் மேலும்அக்காதலரிடத்துப் போக நினையாது அவர் வரவு பார்த்து வருந்துகின்றாய்; இது நீ, செய்து கொள்ளுகின்ற தென்னுங் கருத்தால் 'பேதைமை' என்றாள். வாழி - இகழ்ச்சிக் குறிப்புச்சொல். யாம் அவரிடத்துச் செல்லுதலே அறிவாவ தென்பதாம்.

(க - து.) தலைமகள் நெஞ்சே! நீ நம்மிடத்து ஆசையில்லாத தலைவரது வரவை நோக்கி வருந்துதல் தகுதியாகாதென்றாள்.

2. May you live O my mind! While he loves not, for you to smart is folly indeed.



௩. இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார்க ணில்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) நெஞ்சே! அவர்பாற் செல்வதுஞ் செய்யாது ஊண் டிறந்து படுவதுஞ் செய்யாதிருந்து அவர்வரவு நினைந்து நீவருந்துகின்ற தென்னை? இப்பையுளனோய் செய்தார்மாட்டு நமக்கிரங்கிவரக் கருது தல் உண்டாகாது, (எ - று).

* அஃதறியாமை - தலைவர் நம்மிடத்து ஆசையில்லாதவரென்பதறி யாமல்.

நம்மாட்டருளுடைய ரன்மையிற் றாமாக வாரார்; நாஞ்சேறலே இனித்தகுவ தென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) நெஞ்சே-, இருந்து-(அவரிடத்துச் செல்வதுஞ் செய்யாது இங்கு இறந்துபடுவதும் செய்யாது) இருந்து, உள்ளி - (அவர்வரவை) நினைந்து, பரிதல் - (நீ) வருந்துகின்றது, என் - என்னை, பைதனோய் செய்தார்கண்-இத்துன்பநோய் செய்தாரிடத்து, பரிந்து - (நமக்கு) இரங்கி, உள்ளல் - (வர) நினைத்தல், இல் - உண்டாகாது.

காதலர், நம்மிடத்து அருளுடையவரல்லாமையால் தாமாக வாரார்; நாம் அவரிடத்துச் செல்லுதலே இனித்தகுவ தென்பதாம்.

(க - து.) தலைமகள் நெஞ்சே! நீ காதலரிடத்துச் செல்லா திருந்து அவரதுவரவை நோக்கிவருந்துதல் தகுதியுடைய தாகா தென்று ளென்பது.

3. O my mind! Why remain here sitting in pining thought? there are no pitying thoughts (of you) in him who has caused you all these wasting owes.



ச.* கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) நெஞ்சே, நீயவர்பாற் சேறலுற்றாயின் இக் கண்களையும் உடன்கொண்டு செல்வாயாக; + அன்றி நீயே சேறியா யின், இவை தாங் காட்சி விருப்பினால் அவரைக் காண்டல்வேண்டி நீ காட்டென்று என்னைத் தின்பனபோன்று நலியா நிற்கும், (எ - று).

கொண்டென்பது கொளவெனத்திரிந்து நின்றது. தின்னுமென்பது இலக்கணைக்குறிப்பு. † அந்நலிவு தீர்க்கவேண்டு மென்பதாம். ‡ என்றது தான் சேறல் குறித்து.

தெளி:—[இதுவுமது.] (இ-ள்.) நெஞ்சே-, (நீ அவரிடத்துச் செல்ல லுற்றாயாயின்), கண்ணுங்கொளச்சேறி - இக்கண்களையும் உடன்கொண்டு செல்வாயாக, (அல்லாமல் நீயே செல்வாயானால்), இவை - இக்கண்கள், அவர்க்காணலுற்று - (தாம் காண்டற்கு விரைதலால்) அவரைக்காணல்

* அன்றி - இக்கண்களையும் உடன்கொண்டு செல்வதன்றி.

† அந்நலிவு தீர்க்கவேண்டும்—கண்கள் என்னைத் தின்பனபோன்று வருத்துதலை யொழித்தல் வேண்டும்.

‡ என்றது - (தலைமகள் நெஞ்சே! நீ) அந்நலிவு தீர்க்கவேண்டு மென் றது தான் தலைமகனிடத்துச்செல்லுதலைக் குறித்தாம்.

வேண்டி, (நீ காட்டென்று),என்னை-, தின்னும் - தின்பனபோன்று வருத்தாநிற்கும், (எ - று).

கொண்டென்னும் செய்தெனெச்சம் கொளஎன்னும் செயவெனெச்சமாகத் திரிந்துநின்றது. வாயினது தொழிலாயதின்னுதற்றொழிலைக் கண்ணின்மீதேற்றி இவை (கண்கள்) தின்னும் என்று. கூறினமையின், தின்னும் என்பது ஒருபொருளின் தொழிலை மற்றொரு பொருளின்மீதேற்றிக் கூறிய இலக்கணைக் குறிப்புச்சொல்லாம். அந்நலிவு தீர்க்கவேண்டுமென்பதாம். என்றது தான் செல்லுதல் குறித்தாம்.

(க - து.) தலைமகள் நெஞ்சே! நீ காதலரிடத்துச் செல்வாயானால், என்னைவருத்தும் கண்களையுமுடன்கொண்டுபோ என்றாள்.

4. . O my mind! take my eyes also with you; else, they longing to see him, wear my life away.

௫. செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர்.

[இதுவுமது.)

பரி:—(இ - ள்.) நெஞ்சே! யாம் தம்மையுறத் தாமுறாத நங்காதலரை வெறுத்தாரென்று கருதிப் புலந்து கைவிட்டிருக்கும் வலி நமக்குண்டோ? இல்லை, (எ - று).

உறுதல் - அன்புபடுதல். † அவ்வலியின்மையின் அவர்பாற் செல்வதே நமக்குத் தகுவ தென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) நெஞ்சே-, யாம் - நாம், உற்றால்-(தம்மை) விரும்ப, உறாஅதவர் - (தாம்) விரும்பாத நமது காதலரை, செற்றார் என - வெறுத்தாரென்று (நினைந்து), கைவிடல் - (பிணங்கிக்) கைவிட்டிருக்கும் வலி, உண்டோ - (நமக்கு) உண்டோ, (இல்லை).

உறுதல் - அன்புபொருந்துதல். அவ்வலியில்லாமையால் அவரிடத்துச் செல்வதே நமக்குத் தகுவதென்பதாம்.

(க - து.) தலைமகள் நெஞ்சே! நம்மை வெறுத்துள்ள காதலரை நாம் வெறுத்திருத்தல் முடியுமோ? முடியாது என்றாளென்பது.

5. O my mind! Can I forsake him who, though I long for him, longs not for me?

† அவ்வலி - நம்காதலரை வெறுத்தாரென்று கருதிப் புலந்து கைவிட்டிருக்கும் வலி. வலி - சாமர்த்தியம்.

௬., கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்தியென் னெஞ்சு

[தலைமகன் கொடுமை நினைந்து செலவுடன்படாத
நெஞ்சினைக் கழறியது.]

பரி:—(இ - ள்.) என்னெஞ்சே ! யான்நம்மோடு புலந்தால் அப் புலவியைக் கலவிதன்னானே நீக்கவல்ல காதலரைக் கண்டாற் பொய் யேயாயினும் ஒருகாற் புலந்து பின்னதனை நீங்கமாட்டாய் ; * அதுவு மாட்டாத நீ இப்பொழுது அவர் கொடியரெனப் பொய்க்காய்வு காயா நின்றாய் ; இனி † யிதனை யொழிந்து அவர்பாற் செல்லத் துணிவா யாக, (எ - று).

கலத்தலா னென்னும் பொருட்டாய கலக்கவென்பது திரிந்து நின் றது. அதனா னுணர்த்தலாவது கலவியின்பத்தைக் காட்டி அதனான் மயக் கிப் புலவிக் குறிப்பினை யொழித்தல். பொய்க்காய்வு - நிலையில் வெறுப்பு. கண்டான் மாட்டாத நீ காணாதவழி வெறுக்கின்றதனாற் பயனில்லை யென் பதாம்.

தெளி:—[தலைமகள் தலைமகனது கொடுமையை நினைந்து அவனிடத் துச் செல்லுதற்கு உடன்படாத நெஞ்சினையிடித்துச் சொல்லியது.] (இ - ள்.) என்னெஞ்சு-எனது நெஞ்சே, (யான் நம்மோடு பிணங்கின அப் பிணக்கை), கலந்து-புணர்ச்சி தன்னாலே, உணர்த்துங் காதலர் - நீக்கவல்ல காதலரை, கண்டால் - பார்த்தால், புலந்து - (பொய்யாகவேயாயினும் ஒரு முறை)பிணங்கி, உணராய்-(பின் அதனை) நீங்கமாட்டாய்,(அதுவுமாட்டாத நீ இப்போது), பொய்க்காய்வுகாய்தி-(அவரைக் கொடியவரென்று) பொய்க் காய்வு காயாநின்றாய், (இனி யிதனை யொழிந்து அவரிடத்துச் செல்லத் துணிவாயாக), (எ - று).

கலத்தலால் என்னும் பொருளினதாய கலக்கவென்பது கலந்து எனத் திரிந்து நின்றது. அக்கலத்தலா லுணர்த்தலாவது கலவியின்பத்தைக் காட்டி அவ்வின்பத்தினால் மயக்கிப் பிணக்கின்குறிப்பினை நீக்குதல். பொய்க்காய்வு - நிலையில்லாத வெறுப்பு. காதலரைக் கண்டால் வெறுக்க மாட்டாத நீ காணாதவிடத்து வெறுக்கின்றதனால் பயனில்லை யென்பதாம்.

(க - து.) தலைமகள் காதலரைக் கண்டவிடத்து வெறுக்காத நெஞ்சே! நீ இப்போது அவரைவெறுத்தல்தகுதியாகாது; ஆகவே, அவரிடத்துச் செல்லத் துணிவாயாக என்று ளென்பது.

---

* அதுவுமாட்டாத-பொய்யே யாயினும் ஒருகாற் புலத்தலுஞ்செய்ய மாட்டாத.

† இதனை - பொய்க்காய்வுகாய்தலை. (நிலையில் வெறுப்புச் செய்தலை).

6. O my mind! When you see the lover who removes your displeasure by embrace, you cannot show it falsely at least; nay, false is the fire that burns in you.



எ. காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு.

[நாண் தடுத்தலின் அச்செலவொழிவாள் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நல்ல நெஞ்சே! ஒன்றி னுன்விடமாட்டாயாயிற் காம வேட்கையைவிடு, ஒன்றி னது விடமாட்டாயாயின் நாணினை விடு, அன்றியே * இரண்டும் விடாமை நின் கருத்தாயின், ஒன்றற்கொன்று மறுதலையாய † இவ்விரண்டனையும் ‡ உடன்றாங்குமதுகை யானிலன், (எ - று).

யானோவென்னும் பிரிநிலை நீ பொறுப்பினு மென்பதுபட நின்றது. நன்னெஞ்சே யென்றது ¶ இரண்டையும் விடாது பெண்மையை நிலை பெறுத்தலின், $ நல்லையென்னுங் குறிப்பிற்று. || அது நன்றே யெனினும் என்னுயிருண்டாதல் சாலாமையின், | அதற்காகின்றிலே னென்பதாம். முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

தெளி:—[நாணம் தடுத்தலால் அச்செல்லுத லொழியுந் தலைமகள் சொல்லியது.] (இ - ள்) நன்னெஞ்சே - நல்ல நெஞ்சே, ஒன்று காமம் விடு - ஒன்றினுல் (நாணத்தை விடமாட்டாயாயின்) காமவிருப்பத்தை விடு, (ஒன்று) நாண்விடு - ஒன்றினுல் (அக்காமவிருப்பத்தை விடமாட்டா யாயின்) நாணத்தை விடு, (அல்லாமலே இரண்டும் விடாமை உன் கருத்தா யின்), இவ்விரண்டும் - (ஒன்றற்கொன்று பகையாகிய) இவ்விரண்டனை யும், யானோ—,பொறேன் - (ஒரு சேரத்) தாங்கும் வலிமையுடையே னல் லேன், (எ- று).

யானோவென்னும் பிரிநிலை யோகாரம் (நெஞ்சே!) நீ பொறுப்பினு மென்பது தோன்ற நின்றது. நன்னெஞ்சே யென்றது இரண்டையும் விடாமல் பெண்மையை நிலைபெறச் செய்தலால், நல்லையென்னுங் குறிப் பின்கண் வந்தது. அது நன்றே யெனினும் என்னுயிருண்டாதல் அமை

* இரண்டும் - காமமும் நாணுமென்னுமிரண்டனையும்
† இவ்விரண்டனையும் - காமம் நாண் என்னுமிவ்விரண்டனையும்.
‡ உடன்றாங்குமதுகை - ஒருமித்துத்தாங்குஞ் சாமர்த்தியம்.
¶ இரண்டையும் - காமம் நாண் என்னு மிரண்டையும்.
$ நல்லை - நற்குணமுடையாய்
|| அது - பெண்மையை நிலைபெறச்செய்தல்.
| அதற்கு - பெண்மையை நிலைபெறச்செய்தற்கு.

யாமையின், அதற்கு ஆகின்றிலே னென்பதாம். இரண்டுமென்னும் முற்றும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. ஓ - அசை.

(க - து.) தலைமகள் நெஞ்சே! யான் காமம் நாண் என்னுமிரண்டனையுந் தாங்கும் வலியின்றியவளா யிருக்கின்றேன்; ஆதலால், நீ இவ்விரண்டனுள் யாதாயினுமொன்றனை விட்டுவிடு என்றாளென்பது.

7. O my worthy mind! give up either love or honor; I cannot bear them both

அ. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) என்னெஞ்சே! அவர் இவ்வாற்றாமையை யறியாமையின் நொந்துவந்து தலையளி செய்யாராயினாரென்று கருதி * அஃதறிவித்தற் பொருட்டு நம்மைப் பிரிந்து போயவர்பின் ஏங்கிச்செலலுற்ற நீ யாதுமறியாய், (எ - று).

ஆற்றாமை கண்டுவைத்தும் நல்கார் போயினாரைக் காணாத வழிச் சென்றறிவித்த துணையானே நல்க வருவரென்று கருதினமையாற் 'பேதை' என்றாள்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) என்னெஞ்சு - எனதுநெஞ்சே, அவர் - அக்காதலர், (இவ்வாற்றாமையை அறியாமையால்), பரிந்து - நொந்து, (வந்து), நல்காரென்று-அருள்செய்யாராயினாரென்று,(நினைத்து), (அதனை அறிவித்தற் பொருட்டு), பிரிந்தவர்பின் - (நம்மைப்) பிரிந்து போயவர் பின்னே, ஏங்கிச்செல்வாய் - இரங்கிப்போகலுற்றநீ, பேதை - யாதுமறியாய், (எ - று).

ஆற்றாமை (பொறுக்காமை)யை யறிந்திருந்தும் அருள்செய்யாமல் போயினாரைக் காணாதவிடத்துச் சென்று அறிவித்த அளவாலே அவர் அருள்செய்ய வருவாரென்று நினைத்தமையால் 'பேதை' என்றாள்.

(க - து.) தலைமகள் நம்மிடத்து அருள்செய்யாது சென்ற காதலரிடத்து ஏங்கிச் செல்லலுற்ற நெஞ்சே! நீயாதுமறியாயென்று கூறினாளென்பது.

8. O my mind! you are a fool to follow my departed one, while you grieve that he will not show pity & favour you.

* அஃது-ஆற்றாமையை (சகித்துக்கொண்டிருக்க முடியாமையை).

௯. உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) என்னெஞ்சே! காதலர் நின்னகத்தாராக, முன் பெல்லாங் கண்டு வைத்து இப்பொழுது நீ புறத்துத் தேடிச்செல் கின்றது யாரிடத்து, (எ - று)

உள்ளமென்புழி அம்முப் பகுதிப்பொருள் விகுதி. * நின்னகத்திருக் கின்றவராக, † அஃதறியாது புறத்துத்தேடிச் சேறல் நகையுடைத்து; அதனை யொழி யென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) என்னெஞ்சு - எனதுநெஞ்சே, காதலவர் - காதலர், உள்ளத்தாராக - (உன்) அகத்திருப்பவராக, (முன் பெல்லாங்கண்டிருந்தும்), நீ-,உள்ளி-(இப்பொழுதுபுறத்துத்) தேடி,சேறி- செல்லுகின்றது, யாருழை - யாரிடத்து, (எ - று).

உள்ளம் என்றவிடத்து அம் பகுதிப்பொருளை யுணர்த்திய விகுதி. நெஞ்சே! காதலவர் உன்னகத்திருக்கின்றவராக, நீ அதனையறியாமல் புறத் துத்தேடிச்செல்லுதல் நகையுடைத்து; அதனை யொழி யென்பதாம். அகம்-உள்; புறம்-வெளி.

(க - து.) தலைமகள் நெஞ்சே! காதலர் *உன்னகத்திருக்க, அதனையறியாது நீ யவரைப் புறத்துத் தேடிச் செல்லுதல் தகுதி யுடையதாகா தென்றாளென்பது.

9. O my mind! Whom do you think to find roaming while the dear one is within yourself.

௧0. துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
வின்னு மிழத்துங் கவின்.

[அவரை மறந்தாற்றல்வேண்டு மென்பதுபடச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நம்மைக் கூடாவண்ணந் துறந்துபோயினாரை நாம் நம் மகத்துடையேமாக, முன்னிழந்த புறக்கவினே யன்றி நின்ற ‡ அகக்கவினு மிழப்பேம், (எ - று).

¶ "குன்றி, னெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேல்" என்புழிப் போலநெஞ்சென்பது ஈண்டும் அகப்பொருட்டாய் நின்றது.அவர் நம்மைத்

* நின்னகத்திருக்கின்றவரை என்றும் பாடமுண்டு.

† அஃதறியாது - காதலர் நின்னகத்திருக்கின்றதறியாமல்.

‡ அகக்கவின் - நிறையாம்.

¶ குறுந்தொகை-கடவுள்வாழ்த்து. இதன்பொருள். கிரவுஞ்சமென் னும் மலையினுள்ளிடம் பிளவுபடுமாறு வீசிய வழகிய சுடரையுடைய நீண்டவேற்படை என்பது. ஈண்டு அழகு மிகுதியாம்; சுடர்-பிரகாசம்.

துன்னுமற் றுறந்தாராகவும், நாமவரை மறத்தன் மாட்டேமாகவும், போன மெய்க்கவினேயன்றி நின்றநிறையு மிழப்பே மென்பதாம்.

தெளி:—[அவரைமறந்து பொறுத்தல் வேண்டுமென்பது தோன்ற நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது.] (இ-ள்.) துன்னு-(நம்மைக்) கூடாத வண்ணம், துறந்தாரை-விட்டுப்போயினரை, நெஞ்சத்துடையேமா-(நாம் நமது) அகத்து உடையேமாக, இன்னுங் கவின் - முன்னிழந்த புறத்தழகையே யன்றி நின்ற அகத்தழகையும், இழத்தும்-இழப்போம், (எ-று).

நெஞ்சென்பது இங்கு அகம் (உள்) என்னும் பொருளதாய் நின்றது. அவர் நம்மைக்கூடாதவண்ணம் விட்டுபோனாராகவும், நாம் அவரை மறத்தல் மாட்டே மாகவும், போன மெய்யழகையேயன்றி நின்றநிறையையும் இழப்போமென்பதாம். மெய் – உடம்பு.

(க - து.) தலைமகள் நெஞ்சை நோக்கி நம்மைக் கூடாதவண்ணஞ் சென்ற காதலரை மறவாதிருந்தால், நாமின்னும் அழகையிழந்து விடுவோமென்றாள் என்பது

10. If I retain in my mind him who utterly renounced me, I shall lose even the inward dignity that remains.



## 11. - வது அதிகாரம்.

## நிறையழிதல்:—Loss of modesty.

**பரி:—அஃதாவது ‡ தலைமகள் மனத்தடக்கற்பாலனவற்றை வேட்கைமிகுதியான் அடக்கமாட்டாது வாய்விடுதல்; † "நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை" என்றார் பிறரும். அஃதழிதற் காரணம் நெஞ்சோடு கிளந்தமையின், ¶ இது நெஞ்சொடுகிளத்தலின்பின் வைக்கப் பட்டது.**

தெளி:—அஃதாவது தலைமகள் மனதின்கண் அடக்கப்படுவனவற்றை ஆசைமிகுதியால் அடக்கமாட்டாமல் வாய்விட்டுச் சொல்லுதல். அந்நிறை அழிதற்குக்காரணம் நெஞ்சொடு கிளந்தமை (கூறினமை)யால், இது நெஞ்சொடு கிளத்தலின்பின் வைக்கப்பட்டது.

‡ பிறரறியாமல் மறைக்கப்படுவதாய காமவேட்கை தன்வரைத்தன்றிப்பெருகலிற் றலைமகளதனை மறைத்தலாற்றாது வெளிப்படநிற்றல் என்றும் பாடமுண்டு.

† கலித்தொகை - நெய்தற்கலி—16. இதன்பொருள். நிறையென்று சொல்லப்படுவது மறைந்தவொருகாரியம் பிறரறியாமல் நடத்தல் என்பது.

¶ இது - நிறையழிதல்.

க. காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

[நாணுநிறையுமழியாமை நீயாற்றல்வேண்டுமென்ற தோழிக்குத்
தலைமகள் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நாணாகிய † தாழினைக் கோத்த நிறையென்னுங் கதவினைக் காமவேட்கை யாகிய கணிச்சி முறியா நின்றது, இனி ‡ அவை நிற்றலுமில்லை, யா னாற்றலுமில்லை, (எ-று).

கணிச்சி - ¶ குந்தாலி. நாணுள்ள துணையும் நிறையழியா தாகலின் $ அதனைத் தாழாக்கியும், அகத்துக்கிடந்தன பிறர் கொள்ளாமற் காத்த லின் நிறையைக் கதவாக்கியும், * வலியவாய்த் தாமாக நீங்காத || அவ்விரண் டனையும் ஒருங்கு நீக்கலிற் றன் காமவேட்கையைக் கணிச்சியாக்கியுங் கூறினாள்.

தெளி:—[நாணும் நிறையும் அழியாமல் நீ பொறுத்தல் வேண்டு மென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) நாணுத்தாழ் வீழ்த்த - நாணாகிய தாழினைக்கோத்த, நிறையென்னுங்கதவு - நிறையென் னுங் கதவினை, காமக் கணிச்சி - காமவேட்கையாகிய குந்தாலி, உடைக் கும் - முறிக்கின்றது, (இனி அவை நிற்றலும் இல்லை, யான் பொறுத் தலும் இல்லை), (எ - று).

நாணுள்ளவளவும் நிறை அழியாதாகலால் அதனைத்தாழாக்கியும்,அகத் துக் கிடந்தனவற்றைப் பிறர்கொள்ளாமற் காத்தலால் நிறையைக் கதவாக் கியும், வலியனவாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டனையும் ஒருசேர நீக்கலால் தன் காம வேட்கையைக் கணிச்சியாக்கியும் சொல்லினாள்.

(க - து.) தலைமகள் தோழியோடு நாணாகிய தாழினைக் கோத்த நிறையென்னுங் கதவைக் காமமென்னுங் கணிச்சி முறித்தலால், யான் பொறுத்தல் முடியா தென்றாளென்பது.

1. The love's axe breaks through the door of chastity which is barred by the bolt of modesty.



உ. காமமெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில்.

---

† தாழ் - தாழ்க்கோல் (தாழ்ப்பாள்).
‡ அவை - நாணும் நிறையும்.
¶ குந்தாலி - கோடரி (கோடாலி). $ அதனை - நாணை.
* வலியவாய் - உறுதியுடையனவாய்.
|| அவ்விரண்டனையும்-நாண் நிறையென்னு மவ்விரண்டனையும்.

[நெஞ்சின்கட்டோன்றிய காமம் நெஞ்சாலடக்கப்படு மென்றாட்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) எல்லாருந் தொழிலொழியு மிடையாமத்தும் என்னெஞ்சத்தை யொறுத்துத் தொழில் கொள்ளா நின்றது; ஆகலாற் காமமென்று சொல்லப்பட்ட வொன்று † கண்ணோட்ட மின்றியிருந்தது, (எ-று).

ஓவென்பது இரக்கக்குறிப்பு. தொழிலின் கண்ணே யாடல் - தலைமகன்பாற் செலவிடுத்தல். ‡ தாயைப்பணிகோடல் உலகியலன்மையிற் 'காமமென வொன்று' என்றும், * அது ¶ தன்னைக் கொள்ளுகின்றது அளவறியாது கோடலிற் 'கண்ணின்று' என்றுங் கூறினாள். அடக்கப்படாமை கூறியவாறு.

தெளி:—[நெஞ்சின்கண் தோன்றியகாமம் நெஞ்சால் அடக்கப்படுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) யாமத்தும் - (எல்லாருந் தொழிலொழிகின்ற) நடுராத்திரியிலும், என்னெஞ்சத்தை-, தொழில் ஆளும் - (தண்டித்துத்) தொழில்கொள்ளாநின்றது, (ஆகலால்), காமமென வொன்று - காமமென்று சொல்லப்பட்ட ஒன்று, கண்ணின்று-கண்ணோட்டமில்லாததா யிருந்தது, (எ - று).

ஓ என்பது இரக்கக் குறிப்பிடைச்சொல். தொழிலின்கண்ணே ஆளுதல் - (காமம்நெஞ்சத்தை) தலைமகனிடத்துச் செல்லவிடுத்தல். தாயைத் தொழில் கொள்ளுதல் உலகநடையல்லாமையால் 'காமமெனவொன்று' என்றும், அது தன்னைக் கொள்ளுகின்றது அளவறியாது கொள்ளுதலால் 'கண்ணின்று' என்றும் சொல்லினாள். காமம் தன்னால் அடக்கப்படாமையைத் தலைமகள் சொல்லியவாறும். தொழில் - ஏவற்றொழில்.

(க - து.) தலைமகள் தோழியோடு காமமானது என் நெஞ்சத்தைத் தன்வயஞ் செய்துகொண்டு தாட்சண்ணியமின்றி நடுராத்திரியிலும் என்னை வருத்துகின்றதென்றாளென்பது.

2. What is called love is the one thing which mercilessly worries my mind even in the midnight hour.

---

௩. மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும்.

---

† கண்ணோட்டம் - தாட்சண்ணியம்.

‡ தாயையென்றது காமமுண்டாதற்குமுதற்காரணமாய நெஞ்சத்தை. தந்தையைத்தொழில்கோடல் என்றும்பாடமுண்டு.

* அது - காமம். ¶ தன்னைக் கொள்ளுகின்றது - நெஞ்சத்தைப் பணிகொள்ளுகின்றமை.

[மகளிர்காமம் மறைக்கப்படுமென்றாட்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) இக்காமத்தை யானோவென்னுள்ளே மறைக்கக் கருதுவேன்; அதனான் இஃதென் கருத்தின் வாராது தும்மல்போல வெளிப்பட்டே விடாநின்றது, (எ-று).

† மன் - ஒழியிசைக்கண் வந்தது. ‡ ஓகாரம் - பிரிநிலைக்கண்வந்தது. தும்மலடங்காதாற்போல அடங்குகின்றதில்லை யென்பதாம்.

தெளி:—[மகளிர்காமம் மறைக்கப்படுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது] (இ - ள்.) காமத்தை - இக்காமத்தை, யான் - நான், மறைப்பேன்-(என்னுள்ளே) மறைக்கநினைப்பேன், (அதனால்), குறிப்பின்றி-(இக்காமம்) என்கருத்தின் வழிவாராமல், தும்மல்போல்-தும்மல்போன்று, தோன்றிவிடும்-வெளிப்பட்டே விடுகின்றது, (எ - று).

மன் - ஒழியிசைப் பொருளில் வந்தது. ஓகாரம் - பிரிநிலைப்பொருளில் வந்தது. தும்மல் அடங்காமைபோலக் காமம் அடங்குகின்றதில்லை யென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியோடு காமம் யானடக்க அடங்காது தும்மல்போல வெளிப்பட்டேவிடுகின்ற தென்றாளென்பது.

3. I would conceal my love, but alas ! like a sneeze it breaks out yielding not to my will.



ச. நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம
மறையிறந்து மன்று படும்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) இன்றினாங்கெல்லாம் யானென்னை நிறையுடையே னென்று கருதி யிருந்தேன்; || அதனான் இன்றென் காமம் மறைத்தலைக் கடந்து மன்றின்கண் வெளிப்படா நின்றது, (எ-று).

¶ மன்னும் ஓவும் - மேலவற்றின்கண் வந்தன மன்றுபடுதல்—பலரு மறிதல். இனி என்வரைத்தன் றென்பதாம்.

---

† மறைப்பேன்மன் என்றவிடத்து மன் என்னுமிடைச்சொல் அதனான் (மறைத்தலால்) என்னும் ஒழிந்த சொற்பொருளைத் தந்து நின்றமையின், ஒழியிசைக்கண்வந்த தாயிற்று.

‡ தலைமகள் தன்னைத்தோழியினின்றும் பிரித்து யானோ என்று கூறினமையின், யானோ என்னும் ஓகாரவிடைச்சொல் பிரிநிலைப்பொருளதாயிற்று. ஓகாரம் இரங்கற்கண்வந்தது என்றும் பாடமுண்டு.

|| அதனாலென் என்னும் பாடமுண்டு.

¶ மன் என்னு மிடைச்சொல் அதனான் (அவ்வாறுகருதி இருந்தமையால்) என்னும் ஒழிந்த சொற்பொருளைத் தந்து நின்றது.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) யான் நிறையுடையேனென்பேன்-(இதுவரைக்கெல்லாம்) யான் (என்னை) நிறையுடையேனென்று நினைத்திருந்தேன், (அதனால் இன்று), என்காமம் - எனது காமம், மறையிறந்து - மறைத்தலைக் கடந்து, மன்றுபடும் - மன்றின்கண் வெளிப்படாநின்றது, (எ-று).

மன்னும் ஓகாரமும் மேற்குறளிற்போன்று முறையே ஒழியிசைப் பொருளிலும் பிரிநிலைப் பொருளிலும் வந்தன. மன்றுபடுதல் - பலரும் அறிதல். இனி யிக்காமம் என்னளவினதன்று என்பதாம்.

(க-து.) தலைமகள் தோழியோடு இப்போதென்காமம் யானடக்க அடங்காது பலருமறிய வெளிப்படுகின்றதென்றுரைப்பது.

4. I deemed my modesty would be firm, but alas my love-sickness casts away the veil and appears in public.



ரு. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று.

[நம்மை மறந்தாரை நாமுமறக்கற்பால மென்றாட்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) தம்மையகன்று சென்றார்பின் செல்லாது தாமும் அகன்றுநிற்கும் ‡ நிறையுடைமை காமநோயினையுறாதார் அறிவதொன்றன்றி உற்றார் அறிவதொன்றன்று, (எ-று).

இன்பத்தொடுகழியுங் காலத்தைத் துன்பத்தொடுகழியுமாறு செய்தலிற் 'செற்றார்' என்றாள். பின்சேறல் - மனத்தால் இடைவிடாது நினைத்தல். ¶ பெருந்தகைமை - ஈண்டாகுபெயர். காமநோயுறாதார் - மானமுடையார். † நன்றெனவுணரார் மாட்டுஞ் சென்றேநிற்கும் யானறிவதொன்றன்றென்பதாம்.

தெளி:—[நம்மைமறந்தவரை நாமும் மறந்துவிடுவோமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.] (இ - ள்) செற்றார்பின் - (தம்மைநீங்கிப்) போனவர்பின், செல்லா - செல்லாமல், (தாமும் நீங்கிநிற்கின்ற), பெருந்தகைமை - நிறையுடைமையானது, காமநோயுற்றார் - (காமநோயினையடை

‡ நிறையுடைமையானது காமநோயை யடையாதவரால் அறியப்படுமேயன்றி, அடைந்தவரால் அறியப்படுவதன் றென்பதாம்.

¶ பெருந்தகைமை என்னுங் காரியப்பெயர் அதற்கேதுவாய நிறையுடைமையை யுணர்த்துதலால், காரியவாகு பெயராம்.

† நன்றெனவுணரார்-காதலியைப் பிரியாதிருத்தல் நன்றென்றறியாதவர்.

யாதவர் அறிவதொன்றல்லாமல்) காமநோயையடைந்தவர், அறிவதொன் றன்று - அறிவதொன்றன்றும், (எ - று).

இன்பத்தோடு கழியுங்காலத்தைத் துன்பத்தோடு கழியுமாறு செய்த லால் (காதலரை) 'செற்றார்' என்றாள். பின்செல்லுதல் - காதலரை மனத்தால் இடைவிடாது நினைத்தல். பெருந்தகைமை-இங்கு ஆகுபெயர். காமநோயுறுதார்—மானமுடையார். நிறையுடைமை,நன்றென அறியாரிடத் தும் சென்றே நிற்கும் யான் அறிவதொன்றன்றென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியோடு நிறை காமநோ யுறாதவ ரிடத்தன்றி, அதனையுற்றவரிடத் திரா தென்றுளென்பது.

5. The dignity that would not seek an absent lover, is the one thing that the loving heart can never know.



௬ செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) என்னையகன்று சென்றார்பின்னே யான் சேறலை வேண்டுதலால்,என்னையுற்றதுயர் எத்தன்மையது? சாலநன்று,(எ-று).

செற்றவரென்றது ஈண்டும் * அப்பொருட்டு. † வேண்டவென் பது வேண்டியெனத் திரிந்துநின்றது ‡ அளித்தென்பது இகழ்ச்சிக் குறிப்பு. இக்காமநோய் யான்சொல்லவுங் கேட்கவுமாவ தொன்றன்று; சாலக்கொடி தென்பதாம்.

தெளி:—[இதுவுமது] (இ-ள்.) செற்றவர்பின் - (என்னை நீங்கிச்) சென்றவர்பின்னே, சேறல்வேண்டி - (யான்) செல்லுதலைவேண்டுதலால், என்னையுற்றதுயர் - என்னையடைந்த துன்பமானது, எற்று - எத்தன்மை யது, அளித்து - மிகநன்றாக விருக்கின்றது, (எ - று)

அரோ - அசை. செற்றவர் என்றது இங்கும் மேற்குறளின் பொருள தாய் நின்றது. வேண்ட என்பது வேண்டியெனத்திரிந்து நின்றது. அளித்தென்பது இகழ்ச்சிக்குறிப்புச்சொல். இக்காமநோயானது நான் சொல்லவும் கேட்கவும் ஆவதொன்றன்று; மிகக்கொடியதென்பதாம்.

---

* அப்பொருட்டு என்பது இன்பத்தொடு கழியுங்காலத்தைத் துன்பத் தொடு கழியுமாறு செய்தலின் என்பதாம்.

† காரியப்பொருளில் வந்த வேண்ட வென்னும் செயவெனச்சம் வேண்டியெனத் திரிந்து நின்றது. வேண்டல்-காரியம் ; துயர்-காரணம்.

‡ அளித்தென்பது மிகக்கொடிய தென்னும் பொருளில் வந்த இகழ்ச் சிக் குறிப்புச் சொல்லாம்.

(க - து.) தலைமகள் தோழியோடு துன்பம் அதிகரித்தலால், என்னை விட்டுச்சென்ற தலைவர் பின்னே செல்ல யான் விரும்புகின்றேனென்று றென்பது.

6. How graceful is my grief which seeks to go after my absent lover!



எ. நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின்.

(* பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவாற்கூடிய தலைமகள் நீ புலவாமைக்குக் காரணம் யாதென்ற தோழிக்குச்சொல்லியது.)

பரி:—(இ - ள்.) நம்மால் விரும்பப்பட்டவர் வந்து காமத்தால் நாம்விரும்பியவற்றைச் செய்யுமளவின் நாணென்றொன்றையும் அறியமாட்டேமாயிருந்தேம், (எ-று).

† பேணியாரெனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்

* பரத்தையிற்பிரிவு - தலைமகன் பரத்தைமேற்காதலாய்த் தலைமகளைப்பிரிந்து அப்பரத்தையர் சேரியிற்போதல் "பரத்தையிற் பிரிவென்றோதவே, 'பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின், மாண்டவறிவி னவர்' என்பதனாற் றலைமகனறிவிலனும், தலைவியிடத் தன்பிலனும், பெருமையுமிலனும், பட்டியுமாமெனின், அற்றன்று; அரசரிமையனாதலின், அரசரிமைக்குப் பரத்தையரினும் வரைதற்குரியராய்த் தொன்றுதொட்டு நடக்கு முறைமையராயும், வரையாத வுரிமையராய்ச் சேரியின்கணுறைவாருமாய இவரும் பிறந்தஞான்று தொட்டு இவர்க்கென விதித்திருக்கப்படுதலானும், அவரைநீக்குதல் தகுதியன்மையானும், பரத்தையிற் பிரிதல் குற்றமன்றெனக்கொள்க. அன்றியும் காலைக்கடன்கழித்தலும், உலகத்திருந்து நாடுகாவற்றொழிற் செய்தலும், விருந்துடனடிசில் கைதொடலும், நாவலரோடு கல்வி பயிறலும், ஆடல்பாடல்களிற் களித்தலும், மடவாரோடுகூடலும், துயிறலும், துயிலுணர்ந்துதேவர்ப்பராவலுமாகிய காலவரையறை யெட்டனுள் ஆடல்பாடல் ஒன்றுதலானும், அதற்குரியர் பரத்தையராதலானும், அதற் குரியகாலத்தில் அவரிடத்தில் மனம் செல்லுதலியல்பாதலானும், பரத்தையிற் பிரிதலாற் குற்றமின்றெனக்கொள்க. ஆயின், பரத்தையர்சேரியில் செல்லுமாறென்னை யெனின், அவர் பலரோடும் விளையாடற்பொருட்டும், அவருடன் புணர்தற் குரியாரைப்புணர்தற்பொருட்டும் பரத்தையர் சேரியிற் செல்லுமென் றுணர்க." என்று தஞ்சைவாணன் கோவையினுரையிற் கூறப்பட் டிருக்கின்றது.

† மூன்றும் வேற்றுமைக் கருத்தாவின் செயப்படுபொருள் வினைமுதல்போலிருப்பது பற்றிப் 'பேணியாரெனச் செயப்படுபொருள் வினைமுதல் போலக் கூறப்பட்டது' என்று கூறப்பட்டது.

பட்டது. விரும்பியன - வேட்கைமிகவினாற் கருதியிருந்த † கலவிகள். நாண்- ‡ பரத்தையர்தோய்ந்த மார்பைத் தோய்தற்கு நாணுதல். ஒன்றென்பது ஈண்டுச் சிறிதென்னும்பொருட்டு. இழிவுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. நிறை யழிவான் அறியாது கூடிய தன்குற்றநோக்கி அவளையு முளப்படுத்தாள்.

தெளி:—[பரத்தையினின்றும் பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவால் கூடிய தலைமகள் நீ பிணங்காமைக்குக் காரணம் யாதென்றதோழிக்குச் சொல்லியது.] (இ-ள்.) பேணியார்-(நம்மால்) விரும்பப்பட்டதலைவர், (வந்து), காமத்தால் - காமத்தினால், பெட்ப - (நாம்) விரும்பியவற்றை, செயின் - செய்யு மளவில், நாணெனவொன்று - நாணென்று சொல்லப்பட்ட ஒன்றையும், அறியலம் - அறியமாட்டோமா யிருந்தோம், (எ-று).

பேணியாரை யென்னும் செயப்படுபொருள் பேணியாரென எழுவாய்போலச் சொல்லப்பட்டது. விரும்பின - ஆசைமிகுதியால் நினைத்திருந்த புணர்ச்சிகள். நாண் - பொதுமகளிர் புணர்ந்தமார்பைப் புணர்தற்கு நாணுதல். ஒன்றென்பது இங்குச் சிறிதென்னும் பொருளது. ஒன்றும் என்னும் இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. (தலைமகள் தலைமகனை) நிறையழிவாலறியாமல் கூடிய தனது குற்றத்தை நோக்கித் தோழியையும் தன்னோடுளப்படுத்தி 'அறியலம்' என்றுகூறினாள்.

(க - து.) தலைமகள் தோழியோடு நம்மால் விரும்பப்பட்டவர் வந்து காமத்தால் நாம்விரும்பியவற்றைச் செய்யும்போது நாணத்தை யறியாது விட்டோமென்று ளென்பது

7. I know no sense of shame when my beloved returns my longing heart to bless with love.



அ பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.

† கலவிகள் - கொடிபோலச் சுற்றித்தழுவுதல், மரத்தைப்போலேறித் தழுவுதல், எள்ளுமரிசியும் போலக் கலந்துகலந்து தழுவுதல், பாலும் நீரும் போல ஒன்றுபடத் தழுவுதல், தொடையால் நெருக்கித்தழுவுதல், குறிகள் சேரத் தழுவுதல், கொங்கை யழுந்தத்தழுவுதல், நெற்றிபொருந்தத்தழுவுத லென்பனவாம்.

‡ "காதற் பரத்தையர் காமக் கிழத்தியர், பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியென், றன்னவ ருரிய ரவையிரண் டிற்கும்" "அவற்றுட், காதற் பரத்தையர் களவிற் குரியர்" என்று அகப்பொருள் விளக்கங்கூறுவ திங்குணர்தற் பாலதாம்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) நந்நிறையாகிய வாணையழிக்கும் தானை பலபொய் களைவல்ல கள்வனுடைய தாழ்ந்தசொற்க ளன்றே? ஆனபின், அது நிற்குமாறென்னை, (எ - று).

பெண்மை - ஈண்டுத் தலைமைபற்றி நிறைமேனின்றது. வந்தாற் புலக்கக் கடவேமென்றும், புலந்தால் அவன் சொற்களானுஞ் செயல்களானும் * நீங்கேமென்றும், † இவைமுதலாக வெண்ணிக்கொண்டிருந்தன யாவுங்காணாது கலவிக்கட் டன்னினு முற்படும்வகை வந்துதோன்றினானென்பாள் 'பன்மாயக்கள்வன்' என்றாள். பணிமொழி-நம்மினுந்தானன்பு மிகுதியுடையனாகச் சொல்லுஞ்சொற்கள். அவன் ‡ அத்தன்மையனாக, சொற்கள் ¶ அவையாக, நந்நிறை யழியாதொழியுமோ வென்பதாம்.

தெளி:—[இதுவுமது]. (இ - ள்.) நம்பெண்மை - நமதுநிறையாகிய அரணை, உடைக்கும் - அழிக்கும், படை - ஆயுதம், பன்மாயக்கள்வன் - பல பொய்களைப் பேசவல்லகள்வனுடைய, பணிமொழியன்றோ - தாழ்ந்தசொற்களன்றோ? (ஆனபின், அந்நிறை நிற்கும் விதமெவ்வாறு)? (எ - று).

பெண்மை - இங்குத் தலைமைபற்றி நிறைமேல் நின்றது. (காதலன்) வந்தால் (யாம்) பிணங்கக்கடவேமென்றும், பிணங்கினால் அவன் சொற்களாலும்செயல்களாலும் நீங்கேமென்றும், இவை முதலாக எண்ணிக்கொண்டிருந்தன வெல்லாவற்றையும் காணாமல் கலவியில் தன்னினும் முற்படும்படி வந்துதோன்றினானென்பாள் 'பன்மாயக்கள்வன்' என்றாள். பணிமொழி - நம்மினுந் தான் அன்பு மிகுதியுடையவனாகச்சொல்லுஞ்சொற்கள். அவன் அப்படிப்பட்டவனாக, சொற்கள் அவையாக, நமதுநிறை அழியாதொழியுமோ வென்பதாம். பணிமொழியைப் படையாக வுருவகஞ்செய்தவர் அதற்கேற்பப் பெண்மையை அரணாக (கோட்டையாக) உருவகஞ் செய்யாமையின், இஃதேகதேச வுருவகவணியாம். கலவி - புணர்ச்சி.

(க - து.) தலைமகள் தோழியோடு நமது நிறையானது பன்மாயக்கள்வனது பணிவாய சொற்களால் நில்லாதொழிகின்றதென்றாளென்பது.

8. Are not the enticing words of my lover, versed in wily art, the weapon that breaks away my femine firmness.

* நீங்கேம் - அப்பிணக்கினின்றும் நீங்கேம்.

† இவைமுதலாக என்றமையின், அவனோடு பேசவுமாட்டேன், அவன்முகத்தைப் பார்க்கவுமாட்டேன், பிணங்கியிருப்பதுபற்றி யார் வந்து யாது கூறினும் அதனைக் கேட்கவு மாட்டேனென்றும் தலைமகளெண்ணிக்கொண்டிருந்தாளென்று கொள்க.

‡ அத்தன்மையனாக - பன்மாயக்கள்வனாக.

¶ அவையாக - பணிமொழியாக.

௯. புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங்
கலத்த லுறுவது கண்டு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) அவர் வந்தபொழுது புலக்கக்கடவேனென்று கருதி முன்னில்லாது பிறிதோரிடத்துப் போயினேன்; போயும், என் னெஞ்சம் நிறையினில்லாது * அறைபோய் அவரோடு கலத்தற்றொடங்குதலை யறிந்து, இனி † அது வாயாதென்று புல்லினேன், (எ - று).

வாயாமை - புலத்தற் கருவியாய நெஞ்சுதானே கலத்தற் கருவியாய் நிற்றலின், ‡ அது முடியாமை.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) (அவர்வந்தபொழுது) புலப்பலெனப் பிணங்கக் கடவேனென்று, (நினைத்து), சென்றேன் - (முன்னே நில்லாமல் வேறோரிடத்திற்குப்) போயினேன், (போயும்), நெஞ்சம்-(என்) நெஞ்சமானது, (நிறையினில்லாமல் கீழறுத்துக் கொண்டுபோய்), கலத்த லுறுவது - (அவரோடு) கலத்தலைத் தொடங்குதலை, கண்டு - அறிந்து, புல்லினேன் - (இனி அதுவாயாதென்று) தழுவினேன், (எ - று).

வாயாமை - பிணங்குதற்குக் காரணமாகிய நெஞ்சுதானே கலத்தற்குக் காரணமாய் நிற்றலால், அது முடியாமை

(க-து.) தலைமகள் தோழியோடு காதலர் வந்தபோது யான் பிணங்கி யிருக்கவேண்டுமென்று கருதி வேறோரிடத்திற்குச் சென்றேன்; சென்றும், காமவேதனையைப் பொறுக்க முடியாமையால், அவரோடு கூடிவிட்டேனென்றுரைஎன்பது.

9. I said I would feign shun him ; saying thus I went away; but I embraced him the moment I felt my heart begin to unite with him.



௧0. நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல்.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்.) ¶ நிணத்தைத் தீயின்கண்ணிட்டால் $ அஃதுருகுமாறுபோலத் தங்காதலரைக் கண்டால் நிறையழிந்துருகு *நெஞ்சினை

* "அறைபோகு நெஞ்சுடை யார்க்கு (கீழறுச் செல்லும் நெஞ்சினையுடைய மகளிர்க்கு)" என்று கலித்தொகை (மருதக்கலி - 2) கூறுவென்றது,

† ‡ அது - புலக்கக்கடவேனென்று கருதியது.

¶ நிணம் - கொழுப்பு. $ அஃது - நிணம்.

**யுடையமகளிர்க்கு, அவர் புணராயாமுடிப் * பின்புணராது † அந்நிலையே நிற்கக்கடவேமென்று கருதுதலுண்டாகுமோ, ஆகாது, (எ-று).**

*புணர்தல் - ஈண்டு மிகநணுகுதல் ; எதிர்ப்படலுமாம். புணரவென்பது புணர்ந்தெனத் திரிந்து நின்றது. ‡ யானத்தன்மையே னாகலின், எனக் ¶ கஃதில்லையாயிற்றென்பதாம்.*

**தெளி:—(இதுவுமது.)** (இ - ள்). *நிணந்தீயிலிட்டன்ன-நிணத்தைத் தீயில் இட்டால் அஃது உருகுமாறுபோல, (தமது காதலரைக்கண்டால் நிறையழிந்து உருகும்), நெஞ்சி னார்க்கு - நெஞ்சினையுடைய மகளிர்க்கு, புணர்ந்து - (அவர்) புணர, (யாம்), ஊடி - பிணங்கி, (பின்புணராமல்), நிற்பேமெனல் - (அந்நிலையிலே) நிற்கக்கடவேமென்று நினைத்தல், உண்டோ - உண்டாகுமோ, (உண்டாகாது), (எ - று).*

*புணர்தல் - இங்கு மிகநெருங்குதல்; எதிர்ப்படலுமாம். புணரவென்னும் செயவெனெச்சம் புணர்ந்தென்னும்செய்தெனெச்சமாகத்திரிந்துநின்றது. யானத்தன்மையே னாகலால், எனக்கு அஃதில்லையாயிற்றென்பதாம்.*

*(க - து.) தலைமகள் தோழியொடு தங்காதலரைக்கண்டால் நிறையழிந்துருகும் நெஞ்சினையுடைய மகளிர்க்கு அவரோடு பிணங்கியிருத்தல் முடியாதென்று சொன்னபடி.*

10. Is it possible to stand aloof for those whose hearts melt like fat in the fire, and then embrace?



## 12 - வது அதிகாரம்.

### அவர்வயின் விதும்பல்:—*Mutual desire.*

**பரி:—அஃதாவது சேயிடைப் பிரிவின்கட் டலைமகனுந் தலைமகளும் வேட்கை மிகவினான் ஒருவரை யொருவர் காண்டற்கு விரைதல். தலைமகன் பிரிவும் தலைமகளாற்றாமையும் [] அதிகாரப்பட்டு வருகின்றமையின், இருவரையுங் கூடிய பொதுவாகிய பன்மையாலாற் கூறினார். || பிறரெல்லாம் இதனைத் தலைமகனை நினைந்து தலைமகள்**

---

** பின்பு உணராது என்றும் பாடமுண்டு.*

*† அந்நிலையே - பிணங்கிய நிலையிலேயே.*

*‡ யானத்தன்மையேனாகலின் - யான் நிணந்தீயிலிட்டன்ன நெஞ்சினே னாகலால்.   ¶ அஃது - ஊடிநிற்பேமெனல்.*

*[] அதிகாரப்பட்டு - அதிகாரங்களில் தொடர்ச்சியாகச் சொல்லப்பட்டு.*

*|| பிறரெல்லாம் அவர்வயின்விதும்ப லென்னுமிதனைத் தலைமகனை நினைந்து தலைமகள் காணுதற்கு விரைதல் என்று கூறினார். சுட்டுப்பெயர்*

விதுப்புறலென்றார். * சுட்டுப்பெயர் சொல்லுவார் குறிப்போடு [] கூடிய பொருளுணர்த்துவதல்லது † தானொன்றற்குப் பெயராகா மையானும், ‡ கவி கூற்றாய அதிகாரத்துத் தலைமகன் உயர்த்தற் ¶ பன்மையாற் கூறப்படாமையானும் ⁝ அஃதுரை யன்மையறிக. இதனுட் டலைமகள் கூற்று நிறையழிவா னிகழ்ந்ததாகலின், அவ்வியைபு பற்றி () இது நிறையழிதலின் பின் வைக்கப்பட்டது.

**தெளி:**—*அஃதாவது தூரதேசப் பிரிவின்கண் தலைமகனும் தலைமகளும் ஆசைமிகுதியால் ஒருவரை யொருவர் காணுதற்கு விரைதல். தலைமகன் பிரிவும் தலைமகள் பொறுக்காமையும் அதிகாரப்பட்டு வருகின்றமையால், தலைமகன் தலைமகள் என்னு மிருவரையுஞ் சுட்டி (குறித்து)ப் பொதுவாகிய பன்மைப் (பலர்) பாலால் 'அவர்' என்று சொல்லினார். இதனுள் தலைமகள்சொல் நிறையழிவால் உண்டாயதாகலால், அச் சம்பந்தம்பற்றி, இது நிறையழிதலின்பின் வைக்கப்பட்டது.*

க. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.

*சொல்லுவார் குறிப்போடுகூடிய பொருளை யறிவிப்பதல்லாமல் தான் ஒன்றனுக்குப் பெயராகாமையாலும், கவியினது கூற்றாய அதிகாரத்தில் தலைமகன் உயர்த்துதற் பொருட்டுப் பன்மையா (பலர்பாலா)ற் சொல்லப்படாமையாலும் அஃது உரையாகாதென்க.*

*தலைமகனென்றது பாட்டுடைத் தலைவன் கிளவித்தலைவனென்னு மிருவருள் கிளவித் தலைவனை.*

** சுட்டுப்பெயர் - அவன் அவள் அவர் அது அவை என்னும் சுட்டுப் பெயர்கள். "இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும், வினைக் கொருங் கியலுங் காலந் தோன்றிற், சுட்டுப் பெயர்க்கிளவி முற்படக் கிளவார், இயற்பெயர் வழிய வென்மனார் புலவர்" என்னும் தொல்காப்பியச் சூத்திர மிங்குணர்தற்பாலதாம்.*

*[] கூடிப் பொருளுணர்த்துவதல்லது என்றும் பாடமுண்டு.*

*† தான்-சுட்டுப்பெயர்.*

*‡ கவி-நூலாசிரியன்; கூற்று-சொல்.*

*¶ ஒருமைப்பாலால் "தலைமகற் கறிவுறுத்தல்" "அவன்குறிப்பறிதல்" என்றற் றொடக்கத்தனவாகச் சொல்லப்படுவதன்றிப் பன்மைப்பாலால் தலைமகர்க் கறிவுறுத்தல் அவர் குறிப்பறிதல் என்றற் றொடக்கத் தனவாகச் சொல்லப்படாமையாலும்.*

*⁝ அஃது-பிறரெல்லாங் கூறியவுரை.*

*() இது - அவர்வயின் விதும்பல்.*

*| "தெண்ணீரணிசிவன் சிற்றம்ப லஞ்சிந்தி யாதவரிற், பண்ணீர்மொழியிவ ளைப்பையு ளெய்தப் புனித்தடங்க, ணுண்ணீ ருகவொளி வாடிட நீடுசென் றூர்சென்றநா, ளெண்ணீர் மையினில னுங்குழி யும்விர லிட்டிலே" என்று திருக்கோவையார் கூறுவது மிங்குணர்தற்பாலதாம்.*

[தலைமகள் காண்டல் விதுப்பினாற் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) அவர் நம்மைப் பிரிந்துபோய நாள்கள் சுவரின் கணிழைத்தவற்றைத் தொட்டு எண்ணுதலான் என் விரல்கடேய்ந்தன; அதுவேயன்றி அவர் வரும் வழிபார்த்து என் கண்களும் ஒளியிழந்து புல்லியவாயின; இவ்வாறாயும் அவர் வரவுண்டாயிற்றில்லை, (எ-று).

* நாள்—ஆகுபெயர் புல்லியவாதல்-நுண்ணிய காணமாட்டாமை. ஒற்றவென்பது ஒற்றியெனத் திரிந்து நின்றது இனியான் காணுமா றென்னை யென்பதாம். நாளெண்ணலும் வழிபார்த்தலும் ஒருகாற் செய் தொழியாது இடையின்றிச் செய்தலான், † விதுப்பாயிற்று.

தெளி:—[தலைமகள் தலைமகனைக் காண்டற்கு விரைதலால் சொல்லி யது.] (இ-ள்.) விரல்-(என்) விரல்கள், அவர் சென்றநாள்-அவர் (நமமைப் பிரிந்து) போயநாள்களை, (சுவரில் குறிவைத்த அக்குறிகளை), ஒற்றி - தொட்டெண்ணுதலால், தேய்ந்த - தேய்ந்தன, (அதுவேயல்லாமல்), கண் ணும்-(என்) கண்களும், வாளற்று-(அவர்வரும் வழிபார்த்து) ஒளியிழந்து, புற்கென்ற-புல்லியவாயின, (இவ்வாறாயும் அவர்வரவு உண்டாயிற்றில்லை).

நாள்-காலவாகுபெயர். புல்லியவாதல்-(கண்கள்) நுண்ணிய பொருள் களைக் காணமாட்டாமை காரணப்பொருளில் வந்த ஒற்றவென்னுஞ் செய வெனெச்சம் ஒற்றியெனச் செய்தெனெச்சமாகத் திரிந்து நின்றது. இனி யான் (காதலரைக்) காணும் விதம் யாதென்பதாம். (தலைமகள்) நாளெண் ணலையும், வழிபார்த்தலையும், ஒருகாற்செய்தொழியாமல் எப்போதுஞ் செய்தலால், விதுப்பாயிற்று. புற்கென்ற, தேய்ந்த என்பன அன்சாரியை பெறாத வினைமுற்றுக்கள்; அன்சாரியை பெற்றால், புற்கென்றன தேய்ந் தன என வரும்.

(க - து.) தலைமகள் காதலர் பிரிந்து சென்றநாள்களைச் சுவ ரின்கண் குறிவைத்தெண்ணுதலால் எனது விரல்கள் தேய்ந்து போயின; அவர் வரும் வழியைப் பார்த்தலால் எனது கண்கள் ஒளியிழந்து போயின என்றாளென்பது.

1. My fingers have worn away with noting (on the wall) the days since he left me forlorn, while my eyes have lost their lustre and begin to fail (with expecting his return).



உ. இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து.

---

* நாள் என்னும் காலப்பெயர் அந்நாள்களிற் சுவரிற்செய்த குறிகளை யுணர்த்துதலால், காலவாகுபெயராம்.

† விதுப்பாயிற்று-காண்டற்கு விரைதலாயிற்று.

[* ஆற்றாமை மிகுதலின் இடையின்றி நினைக்கற்பாலையல்லை; சிறிது மறக்கல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ- ள்.) விளங்கா நின்ற விழையினையுடையாய்! காதலரை இன்று யான் மறப்பேனாயின், மேலுங் காரிகை யென்னை நீப்ப என்றோள்கள் வளைகழல்வனவாம், (எ-று).

இலங்கிழா யென்பது † இதற்கு நீ யாதும் பரியலை யென்னுங் குறிப்பிற்று. இன்று - யானிறந்து படுகின்றவின்று. ‡ மேலும்-மறுபிறப்பினும். எச்ச உம்மை விகாரத்தாற்றொக்கது. () நீப்பவென்பது நீத்தெனத்திரிந்து நின்றது. கழியுமென்னும் இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின் மேனின்றது. ¶ இவ்வெல்லைக்கணினைந்தால், மறுமைக்கண் அவரை யெய்தியின்புறலாம்; அதனான் மறக்கற்பாலேனல்லே னென்பதாம்.

தெளி:—(ஆற்றாமை மிகுதலால் எப்பொழுதுங் காதலரை நினையாதே; சிறிது மறத்தல் வேண்டும் என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.) (இ - ள்.) இலங்கிழாய் - விளங்காநின்ற ஆபரணத்தையுடையாய், (காதலரை), இன்று - (இறந்துபடுகின்ற) இந்நாளில், மறப்பின் - (யான்) மறப்பேனாயின், மேல் - மறுபிறப்பிலும், காரிகை - அழகானது, நீத்து - (என்னைவிட்டு) நீங்க, என்றோள் - எனது தோள்கள், கலங்கழியும் - வளையல்கள் கழலப்பெறுவனவாம், (எ - று).

இலங்கிழாயென்பது தோழியே! இதற்கு நீ யாதும் பரிவின்றாயில்லை யென்னுங் குறிப்பின்கண் வந்தது. மேலும் என்னும் இறந்தது தழுவிய வெச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. நீப்ப என்னும்

---

* "காப்புக்கை மிக்குக் காமம் பெருகினும்" என்னும் இறையனாரகப் பொருள் சூத்திரவுரையில் "ஆற்றாமையாவது பிறிதெவ்வுணர்வுமின்றி ஆற்றாமைதானேயாவது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

† இதற்கு - அழகு நீங்கத் தோள்வளை கழலுதற்கு.

‡ மேலும் என்பது இன்றுமன்றி என்பதைத் தழுவிநின்றது.

() காரிகையின் வினையாய நீத்தென்னும் செய்தென்னெச்சம், கலத்தின் வினையாய கழியுமென்பதைக்கொண்டு முடிதற்கு விதியில்லாமையால், 'நீப்பவென்பது நீத்தெனத் திரிந்து நின்றது' என்று கூறப்பட்டது. இறந்தகால வினையெச்சம் தன் வினைமுதலின் வினையையன்றி வேறு வினைமுதலின் வினையைக் கொண்டு முடியாதென்பது இங்குணர்தற்பாலதாம்.

¶ இவ்வெல்லைக்கண்-இறந்துபடுகின்ற இந்நாளில். "குறப்பாவை நின் குழல் வேங்கையம் போதொடு கோங்கம்விராய், நறப்பாடலம்புனை வார் சினை வார்தம்பி ரான்புலியூர், மறப்பா னடுப்பதோர் தீவினை வந்திடிற் சென்றுசென்று, பிறப்பா னடுப்பினும் பின்னுந்துன் னத்தகும் பெற்றியரே" என்று திருக்கோவையார் கூறுவதிங்குணர்தற்பாலதாம்.

செயவெனெச்சம் நீத்தெனச் செய்தெனெச்சமாகத்திரிந்துநின்றது. கழியும் என்னும் இடத்து (தோள்களில்) நிகழ் (இருக்கும்) பொருளின் (வளையல்களின்) தொழில் தோள் கலங்கழியும் என இடத்தின் (தோள்களின்) மேல் நின்றமையால், இஃது இடத்துநிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேலாய வுபசார வழக்காம். இச்சமயத்திற் காதலரை நினைந்தால் மறுமையில் அவரையடைந்து இன்பமடையலாம்; அதனால் மறக்குந் தன்மையுடையேனல்லே னென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியைநோக்கி, காதலரை யான் இன்று மறப்பேனாயின், மேலும் எனதழகு ஒழிவதுடன் என் தோள்களும் மெலிவடையும் என்றனென்பது.

2. O brght jewel bedeck?d maid! If I forget for this one day, my shoulders' beauty will wear away even in the next birth and make my bracelets slip

ஈ. உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) இன்பநுகர்தலை நச்சாது,* வேறலைநச்சி யாந் துணையாதலை யிகழ்ந்து தம்முள்ளந் துணையாகப் போயினார் † அவற்றை யிகழ்ந்து ஈண்டு வருதலை நச்சுதலான், யானிவ்வெல்லையினு முளேனாயினேன், (எ - று).

‡ உரனென்பது ஆகுபெயர். ¶ அந்நசையா னுயிர் வாழாநின்றேன்; அஃதில்லையாயின், இறந்துபடுவ லென்பதாம்.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) உரனசைஇ - (இன்பமனுபவித்தலை விரும்பாமல்) வெல்லுதலை விரும்பி, உள்ளந் துணையாக - (நாம் துணையாதலை யிகழ்ந்து தம்) மனவெழுச்சி துணையாக, சென்றார் - போயினார், வரனசைஇ, (அவற்றை இகழ்ந்து இங்கு) வருதலை விரும்புதலால், இன்னும் * (யான்) இவ்வெல்லையினும், உளேன் - உளேனாயினேன், (எ - று).

உரன் - கருவியாகுபெயர். அவ்விருப்பத்தால் உயிர்வாழ்கின்றேன்; அவ்விருப்பமில்லையாயின், இறந்துபடுவே னென்பதாம்.

* வேறலை-(பகைவரை) வெல்லுதலை. † அவற்றை-வேறலையும் ஊக்கத்தையும்

‡ உரன் (வலி) என்னுங் கருவியின்பெயர் அதன்காரியமாகிய வேறலை (வெல்லுதலை) யுணர்த்துதலால், கருவியாகுபெயராம்.

¶ அந்நசையான்-உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார் வருதலை விரும்புதலால்.

(க - து.) தலைமகள் தோழியைநோக்கி, பகைவரை வெல்லுதலை விரும்பிச் சென்ற காதலர் இங்கு வருதலை விரும்புதலால், யானின்னு முயிரோடிருக்கின்றே னென்றுசொன்பது.

3. I sustain my life yet by longing for the arrival of him who has gone out intent on victory with valour as his guide.



ச. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகோ டேறுமென் னெஞ்சு.

(இதுவுமது.)

பரி:—(இ - ள்.) நீங்கிய காமத்தராய் நம்மைப் பிரிந்துபோயவர் † மேற் கூடிய காமத்துடனே நங்கண் வருதலை நினைந்து, என்னெஞ்சு வருத்தமொழிந்து, ‡ மேன்மேற் பனைத்தெழா நின்றது, (எ-று).

() வினைவயிற் பிரிவுழிக் காமவின்ப நோக்காமையும் அது முடிந்துழி ¶ அதுவே நோக்கலுந் தலைமகற் கியல்பாகலின், கூடிய காமமொ டென்றான். [] ஒடுவுருபு விகாரத்தாற் றொக்கது. ⁝ கோடுகொண்டேறலாகிய மரத்தது தொழில் நெஞ்சின்மே லேற்றப்பட்டது கொண்டென்பது குறைந்து நின்றது. | அஃதுள்ளிற்றிலேனாயின், இறந்துபடுவ லென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) பிரிந்தார் - (நீங்கிய காமத்தராய் நம்மைப்) பிரிந்துசென்ற காதலர், கூடிய காமம் - (மேல்) கூடிய காமத்துடனே, வரவுள்ளி - (நம்மிடத்து) வருதலை நினைந்து, என்னெஞ்சு - எனது நெஞ்சு, (வருத்தமொழிந்து), கோடுகொடேறும் (மேன்மேலும்) கிளைத்தெழுகின்றது, (எ - று).

---

† மேல்-பிரிதற்குமுன்.

‡ மேன்மேற் பனைத்தெழுதல்-மிகவுமுற்சாக முடையதாதல்.

() வினைவயிற்பிரிவு - வேந்தற்குற்றுழிப்பிரிவாம்; அஃதாவது * ஒரு வேந்தனுக் கொருவேந்தன் றொலைந்துவந்தடைந்தால், அவனுக்குதவி செய்யப் பிரிதலாம்.

¶ அதுவே-காமவின்பத்தையே.

[] காமமொடு என்னும் அடைமொழிப் பொருளதாகிய ஒடுவுருபு செய்யுள் விகாரத்தாற் றொக்குநின்றது.

⁝ கோடுகொண்டேறலாகிய மரத்ததுதொழிலை நெஞ்சின்மேலேற்றிக் 'கோடுகொ டேறுமென் னெஞ்சு' என்று கூறினமையின், இஃது ஒருபொருளின்வினை மற்றொருபொருளின் வினையாய வுபசாரவழக்காம்.

| அஃது-பிரிந்தார் வருதலை.

வினைவயிற் பிரியுமிடத்துக் காமவின்ப நோக்காமையும் அவ்வினை முடிந்தவிடத்து அதுவே நோக்கலும், தலைமகனுக்கு இயல்பாகலால், கூடிய காமமொடு என்றாள். ஒடுவுருபு விகாரத்தால் தொக்குநின்றது. கோடுகொண்டேறலாகிய (கிளைத்துக் கொண்டெழுதலாகிய) மரத்தினது தொழில் நெஞ்சின்மேல் ஏற்றப்பட்டது. கொண்டு என்பது கொடு என ணகரவொற்றுக் குறைந்துநின்றது. அதனை நினையாமற் போவேனாயின், யான் இறந்துபடுவேனென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியை நோக்கி, நம்மைவிட்டுப் பிரிந்து சென்ற காதலர் நம்மிடத்தாசை யுடையவராய் வருவாரென் றெண்ணி, என் மனம் வருத்தமொழிந்து மேலும் மேலுங் கிளைத்தெழாநின்றது என்றாளென்பது.

4. My heart rid of its sorrow swells with rapture at the thought of my absent lover returning with his love.



ரு. காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி
னீங்குமென் மென்றோட் பசப்பு.

[தலைமகன் வரவுகூறி ஆற்றுயாய்ப் பசக்கற்பாலை யல்லையென்ற தோழிக்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) என் கண்களாரும்வகை என் கொண்கனை யான் காண்பேனாக ; அங்ஙனங் கண்டபின், என் மெலிவிய தோளின்கட் பசப்புத் தானே நீங்கும், (எ-று).

காண்கவென்பது ஈண்டு வேண்டிக்கோடற்பொருட்டு. * அது வேண் டுமென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. கேட்ட துணையா னீங்காதென்பதாம்.

தெளி:—(தலைமகனது வரவைக்கூறிப் பொறுக்க முடியாதவளாய்ப் பசலைநிற மடையாதே என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.) (இ - ள்.) கண்ணார - (என்) கண்க ளாரும்வகை, கொண்கனை - (என்) காதலனை, காண்க - (யான்) காண்பேனாக,கண்டபின் - (அவ்வாறு) கண்ட பின்பு, என்மென்றோள் - எனது மெல்லிய தோளில், பசப்பு - நிறவேறு பாடு, நீங்கும் - (தானே) நீங்கும், (எ - று).

காண்க வென்னும் வியங்கோள்வினைமுற்று இங்கு வேண்டிக்கொள் ளுதற்பொருளில் வந்தது அது வேண்டுமென்பது தோன்றநின்றமை யால், மன் ஒழியிசைப் பொருளில் வந்தது. தலைமகன் வரவைக் கேட் டவளவால் என்தோளின்கட் பசப்பு நீங்காதென்பதாம்.

---

* அதுவேண்டும் – கொண்கனைக் காண்டல் வேண்டும்.

(க - து.) தலைமகள் தோழியைநோக்கி,காதலனையான்கண்ட பிறகே என் தோளின்கண் பசப்பு ஒழியுமென்று சொன்னது.

5. Let me see my lover and sate these longing eyes, and then will vanish the pallor of my wasted shoulders.

---

சு. வருகமற் கொண்கனொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) இத்துணை நாளும் வாராக்கொண்கன் ஒருநாள் என்கண் வருவானாக; வந்தாற் பையுளைச் செய்கின்ற * இந்நோயெல்லாங் கெட † அவ்வமிழ்தத்தை ‡ வாயில்களைந்தானும் பருகக்கடவேன், (எ-று).

வருக வென்பதற்கும் மன்னென்பதற்கும் ¶ மேலுரைத்தவாறே கொள்க. $ அக்குறிப்பு அவ்வொருநாளைக்குள்ளே இனி வரக்கடவநோய்களுங் கெடுப்பலென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) கொண்கன் - (இவ்வளவு நாளும் வாராத) காதலன், ஒருநாள் வருக - ஒருநாள் (என்னிடத்து) வருவானாக, (வந்தால்), பைதனோயெல்லாம் - துன்பத்தைச்செய்கின்ற இந்நோயெல்லாம், கெட - நீங்க, (அவ்வமிர்தத்தை), பருகுவன் - (இந்திரியங்களைந்தானும்) நுகரக்கடவேன், (எ - று).

வருகவென்பதற்கும் மன்னென்பதற்கும் முன்சொல்லியபடியே கொள்க. அக்குறிப்பு அவ்வொருநாளைக்குள்ளே இனிவரக்கடவனவாய நோய்களையுங் கெடுப்பனென்பதாம். நுகர்தல்-அனுபவித்தல்.

---

* இந்நோயெல்லாம் - இக்காமநோயெல்லாம்.

† அவ்வமிழ்தத்தை - கொண்கனாகியவம்மருந்தினை.

‡ வாயில்களைந்தானும் - மெய், வாய், கண், மூக்கு செவியென்னும் இந்திரியங்களைந்தாலும். "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், மொண்டொடி கண்ணே யுள" என்னுங் குறளுமிங்குக் கவனிக்கற்பாலதாம்.

¶ மேலுரைத்தவாறேகொள்க - இவ்வதிகாரத்தின் ஐந்தாவது குறளின் விசேடவுரையிற் கூறியபடியே 'வருக' என்னும் வியங்கோள் வினைமுற்று வேண்டிக்கோடற்பொருளிலும், மன் என்னுமிடைச்சொல் அது (கொண்கன்வருதல்) வேண்டும் என்னும் ஒழியிசைப்பொருளிலும் வந்தனவென்றுகொள்க.

$ அக்குறிப்பு - கொண்கன் ஒருநாள்வருக என்னு மக்குறிப்பு.

(க - து.) தலைமகள் தோழியை நோக்கி, காதலன் என்னிடத்து ஒருநாள் வருவானாக; வந்தால் அவனைக்கூடி என் காமநோயெல்லாவற்றையுங் கெடுப்பேனென்றுளென்பது.

6. Let my lover return to me one day; and then will I drink the nectar so as to drive away all the agonising sorrows.

---

எ. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) கண்போற் சிறந்த கேளிர் வருவாராயின், அவர் வரவு நீட்டித்தமைநோக்கி யான் புலக்கக்கடவேனோ, அன்றி என்னுற்றமை நோக்கிப் புல்லக்கடவேனோ, அவ்விரண்டும் வேண்டுதலான் * அவ்விருசெயல்களையும் விரவக்கடவேனோ, யாது செய்யக்கடவேன்? (எ - று).

புலவியும் புல்லலும் ஓர் பொழுதின்கண் விரவாமையிற் 'கலப்பேன்கொல்' என்றாள் † மூன்றனையுஞ் செய்தல் கருத்தாகலின், விதும்பாயிற்று. ‡ இனிக் கலப்பேன்கொல் என்பதற்கு ஒரு ¶ புதுமை செய்யாதுபிரியாதநாட்போலக் கலந்தொழுகுவேனோ வென்றுரைப்பாருமுளர்.

தெளி:—(இ - ள்.) [இதுவுமது.] கண்ணன்ன கேளிர் - கண்போற் சிறந்த காதலர், வரின் - வருவாராயின், புலப்பேன் கொல் - (அவர் வரவு தாமதித்தமையைக் குறித்து யான்) பிணங்கக்கடவேனோ, புல்லுவேன் கொல்-(அல்லாமல் எனது ஆற்றாமையைக்குறித்துச்) தழுவக்கடவேனோ, கலப்பேன்கொல் - (புலத்தலும் புல்லுதலுமாகிய அவ்விரண்டும் வேண்டுதலால் அவ்விரு செயல்களையும்) கலக்கக்கடவேனோ, (யாது செய்யக் கடவேன்), (எ - று).

ஓ - அசைநிலை. பிணங்குதலும் தழுவுதலும் ஓர் பொழுதில் கலத்தல் கூடாமையால் 'கலப்பேன் கொல்' என்றாள். மூன்றனையும் செய்தல் கருத்தாகலால், (தலைமகள் தலைமகனைக்) காண்டற்கு விரைதலாயிற்று.

---

* அவ்விரு செயல்களையும் - புலத்தல் (பிணங்குதல்), புல்லல் தழுவுதல்) என்னு மவ்விருசெயல்களையும்.

† மூன்றனையும்-புலத்தல், புல்லல், கலத்தல் என்னும் மூன்று தொழிலையும்.

‡ இனிக் கலப்பேன்கொல் என்பதற்கு ஒரு புதுமை செய்யாமல் பிரியாதநாள்போலக் கூடியொழுகுவேனோ என்றுரை கூறுவாருமுண்டு.

¶ புதுமை - ஊடலுடையவள்போன்று நடித்தல்.

(க - து.) தலைமகள் தோழியை நோக்கி, காதலர் வந்தால், யான் புலத்தல, புல்லல், கலத்தலென்பனவற்றுள் யாது செய்யக் கடவேன் என்றாளென்பது.

7. On the return of him who is as dear as my eyes, shall I be displeased (with him), or yield myself, or do both? (What shall I do?)



அ. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து.

[ * வேந்தற் குற்றுழிப் பிரிந்த தலைமகன் வினைமுடிவு நீட்டித் துழித் தலைமகளை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.]

பரி:—(இ-ள்.) வேந்தன் வினைசெய்தலைப புரிந்து வெல்வானாக; யாமும் மனைவியைச் சென்று கூடி ஆண்டை மாலைப்பொழுதிற்கு விருந்தயர்வோமாக, (எ - று).

† மனையென்பது ஈண்டாகு பெயர்; ‡ "மங்கலமென்ப மனைமாட்சி' என்புழிப்போல. வினைசெய்தற்கண் வந்த மாலைப்பொழுதிற்கு எதிர் கோடல் அலங்கரித்தல் () முதலிய வின்மையின், மனைகலந்து மாலைக்கு விருந்தயர்கம் என்றான். நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது இது வினைமுடியா முன் கூறலான் விதுப்பாயிற்று. $ பிறரெல்லாம் இதனைத் தலைமகள் கூற்றாக்கி யுரைத்தார்; தலைமகளைக் கூறாது வேந்தன் வெல்க என்றும், மனைகலந்து என்றும், மாலைப் பொழுதின்கண் விருந்தயர்கம் என்றும் வந்த அவ்வுரைதானே | அது கூடாமைக்குக கரியாயிற்று.

* "வேந்தற் குற்றுழிப் பிரிவென்பது ஒரு வேந்தனுக் கொருவேந் தன் றொலைந்துவந் தடைந்தால், அவனுக்குதவி செய்யப் பிரியா நிற்றல்" என்று திருக்கோவையா ருரையிற் கூறப்பட்டிருக்கின்றது.

† மனையென்னு மிடப்பெயர் அம்மனையி லிருப்பவளை யுணர்த்துத லால், இடவாகுபெயராம்

‡ திருக்குறள்-வாழ்க்கைத் துணைநலம் - 10. இதன்பொருள்—(ஒருவ னுக்கு) நன்மையென்று சொல்லுவர் (அறிந்தோர்) மனையாளது நற்குண நற்செய்கைகளை என்பது.

() முதலிய என்றமையின், மஞ்சளரிசி தூவல், நறும்புகை காட்டல், விளக்கிடல், கருப்பூர மேற்றல் முதலியவற்றையுங் கொள்க.

$ பிறரெல்லாம் இக்குறளைத் தலைமகள் வார்த்தையாக்கிக் கூறினார்; தலைமகளைக் கூறாமல் வேந்தன் வெல்க என்றும், மனைகலந்து என்றும், மாலைப்பொழுதின்கண் விருந்து செய்வோம் என்றும் வந்த அவ்வுரையே அது கூடாதென்பதற்குச் சாட்சியாயிற்று.

| அது - தலைமகள் கூற்றென்பது.

தெளி:—[வேந்தற்குற்றுழிப் பிரிந்த தலைமகன் வினை முடிவு நாம நித்த விடத்துத் தலைமகளை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.] (இ-ள்.) வேந்தன் - அரசன், வினைகலந்து - வினைசெய்தலைவிரும்பி, வென்றீக - வெல்வானாக, (யாமும்), மனைகலந்து - மனைவியைச் (சென்று) கூடி, மாலை - (அவ்விடத்து) மாலைப் பொழுதிற்கு. விருந்துஅயர்கம் - விருந்தினைச் செய்யக்கடவோமாக, (எ - று)

மனையென்பது இங்கு இடவாகுபெயராம். வினைசெய்தற்கண் வந்த மாலைப்பொழுதிற்கு எதிர்கொள்ளுதல் அலங்கரித்தல் முதலியன இல்லாமையால், மனைகலந்து மாலைக்கு விருந்தயர்கமென்றான். இது (தலைமகன்) வினைமுடியாத முன் சொல்லுதலால் (அவன் தலைமகளைக்) காண்டற்கு விரைதலாயிற்று. மாலைக்கு என்னும் நான்கனுருபு செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. வினை-போர்த்தொழில்.

(க - து.) தலைமகன் அரசன் பகைவரைப் போர்செய்து வெல்வானாக; யான் மனைவியைச் சென்று கூடி மாலைப்பொழுதிற்கு விருந்துசெய்வேனாக என்றானென்பது.

8. Let the king fight and gain (victories); but let me go home and be united to my wife and feast this evening.



௯. ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.

[இதுவுமது.]

பரி:—(இ- ள்.) சேணிடைச் சென்றதங்காதலர் மீண்டுவரக் குறித்த நாளை யுட்கொண்டு * அது வருந்துணையும் உயிர்தாங்கி வருந்து மகளிர்க்கு ஒருநாள் பலநாள் போல நெடிதாகக்காட்டும்,(எ-று).

ஏழென்பது அதற்குமேலாய மிக்கபன்மை குறித்து நின்றது; "† ஒருவர் கூறை யெழுவ ருடுத்து" என்றாற்போல. தலைமகள் வருத்தம் ‡ பிறர்மேலிட்டுக் கூறியவாறு. ¶ இதனான் இதுவுந் தலைமகள் கூற்றாகாமையறிக. இருநாளென்று பாடமோதுவாருமுளர்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) சேட்சென்றார் - தூரதேசத்திற் சென்ற (தமது) காதலர், வருநாள்வைத்து—(திரும்பி) வரக்குறித்தநாளை

* அது - மீண்டுவரக் குறித்தநாள்.

† இதன்பொருள்—ஒருவரது ஆடையைப் பலருடுத்தி என்பது.

‡ பிறர்மேலிட்டு-தங்காதலரைப்பிரிந்துள்ள பிறமகளிர்மேல்வைத்து.

¶ இதனால் இக்குறளும் தலைமகள் வார்த்தையாகாமையை யறிந்து கொள்க. எழுநாள் என்பதை இருநாள் என்று பாடங் கூறுவாருமுண்டு.

உட்கொண்டு, ஏங்குபவர்க்கு - (அது வருமளவும் உயிரைத்தாங்கி) வருந்தும் மகளிர்க்கு, ஒருநாள் எழுநாள்போல் - ஒருநாள் பலநாள்போல, செல்லும்-நெடிதாகக்காட்டும், (எ - று).

ஏழென்பது அவ்வேழற்குமேலாய மிக்கபன்மையைக் குறித்து நின்றது. (தலைமகன்) தலைமகளது வருத்தத்தைப் பிறர்மேலிட்டுச் சொல்லியவாறும்.

(க - து.) தலைமகன் தங்காதலரைப் பிரிந்து அவர்வரும்நாளை நோக்கி வருந்தும் மகளிர்க்கு ஒருநாள் பலநாள் போல நெடிதாகக் காட்டும் என்றுனென்பது.

9. To those who watch and yearn for the day of return of lovers gone afar, one day will seem as long as seven days.



ம். பெறினென்னும் பெற்றக்கா லென்னு முறினென்னு
முள்ள முடைந்துக்க் கால.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காதலி நம்பிரிவினை யாற்றாது உள்ளமுடைந் திறந்து படடவழி, நம்மைப் பெறக்கடவளாறலேன், அதுவன்றியே பெற்றலேன், அதுவன்றியே மெய்யுறக்கலந்தாற்றனேன், இவை யொன்றனும் பயனில்லை, (எ - று).

* இம்மூன்றும் † உடம்பொடு புணர்த்திக் கூறப்பட்டன ; ‡ அதன்மேலும் ¶ முன்னை வழக்குண்மையின். § அதற்கு முன்னே யான் செல்ல

---

* இம்மூன்றும் - பெறினென்னும், பெற்றக்காலென்னும், உறினென்னும என்னு மிம்மூன்றும்.

† உடம்பொடு புணர்த்தல் என்பது யுக்தி வகையினுள் ஒன்று. ஒருவன் கூறவேண்டிய அருத்தத்தை வெளிப்படையாகக்கூறாது தான்கூறுவதன் குறிப்பினால் விளங்கச்செய்தல் உடம்பொடு புணர்ததலாம். ஒரு நிமித்தம பற்றிக்காலம் நீட்டிக்கப் பிரிந்துசென்ற தலைமகன்தான் வருதற்கு முன்னரே தலைமகள் இறந்துபடும் வழக்குண்மையை வெளிப்படையாகக்கூறாது பெறினென்னும், பெற்றக்காலென்னும், உறினென்னும் என்று தான் கூறுவதன் குறிப்பினால் விளங்கச்செய்தமையைக் கணடுணர்க. 'உள்ள முடைந்துக்கக் கால்' என்பதனை உடம்பாகநிறுத்தி, அதனோடு பெறினென்னும், பெற்றக்காலென்னும, உறினென்னும் என்னுமிம்மூன்றும புணர்த்திக்கூறப்பட்டனவென்பதுமொக்கும்.

‡ அதன்மேலும் - ஆற்றாமைமேலும்

¶ முன்னை வழக்குண்மையின் - தலைமகன் வருதற்குமுன்னே தலைமகள் இறந்துபடும் வழக்க மிருத்தலால்.

§ அதற்குமுன்னே - காதலி இறந்துபடுதற்கு முன்னே.

வேண்டுமென்பது கருத்தாகலின், விதுப்பாயிற்று. † இது தலைமகன் கூற்றுயவழி இரங்கலாவதல்லது விதுப்பாகாமை யறிக.

தெளி:—(இதுவுமது.) (இ - ள்). உள்ளமுடைந்து (காதலி நம் பிரிவினைப் பொறுக்காமல்) மனமுடைந்து, உக்கக்கால் - இறந்தவிடத்து, பெறினென்னும் —(நம்மைப்) பெறக்கடவளானால் என்னபயன், பெற்றக் காலென்னும் - (அதுவன்றியே) பெற்றாலென்ன பயன், உறினென்னும்- (அதுவன்றியே) மெய்யுறக் கலந்தாற்றான் என்னபயன், (இவை யொன் றாலும் பயனில்லை), (எ-று).

இம்மூன்றும் உடம்பொடு புணர்த்திச் சொல்லப்பட்டன; அதன் மேலும் முன்னே வழக்கமிருத்தலால். அதற்கு முன்னே யான் செல்ல வேண்டுமென்பது கருத்தாகலால் (தலைமகன் தலைமகளைக்) காண்டற்கு விரைதலாயிற்று. மெய்யுற - உடம்போடு பொருந்த

(க - து.) தலைமகன் காதலி எனது பிரிவினைச் சகியாம லிற ந்துபடுவதற்கு முன்னமே, யான் விரைந்துசெல்ல வேண்டுமென் றானென்பது.

10. What good will my return, the meeting, the embrace worth, if after my wife has died of a broken heart.



## 13 - வது அதிகாரம்.

### குறிப்பறிவுறுத்தல்:—The reading of the feelings.

பரி:—அஃதாவது தலைமகன், தலைமகள், தோழியென்றிவர் ஒரு வர் குறிப்பினை யொருவர்க் கறிவுறுத்தல். ‡ இது பிரிந்துபோய தலை மகன் வந்து கூடியவழி நிகழ்வதாகலின், அவர்வயின் விதும்பலின் பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது தலைமகன், தலைமகள், தோழி என்ற இவர்கள் ஒருவர் குறிப்பினை ஒருவர்க்கு அறிவுறுத்தலாம். இது பிரிந்துபோய தலை மகன் வந்து கூடியவிடத்து உண்டாவதாகலால், அவர்வயின்விதும்பலின் பின்வைக்கப்பட்டது.

க. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்கண்
ணுரைக்க லுறுவதொன் றுண்டு.

† இக்குறள் தலைமகள் வார்த்தையாயவிடத்து இரங்கலா (வருந்துத லா)வதல்லாமல் விதுப்பாகாமையை யறிந்துகொள்க என்பதாம்.

‡ இது - குறிப்பறிவுறுத்தல்.

[பிரிந்துகூடிய தலைமகன் வேட்கை மிகவினாற் புதுவது பன்னாளும் பாராட்டத் தலைமகள் இது வொன்றுடைத்தெனை வஞ்சியவழி அதனை யவள் குறிப்பானறிந்து, அவனவட்குச்சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நீ சொல்லாது மறைத்தாயாயினும், † அதற்குடம் படாதே நின்னைக் கைகடந்து நின் னுண்கண்களே எனக்குச் சொல்ல லுறுவதோரு காரியமுண்டா யிராநின்றது, இனி யதனை நீயே தெளி யச் சொல்வாயாக, (எ - று).

*காத்தல் - நாணுனடக்குதல். தன்கட்பிரிதற் குறிப்புளதாகக் கருதி வேறுபட்டாளது வேறுபாடு குறிப்பானறிந்து அவட்குத் தன்பிரியாமைக் குறிப்பறிவுறுத்தவாறு.*

தெளி:—[பிரிந்துவந்து கூடிய தலைமகன் ஆசைமிகுதியால் புணர்ச் சித் தொழிலைப்புதுவது புதுவதாகப் பலநாளும் பாராட்ட அதுகண்டு தலை மகள் இஃதொரு கருத்துடையதென்று அஞ்சியவிடத்து அவ்வஞ்சியதை அவள்குறிப்பால் அறிந்து, அவன் அவளுக்குச சொல்லியது.] (இ - ள்.) *காப்பினும்-(நீ சொல்லாது) மறைத்தாயாயினும், ஒல்லா-(அதற்கு) உடம் படாமலே, கையிகந்து-(உன்னைக்) கைகடந்து, நின்னுண்கண்-உன் (மை) உண்டகண்களே, உரைக்கலுறுவதொன்று - (எனக்குச்) சொல்லலுறுவ தொரு காரியம், உண்டு - உண்டாயிராநின்றது, (இனி அதனை நீயே தெளியச சொல்வாயாக), (எ - று).*

*காத்தல் - (தலைமகள் தானஞ்சியதை) நாணல் அடக்குதல். (தலை மகன்) தன்னிடத்துப்பிரிதற்குறிப்பு இருக்கின்றதாக நினைந்து வேறுபட்ட காதலியினது வேறுபாட்டைக் குறிப்பால் அறிந்து அவளுக்குத் தன்பிரியா மைக்குறிப்பை அறிவுறுத்தியவாறும். அறிவுறுத்தல்-தெரிவித்தல்.*

(க-து.) தலைமகன் காதலியே! நீ சொல்லாது மறைத்தாயா யினும் சொல்லவேண்டுவதொன்றனை யுன்கண்களே யெனக்குச் சொல்லுங் குறிப்பை யுடையனவாயிருக்கின்றனவென்றான.

1. Though you would hide (your feelings), your painted eyes, disdaining all restraint, tell me something.

உ. கண்ணிறைந்த காரிகைக காமபேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது

[நாணல் அவள் ‡ அது சொல்லாளாயவழி அவன் தோழிக்குச் சொல்லியது.]

† அதற்கு - நீ சொல்லாது மறைத்தற்கு.

‡ அது - (தான்) அஞ்சியது.

பரி:—(இ-ள்.) என் கண்ணிறைந்த அழகினையும் வேயையொத்த தோளினையுமுடைய நின் பேதைக்குப் * பெண்பாலரிடத்து நிறைந்த மடமை அவ்வளவன்றி மிகுந்தது, (எ - று).

இலதாய பிரிவினைத் தன்கணேற்றி அதற்கஞ்சுதலான், ‡ இவ்வாறு கூறினான்.

தெளி:—[நாணத்தால் அவள் அதனைச் சொல்லாதவளாயவிடத்து அவன் தோழிக்குச் சொல்லியது.] (இ-ள்.) கண்ணிறைந்த காரிகை-(என்) கண்ணிறைந்த அழகினையும், காம்பேர்தோள் - மூங்கிலையொத்த தோளினையும், (உடைய), பேதைக்கு - (உன்னுடைய) மாதுக்கு, பெண்ணிறைந்த நீர்மை - பெண்பாலாரிடத்து நிறைந்த அறியாமை, பெரிது - (அவ்வளவன்றி) மிகுந்தது, (எ - று)

(தலைமகன் தன்னிடத்து) இலதாய பிரிவினைத் தலைமகள் தன்னிடத்து ஏற்றி அப்பிரிவிற்கு அஞ்சுதலால், இப்படி சொல்லினான்.

(க - து.) தலைமகன் தோழியை நோக்கி, உன் மாதிற்கு மடமை அளவுகடந்திருக்கின்றதென்றான் என்பது

2. Unusually great is the woman's modesty of your maid whose beauty fills my eyes and whose shoulders resemble the bamboo stem.

கூ. மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) கோக்கப்பட்ட பளிக்குமணியகத்துக் கிடந்து புறத்துப் புலனாநூல்போல இம்மடந்தைய தணியகத்துக் கிடந்து புறத்துப் புலனாகின்றதோரு குறிப்புண்டு, (எ-று)

அணி—புணர்ச்சியானாய வழகு; அதனகத்துக் கிடத்தலாவது அதனோடு உடனிகழ்தற் பாலதன்றியைந்து உடனிகழ்தல் † அதனை யானறிகின்றிலேன்; நீ யறிந்து கூறல்வேண்டுமென்பது கருத்து

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) மணியில் - கோக்கப்பட்ட) படிக மணியினுள், (இருந்து), திகழ்தரும் - (புறத்துத்) தோன்றுகின்ற, நூல் போல்-நூலைப்போல, மடந்தை-இம்மடந்தையினது, அணியில்-அழகினுள், (இருந்து), திகழ்வதொன்று-(புறத்துத்) தோன்றுகின்றதாகிய ஒருகுறிப்பு, உண்டு-இருக்கின்றது, (எ-று)

* "நுண்ணுணர்வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே" என்பதிங் குணர்தற்பாலதாம்.

‡ இவ்வாறு கூறினான் - தலைமகன் 'கண்ணிறைந்த ++பெரிது' என்றிவ்வாறு கூறினான். †, அதனை-அக்குறிப்பினை.

அணி-புணர்ச்சியாலாகிய அழகு; குறிப்பு அவ்வழகினு ளிருத்தலா வது அவ்வழகோடு உடனிகழ்வதல்லா திருந்தும் உடனிகழ்தல். அதனை யான் அறிகின்றிலேன்; (தோழியே!) நீ அறிந்து சொல்லல் வேண்டு மென்பது கருத்து.

(க - து.) தலைமகன் தோழியை நோக்கி, என்காதலியின் அழகினுள் ஓர் குறிப்பு விளங்குகின்றது; அதனை நீ யறிந்துகூறல் வேண்டுமென்றான் என்பது.

3 As through the crystal beads is seen the thread on which they are strung, so there gleams something in the beauty of this woman.



௪. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) முகையது முகிழ்ப்பினுளதாய்ப் புறத்துப் புலனா காத நாற்றம்போல நின்பேதை என்னோடு நகக்கருது நகையது முகி ழ்ப்பினுளதாய்ப் புறத்துப் புலனாகாததோர் குறிப்புண்டு, (எ - று).

முகிழ்ப்பு-முதிர்ச்சியாற் * புடைபடுதல். நகை-புணர்ச்சி யின்பத்தா னிகழ்வது.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) முகைமொக்குள் - அரும்பினது முகிழ்ப்பினுள், உள்ளது-உளதாய்ப் (புறத்தில்தோன்றாத), நாற்றம்போல் - வாசனையைப்போல, பேதை - (உன்) மாது, நகைமொக்குள் - (என்னோடு நகைக்கக் கருதுகின்ற) நகையது முகிழ்ப்பினுள், உள்ளது-உளதாய்ப் (புறத் தில் தோன்றாத), ஒன்று-ஒருகுறிப்பு, உண்டு-இருக்கின்றது, (எ-று).

முகிழ்ப்பு-முதிர்ச்சியாற் புடைபடுதல். நகை-புணர்ச்சியின்பத்தா லுண் டாவது. நகையது முகிழ்ப்பு-புன்சிரிப்பு. புறம்-வெளி.

(க - து.) தலைமகன் தோழியை நோக்கி, என் காதலியின் புன்சிரிப்பினுள் வெளியாகாததோர் குறிப்பிருக்கின்றது; அதனை நீ யறிந்துகூறல் வேண்டுமென்றான் என்பது.

4. Like the fragrance that is contained in the opening bud, there is something concealed in the budding smile of this maid.



ரு. செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

* புடைபடுதல்-உப்புதல்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) நெருங்கிய வளைகளை யுடையாள் என்கணில்லாத தோன்றனை யுட்கொண்டு * அது காரணமாக என்னை மறைத்துப் போன குறிப்பு என் மிக்க துயரைத் தீர்க்கு மருந்தாவதோர் தன்றனை யுடைத்து, (எ - று).

உட்கொண்டது-பிரிவு. † கள்ளம் - ஆகுபெயர் மறைத்தற்குறிப்பு - தானுமுடன்போக்குட்கொண்டது. உறுதுயர்-நன்று செய்யத்தீங்குவிளைத லானும் அதுதான் தீர்திறம் பெருமையானும் உளதாயது. மருந்து-அப் பிரிவின்மை தோழியாற் றெளிவித்தல். ‡ நீயதுசெய்தல் வேண்டுமென்ப பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) செறிதொடி - நெருங்கிய வளையல் களையுடையாள், செய்து - (என்னிடத்து இல்லாததொன்றனை) உட் கொண்டு, இறந்த கள்ளம் - (அதுகாரணமாக என்னைமறைத்துப்) போன குறிப்பு, உறுதுயர் - (என்) மிக்கதுயரை, தீர்க்குமருந்தொன்று-ஒழிக்கும் மருந்தாவ தொன்றனை, உடைத்து-உடையது, (எ-று).

உட்கொண்டது-பிரிவு. கள்ளம் - இடவாகுபெயர். மறைத்தற்குறிப்பு-(தலைமகள் தலைமகனுடன்) தானும் உடன்போதற்கு உட்கொண்டது. உறு துயர்-நன்றுசெய்யத் தீங்குவிளைதலாலும் அத்தீங்கு தீர்க்குந்திறம் பெரு மையாலும் உளதாயது. மருந்து - அப்பிரிவில்லாமையைத் தோழியால் தெளியச்செய்தல். (தோழியே) நீ அது செய்தல்வேண்டு மென்பதாம்.

(க-து.) தலைமகன் தோழியை நோக்கி, என் காதலி யென் னிடத்தில்லாத தொன்றனை யுட்கொண்டு சென்ற குறிப்பு என் மிக்கதுயரைத் தீர்க்கும் மருந்தாவதொன்றனையுடைய தென்றான்.

5. The secret wiles of her whose armlets are tight fitting contains a remedy that can cure my great grief.

கசு. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து.

[தலைமகன் குறிப்பறிந்த தலைமகள் ¶ அதனை § அது தெளிவிக்கச்சென்ற தோழிக் கறிவுறுத்தது.]

---

* அது-அப்பிரிவு.

† கள்ளம் (கபடம்) என்னுமிடப்பெயர் அங்குநிகழுங் குறிப்பினை யுணர்த்துதலால், இடவாகுபெயராம்.

‡ நீயது செய்தல்வேண்டும்-தோழியே! நீ யான் பிரியாமையைத் தலை மகளுக்குச் சொல்லி அவளைத் தெளியச் செய்தல் வேண்டும்.

¶ அதனை-தலைமகனது பிரிதற் குறிப்பினை.

§ அது - பிரிதற்குறிப்பு.

பரி:—(இ - ள்.) காதலர் வந்து தம்பிரிவினுறைய துன்பத்தினை மிக வுமாற்றி நாமகிழும் வண்ணங் கலக்கின்ற கலவி இருந்தவாற்றன் மேலு * மத்துன்பத்தினை அரிதாக வாற்றியிருந்து அவரன்பின்மையை நினையுந் தன்மையுடைத்து, (எ-று).

பிரிதற் குறிப்பினாற் செய்கின்றதாகலான், முடிவில் இன்னாதாகா நின்றதென்பதாம்.

தெளி:—[தலைமகனது குறிப்பினையறிந்த தலைமகள் அதனை அது தெளிவிக்கச்சென்ற தோழிக்கு அறிவித்தது.] (இ - ள்.) பெரிதாற்றி - (காதலர்வந்து தமது பிரிவினாலாகிய துன்பத்தை) மிகவும் நீக்கி, பெட்பக் கலத்தல் - (நாம்) மகிழும்வண்ணம் புணருகின்ற புணர்ச்சியானது, அரிதாற்றி - (இருந்தவிதத்தால் மேலும் அத்துன்பத்தை) அரிதாகப்பொறுத் திருந்து, அன்பின்மை-(அக்காதலரது) அன்பில்லாமையை, சூழ்வது-நினையுந்தன்மையை, உடைத்து-உடையது, (எ-று).

(காதலர் புணர்ச்சியைப்) பிரிதற்குறிப்பினால் செய்கின்றதாகலால், (அது) முடிவில் துன்பஞ்செய்வதாகின்றதென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியோடு காதலர்வந்து தம்பிரிவினாலுண்டாகிய துன்பத்தை யொழித்து நாம் மகிழும்படி புணரும் புணர்ச்சியானது இருந்த விதத்தால், மேலும் அவரது அன்பில்லாமையை நினையுந் தன்மையையுடையதென்றாளென்பது.

6. The loving embrace of my lover is capable of sustaining my former grief and meditating on his bereaved love.

எ. தண்ணந் ‡ துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) குளிர்ந்த துறையை யுடையவன் நம்மை மெய் யாற் கூடியிருந்தே மனத்தாற் பிரிந்தமையை அவன் குறிப்பானறிதற் குரிய நம்மினும் இவ்வளைகள் முன்னே யறிந்தன, (எ-று).

† கருத்து நிகழ்ந்ததாகலின் 'தணந்தமை' என்றும், யான் றெளிய வுணர்தற்கு முன்னே தோள்கண் மெலிந்தன வென்பாள் ¶ அதனை வளையே லேற்றி [] அது தன்னை யுணர்வுடைத்தாக்கியுங் கூறினாள்.

---

* அத்துன்பத்தினை - பிரிவினாலாகிய துன்பத்தினை.

‡ துறைவன்-நெய்தனிலத்துத் தலைமகன்.

† கருத்து நிகழ்ந்ததாகலின் - பிரியுமெண்ணமுண்டாயிற்றாகலால்.

¶ அதனை - தோள்களின்மெலிவை.

[] அதுதன்னை - வளையலை.

**தெளி:**—[இதுவுமது.] (இ - ள்.) தண்ணந்துறைவன்-குளிர்ந்த துறையையுடையவன், தணந்தமை-(நம்மை மெய்யால் கூடியிருந்தே மனத்தாற்) பிரிந்தமையை, நம்மினும்-(அவன் குறிப்பால் அறிதற்குரிய) நம்மைப்பார்க்கிலும், வளை-இவ்வளையல்கள், முன்னமுணர்ந்த-முன்னே அறிந்தன, ()

பிரிதற் கருத்து நிகழ்ந்ததாகலால் 'தணந்தமை' என்றும், (தண்ணந்துறைவனது பிரிவினை) யான் தெளிய அறிதற்குமுன்னே தோள்கள் மெலிந்தனவென்பாள் அதனை வளையல்மேலேற்றி 'முன்னமுணர்ந்தவளை' என்று அதனை அறிவுடையதாக்கியுஞ் சொல்லினார். மெய்-உடம்பு.

(க-து.) தலைமகள் தோழியோடு காதலர்பிரிதலை நாம் அறிதற்கு முன்னமே இவ்வளையல்கள் அறிந்துவிட்டனவென்று சொன்னது.

7. My very armlets have understood long before me the mental separation from the lord of this cool shore

அ. நெருநற்றுச் சென்றாரெங் காதலா யாமு
மெழுநாளே மேனி பசந்து.

[இதுவுமது.]

**பரி:**—(இ - ள்.) எங்காதலர் பிரிந்துபோயினார் நெருநற்றே; அப்பிரிவிற்கு யாமும் மேனிபசந்து எழுநாளுடையமாயினேம், (எ-று).

நெருநற்றுச்செய்த தலையளியாற் பிரிவு துணியப்பட்டதென்பாள் 'நெருநற்றுச் சென்றார்' என்றும், * அதனை யையுற்றுச் செல்கின்றது எழுநாளுண்டாகலின் † அன்றே மேனி பசந்ததென்பாள் மேனிபசந்தெழுநாளேம் என்றுங் கூறினாள். இவ்வாற்றாற் றலைமகனது பிரிதற்குறிப்பினை யுணர்த்தி நின்றது.

**தெளி:**—[இதுவுமது.] (இ - ள்.) எங்காதலர்-எமது காதலர், நெருநற்று-நேற்றே, சென்றார்-(பிரிந்து) போயினார், (அப்பிரிவிற்கு), யாமும் —, மேனிபசந்து - உடம்பு நிறவேறுபாடடைந்து, எழுநாளேம் - எழுநாளுடையேமாயினேம், (எ-று).

(காதலர்) நேற்றுச்செய்த தலையளியால் பிரிவு நிச்சயிக்கப்பட்டதென்பாள் 'நெருநற்றுச்சென்றார்' என்றும், அதனைச் சந்தேகித்துச் செல்கின்றது எழுநாள் உண்டாகலால் அன்றே மேனிநிறவேறுபாடடைந்ததென்பாள் மேனிபசந்தெழுநாளேம் என்றும் சொல்லினாள். (சந்தேகித்துச் செல்லும்) இவ்விதத்தால் தலைமகனது பிரிதற்குறிப்பை மேனிபசத்தல் அறிவித்து நின்றது. தலையளி-முகமலர்ந்தினியகூறிப் புணர்தல்.

---

* அதனை - அப்பிரிவை.

† அன்றே-அப்பொழுதே; அஃதாவது காதலரது பிரிவு உண்டாவதற்கு ஏழாவது நாளே.

(க - து.) தலைமகள் தோழியோடு காதலர் நேற்றுப்பிரிந்து போயினர்; என்மேனிபசந்து ஏழுநாளாயிற் றென்றுளென்பது.

8. It was but yesterday that my lover left me; and it is seven days since my body turned sallow (wasting away).

கூ. தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது.

[தலைமகள் குறிப்பறிந்த தோழி அதனைத் தலைமகற் கறிவித்தது.] •

பரி:—(இ-ள்.) * யானது தெளிவித்தவழித் தெளியாது அவர் பிரிய யானிங்ஙிருப்பின் † இவை நில்லாவெனத் தன்றொடியைநோக்கி, ‡ அதற்கேதுவாக ¶ இவை மெலியுமெனத் தன் மென்றோள்களையு நோக்கிப், பின் [] இவ்விரண்டும் நிகழாமல் நீர் நடந்து காத்தல் வேண்டுமெனத் தன்னடியையுநோக்கி, அங்ஙனம் அவள் செய்த குறிப்பு உடன்போக்கா யிருந்தது, (எ - று).

செய்தகுறிப்பு-செய்தற் கேதுவாய குறிப்பு. () 'அஃது' என்றாள்; 'செறிதொடி செய்திறந்த கள்ளம்' என்றானாகலின். (*) பிரிதற் குறிப்புண் டாயின், அஃதழுங்குதல் பயன்.

தெளி:—[தலைமகளது குறிப்பினையறிந்த தோழி அக்குறிப்பினைத் தலைமகனுக்கு அறிவித்தது.] (இ-ள்.) (யான் அதனைத் தெளிவித்த விடத்துத் தெளியாமல் அவர் பிரிய யான் இங்கிருந்தால்) தொடிநோக்கி-(இவை நில்லாவென்று தனது) வளையல்களைப்பார்த்து,மென்றோளுநோக்கி-(அதற்குக்காரணமாக இவை மெலியுமென்று தனது) மெல்லிய தோள்களையும் பார்த்து, அடிநோக்கி-(பின் இவ்விரண்டும் உண்டாகாமல் நீர் நடந்து காத்தல் வேண்டுமென்று தனது) அடிகளையும் பார்த்து, ஆண்டு - அவ்வாறு, அவள் செய்தது-அவள் செய்த குறிப்பு, அஃது - உடன்போக்காயிருந்தது.

* யான்-தோழியாகியநான்; அது-உனதுபிரிவை.

† இவை - வளையல்கள்.

‡ அதற்கேதுவாக-வளையல்கள் நில்லாமைக்குக் காரணமாக.

¶ இவை - தோள்கள்.

[] இவ்விரண்டும் - வளையல்கள் நில்லாமையும் தோள்கள் மெலிதலுமாகிய இவ்விரண்டும்.

() உடன்போக்கினை 'அஃது' என்று தோழி தலைமகனுக்குச் சுட்டிக் கூறினள்; (ஏனெனின்,) (இவ்வதிகாரத்தின் ஐந்தாவது குறளில் தலைமகன்) 'செறிதொடி செய்திறந்த கள்ளம்' என்று கூறினனாகலினென்க. கள்ளம் - உடன் போதற்குறிப்பு.

(*) (தலைமகனிடத்துப்) பிரிதற்குறிப்புண்டாயின், அஃது (பிரிதற்குறிப்பு) (அவன் தன் காதலியைவிட்டுப் பிரிவதுபற்றி) 'அழுங்குதல் (இரங்குதல்) பயன். (அழுங்குதலைப்பயனாகவுடையது.)

செய்த குறிப்பு - செய்தற்குக் காரணமான குறிப்பு. (தோழி), 'அஃது' என்றாள்; (தலைமகன்) 'செறிதொடி செய்திறந்த கள்ளம்' என்று முன்னர்க் கூறினானாகலால். பிரிதற் குறிப்புண்டாயின், அஃது அழுங்குதல் பயன்.

(க-து.) தோழி தலைமகனோடு தலைமகள் தன் தொடியையும் தோளையும் அடியையும் நோக்குதலால், அவள் குறிப்பு உடன் போக்கா யிருந்ததென்று கூறினாளென்பது.

. 9. She looked at her tender shoulders, the armlets slid from them, and her feet; this was what she did there.

ம. பெண்ணினிற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு.

[தலைமகன் பிரியாமைக் குறிப்பினைத் தோழிக் கறிவுறுத்தது.]

பரி:—(இ - ள்.) மகளிர் தங் காமநோயினைத் தோழியர்க்கும் வாயாற் சொல்லாது கண்ணினாற் சொல்லி * அது தீர்க்கவேண்டுமென்று ¶ அவரை யிரவாது உடன்போதல் குறித்துத் தம்மடியினை யிரத்தல் தமக்கியல்பாகிய பெண்மை மேலும் ஓர் பெண்மை யுடைத்தென்று சொல்லுவர் அறிந்தோர், (எ - று).

தலைமகளை துடன்போதற்றுணிபு தோழியாற் † றெளிந்தானாகலின், தன் பிரிவின்மைக் குறிப்பினை யறிவுறுப்பான், அவள் பெண்மையினைப் ‡ பிறர்மேலிட்டு வியந்து கூறியவாறு.

தெளி:—(தலைமகன் தனது பிரியாமைக் குறிப்பினைத் தோழிக்கு அறிவித்தது.] (இ - ள்.) காமநோய் - (மகளிர் தமது) காமநோயினை, கண்ணினாற் சொல்லி - (தோழியர்க்கும் வாயாற் சொல்லாது) கண்ணினாற் சொல்லி, இரவு-(அதனைத் தீர்க்க வேண்டுமென்று அவரை யிரவாமல் உடன்போதலைக் குறித்துத் தமது அடியினை) இரத்தல், பெண்ணினால் - (தமக்கு இயல்பாகிய) பெண்மை மேலும், பெண்மை யுடைத்து-ஓர் பெண் மையை யுடையது, என்ப - என்று சொல்லுவர், (அறிந்தோர்), (எ - று).

(தலைமகன்) தலைமகளது உடன்போதற் றுணிபினைத் தோழியால் தெளிந்தானாகலால், தனது பிரிவில்லாமைக் குறிப்பினை அறிவிப்பான், அவள் பெண்மையினைப் பிறர்மேலிட்டு வியந்து சொல்லியவாறும்.

---

* அது - காமநோய். ¶ அவரையிரவாது - தோழியரை யாசியாமல்.

† தெளிந்தானாகலின் - அறிந்தானாகலால்.

‡ பிறர்மேலிட்டு - 'பெண்ணினாற் „ „ இரவு' என்று பிறமகளிர் மேல்வைத்து.

(க - து.) தலைமகன் தோழிக்கு மகளிர் தமது காமநோயி னைத்தீர்க்குமாறு குறிப்பாற் கூறி, தந்தோழியரையிரவாது உடன் போதலைக் குறித்துத் தமது கால்களை யிரத்தல் அவர்க்கியல்பாகு மென்றுகூறித் தனது பிரிவின்மையை யுணர்த்தினு னென்பது.

10. To express love sickness through eyes and for relief to pray, bespeaks woman-hood's most womanly device.



## 14 - வது அதிகாரம்

### புணர்ச்சி விதும்பல்:—Desire for intercourse.

பரி:—அஃதாவது தலைமகனுந் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல். * மேற் புணர்ச்சி மிகுதிபற்றித் தலைமகன் பிரிதற்குறிப் பறி வுறுத்த தலைமகள் அவன்மாட்டே நிகழாது வேட்கை மிகவினுற் பின் னுந் தன் கண்ணே நிகழ்தலான், † இது குறிப்பறிவுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது தலைமகனும் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல். மேற் புணர்ச்சி மிகுதிபற்றித் தலைமகன் பிரிதற் குறிப்பை அறி வுறுத்த தலைமகள் அவனிடத்தே நிகழாது ஆசை மிகுதியினுல் பின்னும் தன்னிடத்தே நிகழ்தலால், இது குறிப்பறிவுறுத்தலின்பின் வைக்கப்பட் டது

க உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

[பிரிதற் குறிப்பின ளாகியானேடு நீ புலவாமைக்குக் காரணம் யாதென நகையாடிய தோழிக்குத் தலைமகள்சொல்லியது.]

பரி:—(இ - ள்.) நினைந்த துணையானே களிப்பெய்தலும் கண்ட துணையானே மகிழ்வெய்தலும் கள்ளுண்டார்க்கில்லை; காமமுடையார்க் குண்டு, (எ - று).

களித்தல் - உணர்வழியாதது; மகிழ்தல்- அஃதழிந்தது. ‡ இவ்விரண் டும் உண்டழியல்ல தின்மையிற் 'கள்ளுக்கில்' என்றாள். உண்டென்பது

---

* மேல் புணர்ச்சி மிகுதிபற்றித் தலைமகன் பிரிதற்கேதுவாய குறிப் பினைத் தோழிக்குத்தெரிவித்த தலைமகள் (புணர்ச்சிக்கண்ணே விரைதல்) அத்தலைமகனிடத்தே நிகழாது ஆசைமிகுதியால் பின்னும் தன்னிடத்தே நிகழ்தலைக் கூறுதலால், இது குறிப்பறிவுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

† இது-புணர்ச்சி விதும்பல்.

‡ இவ்விரண்டும் - களித்தலும் மகிழ்தலும்.

இறுதி * விளக்கு. † அப்பெற்றித்தாய காமமுடைய யான் புலத்தல் யாண்டைய தென்பதாம்.

தெளி:—[பிரிதற் குறிப்பினளாகிய தலைமகளோடு நீ பிணங்காமைக்குக் காரணம் யாதென்று நகைத்துப் பேசிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.) (இ - ள்.) உள்ளக்களித்தலும் - நினைந்தவளவாலே களிப்படைதலும், காணமகிழ்தலும்-கண்டவளவாலே மகிழ்ச்சி யடைதலும், கள்ளுக்கு-கள்ளுண்டார்க்கு, இல-இல்லை, காமத்திற்கு - காமமுடையார்க்கு, உண்டு-உளவாம், (எ - று).

களித்தல் - அறிவழியாதது; மகிழ்தல்-அவ்வறிவழிந்தது. இவ்விரண்டும் (கள்ளை) உண்ட விடத்தல்லாமல் இல்லாமையால் 'கள்ளுக்கில்' என்றாள். அத்தன்மையதாய காமமுடைய யான் பிணங்குதல் எவ்வாறென்பதாம். உண்டு என்பது கடைநிலைத் தொழிற் றீபகமாம்; இது களித்தலும் என்பதனுடனும் மகிழ்தலும் என்பதனுடனும் சென்றியைந்து, காமத்திற்கு உள்ளக்களித்தலுமுண்டு, காணமகிழ்தலுமுண்டு என நின்றது.

கள்ளென்பது கள்ளுண்டாரையும், காமமென்பது காமமுடையாரையு முணர்த்தி நின்றமையின், விடாதவாகு பெயராம்.

(கு - து.) தலைமகள் தோழியோடு காமமுடையார்க்குத் தங் காமத்திற்குரியாரை உள்ளக்களித்தலும காண மகிழ்தலுமுண்டு; கள்ளுண்டார்க் கவை யில்லையென்று கூறினாளென்பது.

1. To delight at the thought and rejoice at the sight is peculiar to love and not to liquor.

உ. ‡ தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங் காம நிறைய வரின்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) மகளிர்க்குக் காமம் பனையளவினும் மிகவுண்டாமாயின், அதனால், தங்காதலரோடு தினையளவு மூடுதல் செய்யாமை வேண்டப்படும், (எ - று).

* விளக்கு - தீபகாலங்காரம்; அஃதாவது ஒரு வாக்கியத்தில் ஒரு சொல் மத்திமமணி நியாயத்தாலாவது சுட்டாலாவது உம்மையாலாவது பிறவாற்றாலாவது பிறவாக்கியத்திற்கும் பொருள் பொருந்த உபகாரப்படுதலாம்.

† அப்பெற்றித்தாய - உள்ளக்களித்தலும் காணமகிழ்தலுமாய.

‡ தினை, பனையென்பன சிறுமை பெருமைகட்குக் காட்டுவனவாய சில் விளவையாம்.

பனைத்துணையு மென்புழி ஐந்தனுருபு விகாரத்தாற் றொக்கது. ஊடின் வருத்த மிகுமெனப் பிறர்க்குறுதி கூறுவாள் போன்று, தன் விதுப்புக் கூறியவாறு.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) காமம் - (மகளிர்க்குக்) காமமானது, பனைத்துணையும்நிறைய - பனையளவினுமிக, வரின்-உண்டாமாயின், (அம் மகளிரால் தமது காதலரோடு), தினைத்துணையும்-தினையளவும், ஊடாமை-பிணங்குதல் செய்யாமை, வேண்டும் - விரும்பப்படும், (எ - று).

பனைத்துணையும் என்றவிடத்து உறழ்பொருவின்கண் வந்த இன் என்னும் ஐந்தனுருபு செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது; அது விரியுமிடத்துப் பனைத்துணையினும் என்று விரியும். (தலைமகள்) பிணங்கினால் வருத்த மிகுமென்று பிறர்க்கு உறுதி சொல்லுவாள் போன்று, 'தினைத் துணையும்-வரின்' என்று தன் விதுப்பைச் சொல்லியவாறும். விதுப்பு-புணர்ச்சிக்கண்ணே விரைதல்.

(க - து.) தலைமகள் தோழியோடு மகளிர் காமமிகும்போது தங்காதலருடன் பிணங்குதல் செய்வதில்லையென்றுரைஎன்பது.

೭. If women have a love that exceeds even the measure of the palmyra tree, they will not desire deslike (with their lord) even as little as the millet grain.



ரு. பேணது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணு தமையல கண்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) நம்மை யவமதித்துத் தான் வேண்டியனவே செய்யுமாயினும், கொண்கனை என் கண்கள் காணுதமைகின்றன வில்லை, (எ - று).

* தன் விதுப்புக் கண்கண்மே லேற்றப்பட்டது. † அத்தன்மையானொடு புலக்குமாறென்னை யென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) பேணது - (நம்மை) அவமதித்து, பெட்பவே-(தான்) வேண்டியவற்றையே, செய்யினும்-செய்வானாயினும், கொண்கனை - காதலனை, கண் - (என்) கண்கள், காணுது - பாராமல் அமையல - பொருந்துகின்றனவில்லை, (எ - று).

---

* தலைமகள் தன்னுடைய விதுப்பை (விரைதலைக்) கண்களின்மே லேற்றிக் ' கொண்கனைக், காணு தமையல கண் ' என்று கூறினமையின், இது முதலின்றொழில் சினைமேலாய வுபசார வழக்காம்.

† அத்தன்மையானொடு - நம்மை அவமதித்துத் தான் விரும்பியவற்றையே செய்யுங் காதலனுடன். அத்தன்மையேன் அவனொடு புலக்குமா றென்னை யென்பதாம் என்றும் பாடமுண்டு.

தலைமகள் தன் விதுப்பைக் கண்களின்மேல் ஏற்றிக் 'கொண்கனைக் காணாதமையல கண்' என்று கூறினாள். அத்தன்மையாரோடு (அவனைக் காணாதமைதலில்லாத கண்களையுடைய யான்) பிணங்கும் விதம் எவ்வா றென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியோடு நம்மையவமதித்துத்தான் வேண்டியவற்றையே செய்யுங் காதலனை என்கண்கள் காணா திருத்தல் முடியாதென்று சொன்னது.

3. Though my husband disregard me and do what is pleasing to him, still my eyes will not be satisfied unless they see him.

ச. ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) தோழி! காதலரைக் காணுமுன் அவர் செய்த தவற்றைத் † தன்னோடு நினைந்து யானவரோ டூடுதற்கண்ணே சென்றேன்; ‡ கண்டபின் என்னெஞ்சு அதனை மறந்து கூடுதற்கண்ணே சென்றது, (எ - று).

சேறனிகழ்தல் நினைத்த நெஞ்சிற்கு மொத்தலின் 'அது மறந்து' என்றாள். * அச்செலவாற் பயன் என் என்பது பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. ¶ அவ்வெல்லையிலே நெஞ்சு அறைபோகலான், $ அது முடிந்ததில்லை யென்பதாம்.

தெளி:—[இதுவுமது] (இ - ள்,) தோழி - தோழியே, (காதலரைக் காணுமுன் அவர் செய்த குற்றத்தைத் தன்னோடு எண்ணி), ஊடற்கட் சென்றேன் - (யான் அவரோடு) பிணங்குதலிலே சென்றேன், என்னெஞ்சு - (கண்டபின்) எனது மனமானது, அது மறந்து - அப்பிணங்குதலை மறந்து, கூடற்கட்சென்றது - புணர்தலிலே சென்றது, (எ - று).

(ஊடற்கண்) செல்லுதல் நிகழ்தல் (அவ்வூடலை) நினைத்த நெஞ்சிற்கும் ஒத்தலால் (என்னெஞ்சு) 'அது மறந்து' என்றாள். அச்செல்லுதலால் பயன் யாது என்பது தோன்ற நின்றமையால், மன் ஒழியிசைப்பொருளில் வந்தது. அச்சமயத்திலே நெஞ்சு கீழறுத்துக்கொண்டு போகலால், அது முடிந்ததில்லையென்பதாம்.

(க-து.) தலைமகள் தோழியோடு என் மனம் எனக்கு வசமா காது போதலால் யான் காதலருடன் பிணங்கியிருத்தல் முடியாது என்றுசொன்னது.

† தன்னொடு-நெஞ்சொடு. ‡ கண்டபின் - காதலரைக் கண்ட பிறகு.
* அச்செலவால் - பிணங்குதலிலே செல்லுதலால்.
¶ அவ்வெல்லையிலே - பிணங்குதற்கண் செல்லுஞ் சமயத்திலே.
$ அது - பிணங்குதல்.

4. Oh my friend! I went prepared to feign displeasure, but my mind forgetting it went to embrace him.

---

ரு. எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.

(இதுவுமது.)

பரி:—(இ - ள்.) முன்னெல்லாங் கண்டிருந்தும் எழுதுங்காலத்து * அஞ்சனக்கோலினியல்பு காணமாட்டாத கண்ணேபோல, கொண்கனது தவறு காணாதவிடத்தெல்லாங் கண்டிருந்தும் அவனைக் கண்ட விடத்துக் காணமாட்டேன், (எ - று).

† கோல்—ஆகுபெயர். இயல்பு-கருமை. என்னியல்பிதுவாகலின், மேலும் ‡ அது முடியாதென்பதாம்.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) (முன்னெல்லாங் கண்டிருந்தும்) எழுதுங்கால்-எழுதும்போது, கோல்-அஞ்சனக்கோலினியல்பை, காணா-காணமாட்டாத, கண்ணேபோல் - கண்ணேபோல, கொண்கன்பழி - காதலனது குற்றத்தை, (காணாதவிடத்தெல்லாங் கண்டிருந்தும்),கண்டவிடத்து-(அவனைக்) கண்டவிடத்து, காணேன்-காணமாட்டேன், (எ - று).

கோல் - பொருளாகுபெயர். இயல்பு - கருமை. என்னியல்பு இதுவாகலால், மேலும் அது முடியாதென்பதாம்.

(க-து.) தலைமகள் தோழியோடு காதலனைக்கண்டவிடத்து, அவனது தவறு எனக்குத் தோன்றாதொழிகின்றதென்றாள்.

5. Like the eye which sees not the rod that paints it, I cannot see my husband's fault, when I see him.

---

சு. காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) கொண்கனை யான் காணும்பொழுது ¶ அவன் றவறாயவற்றைக் காண்கின்றிலேன், காணாதபொழுது அவையேயல்லது பிறவற்றைக் காண்கின்றிலேன், (எ - று).

---

* அஞ்சனக்கோல் - (கண்ணிற்கு) மைதீட்டுங்கோல்.

† கோலென்னும் பொருளின்பெயர் அதன் பண்பாகிய இயல்பை (கருமையை) யுணர்த்துதலால், பொருளாகுபெயராம்.

‡ அது - பிணங்குதல். ¶ அவன்றவறாயவற்றை - கொண்கன் (தலைமகன்) செய்தகுற்றங்களை.

செயப்படுபொருள் * அதிகாரத்தான் வந்தது. முன்பு நானின்னொடு சொல்லிய தவறுகள் இதுபொழுது காணாமையிற் புலந்திலேனென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) காணுங்கால் - (கொண்கனையான்) காணும்பொழுது, தவறுய-(அவன்) தவறாயவற்றை, காணேன் - காண்கின்றிலேன், காணுக்கால் - காணுதபொழுது, தவறல்லவை - அத்தவறுகளையேயல்லாமல் மற்றவற்றை, காணேன்-காண்கின்றிலேன், (எ - று).

கொண்கனையென்னுஞ் செயப்படுபொருள் அதிகாரத்தால் வந்தது முன்பு நான் உன்னோடுசொல்லிய (கொண்கனது) தவறுகள் இப்போது காணாமையால் (அவனோடு) பிணங்கிலே னென்பதாம்.

(க - து.) தலைமகள் தோழியோடு யான் காதலனைக் காணுமிடத்து அவனது குற்றங்களைக் காண்கின்றேனல்லாமல், கண்டவிடத்துக்காண்கின்றிலே னென்றுளென்பது.

6. When I see my husband I am blind to his faults; but when I do not see him, I find nothing but faults.



எ. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தேன் புலந்து.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) தம்மை யீர்த்துக்கொண்டு போதலறிந்து வைத்து † ஓடுகின்ற புனலுட்பாய்வார் சொல்போல, புலவி முடிவு போகாமை யறிந்து வைத்துக் கொண்கனோடு புலந்து பெறுவதேன், (எ - று).

‡ பாய்பவரென்பது ஆகுபெயர். பொய்த்தல் - புணரப்படுதல். புலந்தாலும் பயனில்லையென்பதாம். § பொய்த்தலறிந்தேனென்பது பாடமாயின், உய்த்தலறிய ஓடுநீருட் பாய்வார்போல ¶ முடிவறியப் பண்டொரு

* அதிகாரத்தான் - புணர்ச்சிவிதும்பலென்னு மதிகாரத்தால்.

† ஒழுகுகின்ற என்றும் பாடமுண்டு.

‡ பாய்பவரென்னும் பொருளின்பெயர் அவரது செயலினை யுணர்த்துதலால், பொருளாகுபெயராம்.

§ பொய்த்தலறிந்தேன் என்பதற்குப் பிரதியாகப்பொய்த்தலறிந்தேன் என்பது பாடமானுல், உய்த்தலறிந்து- இழுத்துக்கொண்டு போதலையறியும்படி, புனல்பாய்பவரேபோல்-(ஓடுகின்ற) நீரில்பாய்பவர்போல, (முடிவினையறியும்படி முன்னொருமுறை), புலந்து - பிணங்கி, பொய்த்தலறிந்தேன் - முடியாமையை யறிந்துகொண்டேன், [இனி அது செய்யத்தக்கதன்று] எனப்பொருளுரைத்துக்கொள்க. பாய்பவர் - வினையாலணையும் பெயர்.

¶ முடிவறிய - பிணக்கின்து முடிவையறியுமாறு.

காற் புலந்து முடியாமையறிந்தேன்; இனி அதுசெயற்பாற் றன்றென வுரைக்க.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) உய்த்தலறிந்து - (தம்மை) இழுத்துக்கொண்டு போதலையறிந்திருந்தும், புனல்பாய்பவரேபோல-(ஓடுகின்ற) நீரில் பாய்வார்செயல்போல, பொய்த்தலறிந்து - (பிணக்கு) முடிவுபோகாமையை யறிந்திருந்தும், புலந்து - (காதலனோடு) பிணங்கி, என்-(பெறுவது) யாது, (எ - று).

பாய்பவரென்பது பொருளாகுபெயர். பொய்த்தல் - பழுதுபடுதல்; அலைத்தாவது தவறிப்போதல் பிணங்கினாலும் பயனில்லையென்பதாம்.

(க-து.) தலைமகள்தோழியோடுபிணங்குதலின்முடிவைக்காணாமையால்,யான் காதலனுடன் அதுசெய்தல முடியாதென்றாள்.

7. Like those who plunge into the stream which they know will carry them off, why should a wife feign dislike which she knows cannot hold out long.

—⸺—

அ. இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

[தலைமகள் புணர்ச்சிவிதுப் பறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) வஞ்சகா! தன்னையுண்டு களித்தார்க்கு ‡ இளிவரத்தக்க இன்னாதவற்றைச் செய்யினும், அவரால் மேன்மேல் விரும்பப்படுவதாய் கள்ளைப்போலும் எங்கட்கு நின்மார்பு, (எ - று).

அவவின்னாதன - ¶ நாணின்மை, $ நிறையின்மை, ஒழுக்கமின்மை, உணர்வின்மையென் றிவை † முதலாயின. எங்கட்கு நாணின்மை முதலியவற்றைச் செய்யுமாயினும எங்களால் மேன்மேல் விரும்பப்படா நின்றதென்பதாம் ‘கள்வ’ என்றதும் * அதுநோக்கி.

தெளி:—[தலைமகளது புணர்ச்சி விதுப்பினை யறிந்த தோழி தலைமகனுக்குச் சொல்லியது.] (இ - ள்.) கள்வ - வஞ்சகா, நின்மார்பு - (எங்களுக்கு) உனது மார்பு, களித்தார்க்கு - (தன்னையுண்டு) களித்தவர்க்கு, இளித்தக்க - அவமானம்வரத்தக்க, இன்னாசெயினும் - இன்னாதனவற்றைச

‡ இளிவாகத்தக்க என்றும்பாடமுண்டு.

¶ நாணின்மை - இழிவாயின செய்தற்கண் விலக்குவதின்மை.

$ நிறையின்மை - மனத்தடக்கற்பாலனவற்றை வேட்கை மிகுதியால் அடக்கமாட்டாது வாய்விடுதல்.

† முதலாயின என்றமையின் சோர்வடைதல் - தவறிவீழ்தல் முதலியவற்றையுங் கொள்க.

* அதுநோக்கி - இளித்தக்க வின்னா செய்தலைக்கருதி.

செய்தாலும், கள்ளற்றே - (அவரால் மேலும்மேலும் விரும்பப்படுவதாகிய) கள்ளைப்போலும், (எ - று).

அவ்வின்னாதன - நாணில்லாமை, நிறையில்லாமை, ஒழுக்கமில்லாமை, உணர்வில்லாமை என்ற இவை முதலாயின. (கள்வ! நின்மார்பு) எங்களுக்கு நாணில்லாமை முதலியவற்றைச் செய்யுமாயினும் எங்களால் மேலும் மேலும் விரும்பப்படுகின்ற தென்பதாம். 'கள்வ' என்றதும் அதுநோக்கி.

(க - து) தோழி தலைமகனை நோக்கி, கள்வனே! நீ யாது தவறுசெய்யினும், உனது மார்பு எங்களால் விரும்பப்படுவதாயிற் றென்று கூறினளென்பது.

8. O traitor! Your breast is to me what liquor is to those who rejoice in it, though it produces unpleasant disgrace.



கூ. மலரினு மெலலிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

[ *உணர்ப்புவயின் வாரா வூடற்கட் டலைமகன் சொல்லியது.)

பரி:—(இ - ள்.) காமவின்பம் மலரினு மெல்லிதா யிருக்கும்; அங்ஙனம் மெல்லிதாதலை யறிந்து ¶ அதன் செவ்வியைப் பெறுவார் உலகத்துச் சிலர், (எ - று)

தொட்டதுணையானே மணச்செவ்வி யழிவதாய மலர் எல்லாவற்றினும் மெல்லிதென்பது விளக்கலின், உம்மை சிறப்பின்கண் வந்தது. ‡ குறிப்பும், | வேட்கையும், நுகர்ச்சியும், இன்பமும் ஒருகாலத்தின் கண்ணே யொத்து நுகர்தற்குரியாரிருவர் அதற்கேற்ற இடனும், காலமும், (*)உபகாரணங்களும் பெற்றுக்கூடி நுகர வேண்டுதலின், அதன் செவ்வி தலைப்படுவார் சிலர் என்றும், () அவற்றுள் யாதானுமொன்றகுறைற் சிறிது வேறுபடினும் † வாடுதலின் 'மலரினு மெல்லிது' என்றுங் கூறினான். குறிப்பொவ்வாமையின் [] யானது பெறுகின்றிலே னென்பதாம். தலைமகளூடறீர்வது பயன்.

* உணர்ப்புவயின் வாராவூடல்-உணர்த்துதற்கு இடம்வாராதபிணக்கு.

¶ அதன் - காமவின்பத்தின்

‡ குறிப்பு - புணரக்கருதுதல். | வேட்கை - புணர்ச்சி விருப்பம்.

(*) உபகாரணங்கள்—உதவியாயிருப்பன. அவை:—மெல்லணை, மலர், சாந்து, சிற்றுண்டி, இளங்காற்று, புணர்ச்சியின் வகைகளை வரைந்துள்ள படங்கள் முதலியன. () அவற்றுள் - இடமுதலியவற்றுள்.

† வாடுதலின் - சுருங்கிப்போதலால்.

[] யானது - யான் அக்காமவின்பத்தை.

தெளி:—[தலைமகள் தணியாதபிணக்குடையா ளாயவிடத்துத் தலைமகன் சொல்லியது.] (இ - ள்) காமம்-காமவின்பம், மலரினும்-பூவினும், மெல்லிது - மெல்லிதா யிருக்கும், (அவ்வாறு மெல்லிதா யிருத்தலை யறிந்து), அதன்செவ்வி - அதன்பக்குவத்தை, தலைப்படுவார் - பெறுவார், சிலர் - (உலகத்தில்) சிலர், (எ-று).

தொட்டவளவாலே வாசனைப் பக்குவம் அழிவதாகிய மலர் எல்லாவற்றினும் மெல்லிதென்பதை விளக்கலால், மலரினும் என்ற உம்மை உயர்வு சிறப்பின்கண் வந்தது. குறிப்பும், வேட்கையும், அனுபவித்தலும், இன்பமும் ஒருகாலத்திலே ஒத்து அனுபவித்தற்குரியாரிருவர் அவ்வனுபவத்திற்கு ஏற்ற இடமும், காலமும், உபகரணங்களும் பெற்றுக்கூடி யனுபவிக்க வேண்டுதலால், அதன் செவ்வி தலைப்படுவார் சிலர் என்றும், அவற்றுள் யாதானும் ஒன்றால் சிறிது வேறுபடினும் (காமம்) வாடுதலால் 'மலரினு மெல்லிது' என்றும் சொல்லினான். குறிப்பொவ்வாமையால் யான் அது பெறுகின்றிலேனென்பதாம். (தலைமகன் 'மலரினும் + + தலைப்படுவார்'என்றிவ்வாறு கூற) தலைமகள் ஊடலொழிவது பயன்.

(கு - து.) தலைமகன் காமவின்பத்தின் பக்குவமறிந்து, அதனை யனுபவிப்பவர் சிலரேயாவ ரென்று கூறினானென்பது.

9 Sexual bliss is more tender than a flower; and few are those who attain its real nature.



ய. கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுத
லென்னினுந் தான்விதுப் புற்று.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காதலி முன்னொருநாள்று புல்லல் விதுப்பினாற் சென்ற என்னொடு தன் கண்மாத்திரத்தா னூடி, புல்லுதலை என்னினுந் தான் விதும்பலால் அது தன்னையும் அப்பொழுதே மறந்து கூடி விட்டாள்; அதனால் * யானித்தன்மையே னாகவும் விதுப்பின்றியூடி நிற்கின்ற விவள் அவளல்லள், (எ - று).

கண்மாத்திரத்தானூடல் - சொன்னிகழ்ச்சியின்றி அது சிவந்து னையேயாதல். அவளாயின், இங்ஙன மூடற்கணீடா ளென்பது பயன்.

* யானித்தன்மையேனாகவும்-யானிவ்வாறு வருந்துகின்றேனாகவும். "இருந்தே னுயநின்ற சிற்றம் பலவர்தென் னம்பொதியில், இருந்தே னுயவந் திணைமலர்க் கண்ணினின் னேக்கருளிப், பெருந்தே னெனநெஞ் சகப் பிடித் தாண்டநம் பெண்ணமிழ்தம், வருந்தே லதுவன் றிதுவோ வருவ தோர் வஞ்சனையே" என்னுந் திருக்கோவையார்ச் செய்யுள் இங்குக்கவனிக்கற்பாலதாம்.

தெளி:—[இதுவுமது]. (இ - ள்.) (காதலி முன்னொருநாள் புணர்ச்சி விதுப்பினால் சென்ற என்னோடு) கண்ணிற்றுனித்து-(தன்) கண்மாத்திரத்தால் பிணங்கி, புல்லுதல் - புணர்தலை, என்னினும்-என்னைப்பார்க்கினும், தான்விதுப்புற்று-தான்விதும்புதலால், கலங்கினள்-(அப்பிணக்கையும் அப்பொழுதே மறந்து) கூடிவிட்டாள், (அதனால் யான் இத்தன்மையேனாக வும் விதுப்பில்லாமல் பிணங்கிநிற்கின்ற இவள் அவளல்லள்), (எ - று).

கண்மாத்திரத்தால் பிணங்கல்-சொல் நிகழ்ச்சியில்லாமல் அக்கண் சிவந்தவளேயாதல். அவளாயின், இவ்வாறு பிணங்குதலின் நீட்டித்திராளென்பதி பயன். ஏ - அசை.

(க-து.) தலைமகன் இவள் என்னோடு கண்மாத்திரத்தாற் பிணங்கிக்கூடிய வென்காதலியல்லளென்று வருந்திக் கூறினான்.

10. She once feigned displeasure in her eyes, but the warmth of her embrace superposed my own.



## 1 5 - வது அதிகாரம்.

### நெஞ்சொடுபுலத்தல்:—Expostulation with onself.

பரி:—அஃதாவது காரண முண்டாயவழியும் புலக்கக் கருதாது புணர்ச்சிவிதும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும் தலைமகன் புலத்தலுமாம். † அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

தெளி:—அஃதாவது காரணம் உண்டாயவிடத்தும் பிணங்கநினையாது புணர்ச்சிக் கண்ணே விரைகின்ற நெஞ்சுடனே தலைமகள் பிணங்குதலும் தலைமகன் பிணங்குதலுமாம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது.

[தலைமகன்கட் டவறுண்டாயவழியும் புலவிகருதாத
நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது]

பரி:—(இ - ள்.) நெஞ்சே! அவருடைய நெஞ்சு நம்மை நினையாது அவர்க்காய் நிற்றல் கண்டுவைத்தும், நீயெமக்காய் நில்லாது அவரை நினைத்தற் காரணம் யாது? (எ - று).

அவர்க்காதல் - ‡ அவர் கருதியதற் குடம்படுதல். எமக்காகாததென்றது புலவிக் குடம்படாமையை. ஒரு கருமத்தைத் தாமாக வறிந்து செய்ய

† புணர்ச்சிவிதும்பலின் பின் நெஞ்சொடு புலத்தலென்னும் அதிகாரம் வைத்த முறைமையும்.

‡ அவர் கருதியதற்கு - காதலர் நினைத்தகாரியத்திற்கு.

மாட்டாதார் செய் வாரைக் கண்டாயினுஞ் செய்வர்; * நீ யதுவுஞ் செய்கின் றிலை யென்பதாம்.

தெளி:—[தலைமகனிடத்துத் தவறுண்டாகியவிடத்தும் பிணங்குதல் நினையாத நெஞ்சிற்குத் தலைமகள்சொல்லியது.] (இ - ள்.) நெஞ்சே மனமே, அவர்நெஞ்சு - அவருடையமனம, அவர்க்காதல்கண்டும் - (நம்மை நினையாது) அவர்க்காய்நிற்றலைக் கண்டிருந்தும், நீயெமக்காகாதது - நீ எமக்காய் நில்லாது அவரை நினைத்தற்குக் காரணம், எவன்-யாது? (எ - று)

அவர்க்காதல்-அவர் நினைத்தற்கு உடம்படுதல். எமக்காகாததென்றது பிணங்குதற்கு உடமபடாமையை. ஒருகாரியத்தைத தாமாக அறிந்து செய்யமாட்டாதவர் செய்வாரைக கண்டாயினும் செய்வார்; (நெஞ்சே!) நீ அதுவுஞ்செய்கின்றிலை யென்பதாம்.

(க - து.) தலைமகள் நெஞ்சே! நம்மை நினையாத காதலரை நீ நினைத்தற்குக் காரணம் யாதென்று வருந்திக் கூறினளென்பது

1. O My mind! Though you have seen his heart abiding by him, how is it you do not abide by me?



உ. உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு

[இதுவுமது]

பரி:—(இ—ள்) என்னெஞ்சே, † மேலும் நம்மாட் டன்புடைய ராகாதவரை உள்ளவாறறிந்தவிடத்தும், நாஞ்சென்றல் வெகுளா ரென்பது பற்றி நீ யவர்மாட்டுச் செல்லா நின்றாய்; இப்பெற்றியது மேலுமோ ரறியாமையுண்டோ, (எ - று).

‡ அவரையென்பது வேற்றுமை மயக்கம். பழங்கண்ணோட்டம் பற்றி வெகுளாரென்பது கருதாகச ¶ சென்றாய்; நீ () கருதியது முடியுமோ வென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) என்னெஞ்சு — என்னுடைய மனமே, (மேலும்), உறாஅ தவர்க்கண்ட கண்ணும் - (நம்மிடத்து) அன்புடைய

* நீ யதுவும் - நீ அக்காரியத்தையும் (பிணங்குதலையும்).

† மேலும் - அவர்நெஞ் சவர்க்காதல் மேலும்.

‡ அவரையென்னும் இரண்டனுருபு தனக்குரிய பொருளைவிட்டு எழனுருபின் பொருளில் அவர்மாட்டு என வந்தமையின், வேற்றுமைமயக்கமாயிற்று

¶ சென்றால், நீ கருதியது முடியாதென்பதாம் என்றும் பாடமுண்டு.

() கருதியது - சென்றால் காதலர் கோபியாரென் றெண்ணியது.

வாராத காதலரை (உள்ளவாறு) அறிந்தவிடத்தும், செறாஅரெனா - (நாம் சென்றால்) கோபியாரென்பது பற்றி, அவரை - (நீ) அவரிடத்து, சேறி - செல்லுகின்றாய், (இத்தன்மையதாமேலும் ஓரறியாமை உண்டோ),(எ-று).

அவரையென்பது வேற்றுமை மயக்கம். (நெஞ்சே! காதலர்) பழைய தாட்சண்யம் பற்றிக் கோபியாரென்பதைப் பற்றுக்கோடாகக்கொண்டு சென்றாய் ; நீ நினைத்தது முடியுமோ வென்பதாம்.

(க - து.) தலைமகள் நம்மிடத்தன்பில்லாத காதலரிடத்து நெஞ்சே !. நீ அவர் கோபியாரென்றெண்ணிச் செல்லுதல் தகுதியன்றென்றாளென்பது.

2. O my heart! Though you know that my lord does not love me, still you go to him saying, "he will not be displeased".

ங. * கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.

[இதுவுமது].

பரி:—(இ - ள்.) நெஞ்சே! என்மாட்டு நில்லாது நீ விரும்பியவாறே அவர்மாட்டுச் செல்லுதற்குக் காரணம் கெட்டார்க்கு நட்டார் உலகத்தில்லையென்று நினைவோ,நின்னியல்பே, கூறுவாயாக,(எ-று).

என்னைவிட்டு அவர்மாட்டுச்சேறல் நீ பண்டே பயின்றதென்பாள் 'பெட்டாங்கு' என்றும், தானிதுபொழுது மானமில்லாளாகலிற் 'கெட்டார்க்கு' என்றுங் கூறினாள். † பின்னென்பது சுண்டிடப்பொருட்டு ‡ செலலென்பது ஆகுபெயர். ஒல்கிடத்துலப்பிலா வுணர்வில்லார் தொடர்பாயிற்று நின்றொடர்பென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) நெஞ்சே-மனமே, (என்னிடத்து நில்லாமல்) நீ பெட்டாங்கு-நீ விரும்பியபடியே, அவர்பின்செலல் - அவரிடத்துச் செல்லுதற்குக்காரணம், கெட்டார்க்கு நட்டாரில்லென்பதோ - கெட்டவர்க்கு நட்பினர் (உலகத்தில்) இல்லையென்னும் நினைவோ, (உன்னியல்போ, சொல்லுவாயாக), (எ - று).

---

* "முட்டின்றொருவ ருடைய பொழுதின்கண், அட்டிற்றுத் தின்பவ ராயிரவ ராபவே, கட்டலர்தார் மார்ப கலியூழிக் காலத்துக்,கெட்டார்க்கு நட்டாரோ வில்" என்று பழமொழி கூறுவதிங்குணர்தற்பாலதாம்.

† பின் என்பது காலத்தையும் இடத்தையும் உணர்த்திவரும் ; முன் என்பதும் இவ்வாறே யாம்.

‡ செலல் என்னுங் காரியப்பெயர் அதன் காரணத்தை யுணர்த்துதலால், காரியவாகுபெயராம். அக்காரணம்-புணர்ச்சிக்கண்ணே விரைதல்.

(நெஞ்சே!) என்னைவிட்டு அவரிடத்துச் செல்லுதல் நீ முன்னரே பழகியதென்பாள் 'பெட்டாங்கு' என்றும், தான் இப்பொழுது மானமில்லாதவளாகலால் 'கெட்டார்க்கு' என்றும் சொல்லினள். பின் என்பது இங்கு இடப்பொருளில் வந்தது. செலல் என்பது காரியவாகுபெயர். (நெஞ்சே!) தளர்ந்தவிடத்து (உடனிருந்து) வருத்தமுறுத அறிவிலாதது நட்பாயிற்று உனது நட்பென்பதாம்.

(க-து.) தலைமகள் நெஞ்சே! நீ என்வசமாக நில்லாது காதலரிடத்துச் செல்லுதற்குக்காரணம் கெட்டார்க்கு நட்டாரில்லையென்றெண்ணியோ, உன்னியல்போ, கூறுவாயாக என்றாள்.

3. O my heart! do you follow him at thy pleasure under the belief that the ruined have no friends?

ச. இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண மற்று.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) நெஞ்சே, நீயவரைக்கண்ட பொழுதே இன்பநுகரக் கருதுவதல்லது அவர் தவறுநோக்கி முன்புலவியை யுண்டாக்கி * அதனை † யளவறிந்து பின்னுகரக்கருதாய்; ஆகலான், இனியப்பெற்றிப்பட்டவற்றை நின்னோடெண்ணுவார் யார்? ‡ யானது செய்யேன்.

அப்பெற்றிப்பட்டன - ¶ புலக்குந்திறங்கள். () காணென்பது உரை

* அதனை - அவ்வின்பத்தை. † அளவறிந்து-பிணக்கின் அளவறிந்து.

‡ யானது செய்யேன் - (நெஞ்சே! உன்னோடு) யான் பிணங்கும் வகைகளை யாலோசித்தல் செய்யேன்.

¶ புலக்குந்திறங்கள் - முகங்கொடுத்துப் பேசாமை, கவிழ்ந்து படுத்துக்கொள்ளல், எழுந்துசென் றொருபுறத் தொதுங்கித் தலைகுனிந்து நிற்றல் முதலியனவாம்.

"உணர்ப்புவயின்வாராவூடல்" என்னும் இறையனாரகப்பொருள் சூத்திரவுரையில் நக்கீரனார் "தலைமகள்மாட்டு ஊடல் தோன்றுமிடத்து மூன்றுவகையான் ஊடல்தோன்றும்; செய்தான் கொல்லோவெனவும், செய்யாநின்றான் கொல்லோவெனவும், செய்யுங்கொல்லோவெனவும். அவற்றுட் செய்யாநின்றான் கொல்லோவென நிகழ்காலத்துப் பிறந்தது, பரத்தையைத் தேரேற்றினான், பூச்சூட்டினான், அவளோடு ஆடினான்கொல்லோவெனப் பிறப்பது. இனிச் செய்தானென்பது இறந்தகாலத்துத் துணிவுபற்றி நிகழ்வது. இனி எதிர்காலத்தது செய்யுங்கொல்லோவென நிகழ்வது" என்று கூறியிருத்தல் இங்குணர்தற்பாலதாம்.

() சிறிது பொருளுணர்த்துமிடைச்சொல் உரையசையாம்.

யசை. * மற்று - வினைமாற்றின்கண் வந்தது முன்னெல்லாம் புலப்பதாக வெண்ணியிருந்து பின் புணர்ச்சி விதும்பலின், † இவ்வாறு கூறினள்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) நெஞ்சே-மனமே, (நீ அவரைக் கண்டபொழுதே இன்பத்தையனுபவிக்க நினைப்பசை மாமல்), துனிசெய்து-(அவர் தவறு நோக்கிமுன்பு) பிணக்கை யுண்டாக்கி, மற்றுத்துவ்வாய்-(அதனை அளவறிந்து) பின்பு அனுபவிக்கநினையாய், (ஆகலால்), இனியன்ன-இனி யத்தன்மைப்பட்டவற்றை, நின்னொடு-உன்னுடன், சூழ்வார்-எண்ணுவோர், யார்-எவர், (யான் அது செய்யேன்), (எ - று)

அத்தன்மைப்பட்டன - பிணங்குந்திறங்கள். காண்-உரையசை. மற்று-வினைமாற்றுப்பொருளில் வந்தது. முன்னெல்லாம் பிணங்குவதாக எண்ணியிருந்து பின்பு புணர்ச்சிக்கண்ணே விரைதலால், இவ்வாறு சொல்லினள்.

(க-து.) தலைமகள் முன்பு காதலனோடு பிணங்குதல் செய்து பின்பு அவரைக்கூட நினையாத நெஞ்சே! உன்னோடு அப்பிணங்குந்திறங்களை யோசிப்பவர் யார் என்று சொன்பது.

4. O my heart! you would not at first feign dislike, and then enjoy; who would henceforth counsel you about such things.



ரு. பெறுஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு.

[‡ வாயிலாகச் சென்ற தோழி கேட்பத் தலைமகள் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) காதலரைப் பெறாதஞான்று அப்பெறாமைக் கஞ்சா நின்றது; பெற்றக்கால் வரக்கடவ பிரிவினையுட்கொண்டு அதற் கஞ்சா நின்றது; ஆகலான், என்னெஞ்சம் எஞ்ஞான்றும் நீங்காத விடும்பையை யுடைத்தாயிற்று, (எ - று).

காதலரைப் பெற்றுவைத்துக் கலவியிழத்தல் உறுதியன்றென்னுங் கருத்தான் வாயினேர்கின்றாளாகலிற் 'பெறாஅமையஞ்சும்' என்றும், ¶ கல

* மற்றென்னு மிடைச்சொல் துனி செய்தல் என்னும் வினையை யொழித்துத் துனிசெய்யாமை என்னும வினையைத்தந்து நின்றமையின், வினைமாற்றுப்பொருளதாயிற்று.

† நெஞ்சே! துனி செய்து துவ்வாய்; (ஆகலான்) இனியன்ன நின்னொடு சூழ்வார் யார் என்றிவவாறு கூறினள்.

‡ "கொளைவல் பாணன் பாடினி கூத்தர், இளையர் கண்டோ ரிரு வகைப் பார்ப்பார், பாகன் பாங்கி செவிலி யறிவர், காமக் கிழத்தி காதற் புதல்வன், விருந்தாற் றுமை யென்றிவை யூடல், மருந்தாய்த் தீர்க்கும் வாயில்களாகும்" என்றகப்பொருள் விளக்கம் கூறுகின்றது. வாயில் - தூது.

¶ கலவியாராமையின் - புணர்ச்சிவிருப்பம் தணியாமையால்.

வியாராமையின் இன்னுமிவர் பிரிவராயின் யாது செய்துமென்பது நிகழ்தலிற் 'பெறிற்பிரிவஞ்சும்' என்றும், * இவவிரண்டு மல்லது பிறிதின்மையின் எஞ்ஞான்றும் 'அரூஅவிடும்பைத்து' என்றுங் கூறினாள்.

தெளி:—[தூதாகச்சென்ற தோழி கேட்பத் தலைமகள்சொல்லியது.] (இ - ள்.) (காதலரைப் பெறாதநாளில்) பெறாஅமையாஞ்சும் - அப்பெறாமைக்கு அஞ்சாநின்றது, பெறின் - பெற்றவிடத்து, பிரிவஞ்சும் - (வரக்கடவதாய) பிரிவினை (உட்கொண்டு அப்பிரிவிற்கு) அஞ்சாநின்றது, (ஆகலால்), என்னெஞ்சு-எனதுமனம், அரூஅவிடும்பைத்து - (எந்நாளும்) நீங்காத துன்பத்தையுடையதாயிற்று, (எ - று).

காதலரைப் பெற்றிருந்தும் புணர்ச்சியை யிழத்தல் உறுதியன்றென்னுங் கருத்தால் தூதுக்கு உடன்படுகின்றாளாகலால் 'பெறாஅமையஞ்சும்' என்றும், புணர்ச்சியாராமையால இன்னும் இவர்பிரிவாராயின் யாது செய்வோமென்பது நிகழ்தலால் 'பெறிற்பிரிவஞ்சும்' என்றும், இவவிரண்டு மல்லாமல் மற்றொன்றில்லாமையால் எந்நாளும் 'அரூஅவிடும்பைத்து' என்றும் சொல்லினாள்.

(க-து.) தலைமகள் தோழி கேட்ப, என்மனது காதலரைப பெறாதகாலத்திலும் பெற்றகாலத்திலும் அஞ்சுகின்றமையால, நீங்காத துன்பததினை யுடையதாயிறறு என்றாளென்பது.

5. My heart fears when without him; when with him it fears at the thought of losing him, thus it endures unceasing pain.



சு. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்) என்னெஞ்சு ஈண்டிருந்தது, காதலரைப் பிரிந்திருந்து அவர் கொடுமைகளை யான் † றன்னொடு நினைத்தக்கால், அவ்வளவறிந்து என்னைத் தின்பதுபோன்று துன்பஞ் செய்தற்கே, (எ-று)

என்மாட்டிருந்தது, ‡ அன்று அவர் கொடுமைகளை யுட்கொணடு எனக்காற்றாமை செய்தற்கே; ‡‡ இன்று ¶ அவைநோக்கி அவரொடு புலததற்கன்றென்பதாம்.

* இவ்விரண்டு மல்லது - பெறாஅமையஞ்சுதல், பெறிற்பிரிவஞ்சுதலென்னு மிவவிரண்டு மல்லாமல்.

† தன்னொடு - நெஞ்சுடன்.

‡ அன்று - காதலரைப்பிரிந்திருந்த அக்காலத்தில்.

‡‡ இன்று-காதலர்வந்த இக்காலத்தில்.

¶ அவைநோக்கி - காதலரது கொடுமைகளையெண்ணி.

**தெளி:**—[இதுவுமது.] (இ - ள்.) என்னெஞ்சு-எனதுமனம், இருந்தது-(இங்கு) இருந்தது, தனியேயிருந்து-காதலரைப்பிரிந்திருந்து, நினைத்தக்கால்-(அவர்கொடுமைகளை யான் தன்னோடு) நினைத்தவிடத்து, (அவ்வளவறிந்து), என்னை—, தினிய-தின்பதுபோன்று துன்பஞ்செய்தற்கே, ()

என்மனம் என்னிடத்திருந்தது, அன்று அவர்கொடுமைகளை உட்கொண்டு எனக்குப் பொறுக்கமாட்டாமையைச் செய்தற்கே; இன்று அவரை நோக்கி அவரோடு பிணங்குதற்கன் றெனபதாம்.

(க - து.) தலைமகள் தோழிகேட்ப, காதலர் பிரிந்துள்ள காலத்தில் என்மனது என்னைத் தின்பதுபோன்று வருத்துகின்றதென்று ளென்பது.

6. My heart has been here to consume me when I ponder in solitude over my lover's cruelty.



எ. நாணு மறந்தே னவாமறக கல்லாவென்
மாணு மடநெஞ்சிற பட்டு

[இதுவுமது]

பரி:—(இ - ள்.) † தன்னைமறந்த காதலரைத் தான் மறக்கமாட்டாத என் மாட்சிமையில்லாத மடநெஞ்சுடனேகூடி, என்னுயிரினுஞ் சிறந்த நாண்டன்னையும் மறந்து விடடேன், (எ - று).

மாணுமை - ஒருநிலையி னில்லாமை. மடமை - கண்டவழி நினைந்து காணுவழி மறக்குந்தவற்றைக் காணுவழி நினைந்து கண்டவழி மறத்தல். நாண் - ஏஞ்ஞான்றுங்கூடி யொழுகினும் () அஞ்ஞான்று கண்டாபோன்றொடுங்குதல். கண்டபொழுதே புணர்ச்சி விதும்பலின், ‡ அதனையும் 'மறந்தேன்' என்றாள்.

**தெளி:**—[இதுவுமது] (இ - ள்.) அவாமறக்கல்லா - (தன்னைமறந்த) காதலரை (தான்)மறக்கமாட்டாத, என் மாணு - எனது மாட்சிமையில்லாத, மடநெஞ்சிற்பட்டு - மடநெஞ்சுடனே கூடி, நாணும் - (என்னுயிரினுஞ்சிறந்த) நாணத்தையும், மறந்தேன்-மறந்துவிட்டேன், (எ - று).

மாணுமை-ஒருநிலையில் நில்லாமை. மடமை-கண்டவிடத்து நினைந்து காணுதவிடத்து மறக்கத்தக்க குற்றங்களைக காணுதவிடத்து நினைந்துகண்ட

† தன்னை யென்றது நெஞ்சினை.

() அஞ்ஞான்று - வேட்டை விருப்பால் இளையாா நீஙகத் தமியனாய் வந்த தலைமகன், பொழில் விளையாட்டு விருப்பால் ஆயம் நீங்க அப்பொழிலகத்துத் தமியளாய் நின்ற தன்னைக் கண்ட அக்காலத்தில்.

‡ அதனையும் - நாணத்தையும்.

விட்டுத் மறத்தல். நாண-காதலரை எக்காலும் கூடியவழியிலிருந்து அந்நாள் கண்டார்போன்று ஒடுங்குதல். (நெஞ்சு காதலரைக்) கண்டபொழுதே புணர்ச்சிக்கண்ணே விரைதலால் அதனையும 'மறந்தேன்' என்றாள்.

(க-து.) தலைமகள் தோழி கேட்ப, காதலரை மறக்கமாட்டாத என்மனத்தின வசப்பட்டு யான் நாணத்தையும் மறந்துவிட்டே னென்றாளென்பது.

7. I have forgotten my modesty having been swayed by my foolish heart which is not noble enough to forget him



அ. எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
முள்ளு முயிர்க்காத னெஞ்சு.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்.) உயிர்மேற் காதலையுடைய என்னெஞ்சு, நம்மை யெள்ளிச் சென்றாரென்று நாமு மெள்ளுவேமாயிற் பின் னமக் கிளிவா மென்று கருதி, அவர் திறத்தினையே நினையா நின்றது, (எ-று)

எள்ளுதல் - வாயின் மறுத்தல். இளிவு - * வழிபடாமையானும, பிரிவாற்றாமையானும், நாணும நிறையு † முதலிய விழத்தலானும் உளதாவது திறம்-வாயினேர்தலும், ‡ வருதலும, கூடலு § முதலாயின. இளிவிற் கஞ்சுதலானும, இறந்துபடமாட்டாமையானுங் கூடக்கருதாநின்ற தெனப்படும்.

தேளி:—[இதுவுமது.] (இ-ள்.) உயிர்க்காதனெஞ்சு - உயிர்மேல விருப்பத்தையுடைய (என்) மனது, (நம்மை இகழ்ந்து சென்றாரென்று), எள்ளின் - (நாமும்) இகழ்வோமாயின், இளிவாமென்றெண்ணி - (பின் நமக்கு) அவமானமாமென்று நினைத்து, அவர்திறம் - அவர்திறத்தையே, உள்ளும்-நினையா நின்றது, (எ-று).

எள்ளுதல் - தூதுமறுத்தல் இளிவு - வழிபடாமையாலும், பிரிவு பொறாமையாலும், நாணும் நிறையும முதலியவற்றையிழத்தலாலும் உணடாவது. திறம்-தூதுக்குடன்படலும், வருதலும், கூடுதலும முதலாயின.

* வழிபடாமையானும - காதலர்வரவை யேற்றுக்கொண்டு அவரை யுபசரியாமையாலும்.

† முதலிய என்றமையின் மடம, அச்சம், பயிர்ப்பு என்பனவற்றையுங் கொள்க.

‡ வருதலும் கூடலும்-காதலர் வருதலும் அவரைக் கூடுதலும்.

§ முதலாயின என்றமையின் மகிழ்தல், புகழ்த லென்பனவற்றையுங் கொள்க.

தேளிவு:—இரண்டாவது (தலைமகன் தலைமகளென்னும்) இருவர்க்கும் சம் புணர்ச்சிக்கண்ணே விரையாது பிணங்க நினைத்தவிடத்து ஒருவரோடு ஒருவர்பிணங்கல். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்

க. புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது.

[வாயிலாகச் சென்ற தோழி தலைமகளை வாயினேர்தற்பொருட்டு அவளொடு நகைபாடிச் சொல்லியது]

பரி:—(இ-ள்.) அங்ஙனம் புலந்தால் காதலர் செய்யும் மல்லனோயினை யாஞ் சிறிது காணக்கடவோம், நீ அவனை விரைந்து சென்று புல்லாதே * இத்தொழிலை மேற்கொண்டிருந்து புலப்பாயாக, ()

அல்லனோய் - துன்பத்தைச் செய்யுங் காமநோய். 'சிறிது' என்றாள், புலவியை நீளவிடலாகாதென்பது பற்றி. புலத்தை யென்புழி ஐகாரம் † "கடம்பூண் டொருகா னீவந்தை" யென்புழிப்போல முன்னிலைவினை விகுதி. ‡ புலத்தி எனபதூஉம் பாடம். புலவிக் குறிப்புக் கண்டு அவளை வழியளாய் நின்று நாமுற்ற வருத்தம் அவருஞ் சிறிதுற்றறிதல் வேண்டு மென் நகையாடி ¶ நேர்வித்தவாறு

தேளி:—[தூதாகச் சென்ற தோழி தலைமகளை தூதுக்கு உடன்படு தற்பொருட்டு அவளோடு நகைத்துச் சொல்லியது] (இ-ள்.) அவரும்— (அவ்வாறு பிணங்கினால்) காதலரடையும், அல்லல்நோய் - அல்லல் நோயினை, சிறிது-(யாம்) சிறிது, காண்கம் - காணக்கடவோம், புல்லாது - (நீ அவரை விரைந்துசென்று) தழுவாதே, இராஅ - (இத்தொழிலை மேற் கொண்டு) இருந்து, புலத்தை - பிணங்குவாயாக, (எ-று).

அல்லல்நோய - துன்பத்தைச் செய்யுங் காமநோய். பிணக்கை நீளவிட லாகாதென்பதுபற்றி (தோழி) 'சிறிது' என்றாள். புலத்தை என்றவிடத்து

* இத்தொழிலை - புலத்தற் றொழிலை.

† கலித்தொகை - குறிஞ்சிக்கலி-27. "இன்னும், கடம்பூண் டொரு கானீ வந்தை யுடம்பட்டாள், என்னைமெ யென்மெய் தொடு" என்பதற்கு நச்சினார்க்கினியார "(அருகேவிட்ட தலைவி) நீவாராய, இன்னமும் ஒருகால (அவனிடத்தே சென்று உன் குறை முடித்தலைத் தனக்குக்) கடனாக (அவன்) ஏற்றுக்கொண்டு (கூட்டத்திற்கு) உடம்பட்டானென்று (அவற் குக்) கூறுமைக்கு என் மெய்யைத் தொட்டுச் சூளுறுவாயாக (என்றான்). வாவென்றது வந்தையெனத் திரிந்தது" என்றுரை கூறியிருக்கின்றனர். கடம்பூண் டொருகானீ வந்தை என்பதனை நீ வந்தை ஒருகால் கடம் பூண்டு என்றன்வயஞ்செய்து நீ வாராய் ஒருமுறை கடமையாக மேற் கொண்டு என்று பொருள்கொள்க.

‡ புலத்தை யென்பதற்குப் பிரதியாகப் புலத்தியென்றும் பாடமுண்டு

¶ நேர்வித்தல் - உடன்படச்செய்தல்.

ஐகாரம் முன்னிலையொருமை வினைமுற்று விகுதி. தோழி தலைமகளது பிணக்கின் குறிப்பைக்கண்டு அவள் வழியளாய் நின்று நாமுற்ற வருத்தத்தை அவரும் சிறிது உற்றறிதல் வேண்டுமென நகைசெய்து அவ்விளையுடன்படுத்தியவாறும்.

(க-து.) தோழி தலைமகளைநோக்கி, யாம் காதலர் துன்பத்தையும் சிறிது காணக்கடவோம்; நீ யவரை விரைந்து சென்று தழுவாது பிணங்கக்கடவாய் என்றுசொன்னபடி.

1 Let us witness a little while his sore love - distress just feign dislike and embrace him not.

---

உ. உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்.

[புலவியொழிந்து வாயினேரும்வகை அவள் சொல்லியது].

பரி: —(இ-ள்.) புலவி கலவி முன்பு நிகழ்ந்த வேண்டுமளவின்றதல் உப்புத் † துய்ப்பனவற்றை ‡ இன்சுவையவாக்குந்த வேண்டுமளவிற்றதல்போலும்; இனி ¶ அதனை யளவின் சிறிது மிகவிடுதல் அவ்வுப்பு அளவின் மிக்காற்போலும், (எ-று)

நீளவிடல் - § அளவறிந் துணராது கலவிமேலெழுந்த குறிப் | பழுங்கு மளவுஞ் செய்தல். சிறிது நீளவிடலாகா தென்றாள்; நேர்விக்கின்றாளாகலின். உப்புமிககவழித் துய்ப்பது சுவையின் றாதற்போலப் புலவி மிக்கவழிக் கலவி இன்பமன்று மென்றமையின், இது ⁝ பண்புவமை.

தெளி: —[பிணக்குநீங்கித் தூதுக்கு உடன்படும்வகை அத்தோழி சொல்லியது.] (இ-ள்.) புலவி-பிணக்கு, (புணர்ச்சி யின்பஞ்செய்தற்கு வேண்டுமளவினதாதல்), உப்பமைந்தற்று - உப்பானது (உண்பனவற்றை இன்சுவையவாக்குதற்கு) வேண்டுமளவினதாதல்போலும், சிறிது நீளவிடல்.— (இனி யதனை அவ்வளவிற்) சிறிது மிகவிடுதல், அதுமிக்கற்று - அவ்வுப்பு அளவில் மிகுந்தாற்போலும், (எ-று)

நீளவிடல் - (பிணக்கினை) அளவறிந்துணராமல் புணர்ச்சிமேலெழுந்தகுறிப்பு அழுங்குமளவுஞ் செய்தல். (தோழி தலைமகளை) புணர்ச்சிக்கு

---

† துய்ப்பன - பொரியல், கூட்டு, குழம்பு முதலியன.

‡ இன்சுவை - நல்ல ருசி. ¶ அதனை - அப்புலவியை.

§ அளவறிந்தொழியாது என்றும் பாடமுண்டு.

| அழுங்கு மளவும் - கெடுமளவும்.

⁝ புலவி உப்பமைந்தற்று; (அதனைச்) சிறிது நீளவிடல் அது மிக்கற்று என உப்பின் சுவைப்பண்பு உவமானமாகக் கூறினமையின், இது பண்புவமையாயிற்று.

உடன்படுத்து நின்றாளாகலால், (பிணக்கினை) சிறிது நீளவிடலாகாதென்றாள். உப்பு மிக்கவிடத்து உண்பது சுவையில்லாதாற்போலப் பிணக்கு மிக்கவிடத்துப் புணர்ச்சி இன்பமாகாதென்றமையால், து பண்புவமை.

(க - து.) தோழி தலைமகளை நோக்கி, புணர்ச்சியின்பத்திற்குப் பிணக்கு ஓரளவாக இருக்கவேண்டுமென்றாளென்பது.

2. A little reserve is like salt in proportion, to prolong it a little, is like salt in excess.

அலந்தாரை யல்லனோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.

[* பரத்தையரிடத்து நின்று வந்த தலைமகனோடு
தலைமகள் புலந்து சொல்லியது].

பரி:—(இ - ள்) தம்மைப்பெறாது புலந்த மகளிரைப் புலவி நீக்கிக் கலவாது ஆடவர்கைவிடல், முன்னமே துன்பமுற்றழிந்தாரை அதன் மேலும் மிக்க துன்பத்தினைச் செய்தாற்போலும், (எ - று).

† பிறர்பாற் சேறலின் நும்மைப்பெறாது புலந்தாழி யிருக்கின்ற பரத்தையரைப்போய்ப்புலவி நீக்கிப் புணராயின், அவர் ஆற்றாரென்பதாம்.

தெளி:—[பரத்தையரிடத்தினின்று வந்த தலைமகனோடு தலைமகள் பிணங்கிச்சொல்லியது.] (இ - ள்.) தம்மைப் புலந்தாரை - தம்மைப் (பெறாது) பிணங்கிய மகளிரை, (பிணக்கு நீக்கி), புல்லாவிடல் - புணராமல் (ஆடவர்) செல்லுதல், அலந்தாரை—(முன்னமே துன்பமுற்று) அழிந்தவரை, அல்லல்நோய்செய்தற்று – (அதன்மேலும்) மிக்க துன்பத்தினைச் செய்தாற்போலும், (எ-று).

பிறரிடத்துச் செல்லுதலால் உம்மைப்பெறாது பிணங்கி வெறுத்திருக்கின்ற பரத்தையரைப் போய்ப் பிணக்குநீக்கிப் புணராதொழிவீராயின், அவர் பொறாரென்பதாம்.

(க-து.) தலைமகள் தன் நாயகனை நோக்கி, நீர் உம்மைப் பெறாது பிணங்கியுள்ள பரத்தையரது பிணக்கினைத் தீர்த்து, அவரைப்புணராதொழிதல் தகுதியாகாதென்று சொன்னது.

•3. For men not to embrace those who feigned dislike is like heaping grief on those already grieved.

* பரத்தையர்-பொதுமகளிர்; அவரவர் விலைகொடுப்பார்யாவர்க்கும் தமது நலத்தை விற்பவர். † பிறர் என்றது தலைமகளை.

௪. ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்.) நும்மோ டூடிய பரத்தையரை ஊடலுணர்த்திக் கூடாதொழிதல் பண்டே நீர் பெறாது வாடிய கொடியை அடியிலே யறுத்தாற்போலும், (எ-று).

நீர் பரத்தையரிடத்திராயவழி எம்புதல்வரைக்கண் டாற்றியிருக்கற்பாலமாய யாம் நும்மோ டூடுதற்குரியமல்லம்; அன்மையின், எம்மையுணர்த்தல் வேண்டா; உரியராயூடிய பரத்தையரையே உணர்த்தல்வேண்டுவது; அதனால் ஆண்டுச் சென்மினென்பதாம்.

தெளி:—[இதுவுமது] (இ-ள்.) ஊடியவரை-(உம்மோடு) பிணங்கிய பரத்தையரை, உணராமை - பிணக்குத்தீர்த்துக் கூடாதொழிதல், வாடிய-(முன்னரே நீர் பெறாது) வாடிய, வள்ளி-கொடியை, முதலரிந்தற்று-அடியிலே அறுத்தாற்போலும், (எ-று).

நீர் பரத்தையரிடத் திருப்பீராயபோது எமது புதல்வரைககண்டு பொறுத்திருக்க வல்லேமாய யாம் உம்மோடு பிணங்குதற்கு உரியேமல்லேம்; அல்லாமையால், எம்மைப் பிணக்குத்தீர்தல் வேண்டாம்; (உமக்கு) உரியராய்ப் பிணங்கிய பரத்தையரையே பிணக்குத் தீர்த்தல் வேண்டுவது; அதனால் அங்குச் செல்லுமென்பதாம்.

(க-து.) தலைமகள் தன் காதலனை நோக்கி, நீர் உம்மோடு பிணங்கியுள்ள பரத்தையரது பிணக்கினைத் தீர்த்து, அவரைக் கூடாதொழிதல் மிகக் கொடியதாமென்றாளென்பது.

4 Not to conciliate those who feigned dislike is like cutting a faded creeper at its root.



௫ நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து.

[தலைமகளைப் புலவிநீக்கிக் கூடிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.]

பரி:—(இ-ள்.) நற்குணங்களாற் றகுதியுடையாராய தலைவர்க்கும் அழகாவது தம்பூவன்னகண்ணார் நெஞ்சின்கண் நிகழும் புலவிமிகுதியன்றே, (எ-று).

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தவறில்லார்க்கும் புலவி இனிதென்பான் நலத்தகை நல்லவர்க்கும் என்றான். அழகு - இன்பப் பயனைத்

தலைப்படுதல். தானுகர்ந்த வின்பத்திற் கேதுவாகிய புலவியை வியந்து கூறியவாறு.

தெளி:—[தலைமகளைப் பிணக்குத் தீர்த்துக் கூடிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.] (இ - ள்.) நலத்தகை - நற்குணங்களால் தகுதியுடையவராய, நல்லவர்க்கும் - தலைவர்க்கும், எனர் அழகாவது, பூவன்ன கண்ணாரகத்து — (தமது) மலர்போலுங் கண்களையுடைய மகளிரது நெஞ்சில், (உண்டாகும்), புலத்தகை - பிணக்கின் மிகுதியன்றே, (எ-று).

நல்லவர்க்கும் என்னும் உயர்வு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. தவறில்லாதவர்க்கும் பிணக்கு இனிதென்பான் நலத்தகை நல்லவர்க்கும் என்றான். அழகு - இன்பப்பயனைப் பெறுதல். (தலைமகன) தான் அனுபவித்த இன்பத்திற்குக் காரணமாகிய பிணக்கை வியந்துசொல்லியவாறும். பூவர்-கருங்குவளை மலர், காவிமலர்,செந்தாமரைமலர்.

(க - து.) தலைமகன் தலைவியது பிணக்கின் மிகுதி தலைவர்க்குப் பேரின்பந்தருதலால், அழகாவது அவர்க்கழகாகும் என்றான்.

5. An increased shyness of consorts with flowery eyes* is graceful even to virtuous worthy husbands.

---

௬ * துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) † முதிர்ந்த கலாமாகிய துனியும் ‡ இளையகலாமாகிய புலவியும் இல்லாயின், காமம் செவ்வி முதிர்ந்த பழமும் இளங்காயும்போலும், (எ - று).

¶ மிகமுதிர்ந்திறு மெல்லைத்தாயகனி நுகர்வார்க்கு | மிகவு மினிமை

---

* காமம் துனியில்லாயின், கனியற்று; புலவியில்லாயின், கருக்காயற்று என்று கொள்க.

† முதிர்ந்தகலாம் - அளவுகடந்த பிணக்கு.

‡ இளையகலாம் - அளவிற்குட்பட்ட பிணக்கு.

¶ "விருந்திலா வுணவு விஷம்" என்புழி விருந்துள வுணவு அமிழ்து என்பது பெறப்படுமன்றே? அங்ஙனமே, துனியிலாக் காமம் கனியற்று,புலவியிலாக்காமம் கருக்காயற்று என்புழித் துனியுள்ளகாமமும் புலவியுள்ள காமமும் செவ்விதாய பழமுண்பது போல்வனவாமென்பது பெறப்படுவதாம் துனியில்லாத காமம் செவ்வி முதிர்ந்த (பதனழிந்த) பழமுண்பதுபோல்வதாம்; புலவியில்லாத காமம் இளங்கா யுண்பது போல்வதா மென்றுகொள்க.

¶ | மிகவு மினிமை செய்தலின் என்றும் பாடமுண்டு. அது பிறழ்ந்த பாடமாம். பின் கட்டிளமைத்தாயகாய் நுகருஞ் செவ்வித் தன்றாகலின்.

செய்வதன்றாகலிற் றுனி யில்லையாயிற் கனியற்று என்றும், * கட்டிளமைத்தாய காய் நுகருஞ் செவ்வித் தன்றாகலிற் புலவியில்லையாயிற் கருக்காயற்று என்றுங் கூறினான். † இவ்விரண்டும் வேண்டுமென்று வியந்து கூறியவாறு.

தெளி:—(இதுவுமது) (இ - ள்.) துனியும் - பெரும் பிணக்கும், புலவியும் - சிறு பிணக்கும், இல்லாயின் - இல்லையானல், காமம் - காமமானது, கனியும்-பக்குவ முதிர்ந்த பழமும், கருக்காயும்-இளங்காயும், அற்று-போல்வதாம், (எ - று).

மிகமுதிர்ந்து கெடுமளவினதாகிய பழம் உண்பவர்க்கு மிகவும் இனிமைசெய்வ தன்றாகலின் துனி (பெரும் பிணக்கு) இல்லையானல் (காமம்) கனியற்று என்றும், கட்டிளமைத்தாகிய காய் உண்ணும் பக்குவத்ததன்றாகலால் புலவி (சிறுபிணக்கு) இல்லையானல் (காமம்) கருக்காயற்று என்றும் சொல்லினான். (தலைமகன்) இவவிரண்டும் வேண்டுமென்று வியந்து சொல்லியவாறும்.

(க - து.) தலைமகன் பெரும் பிணக்குஞ் சிறுபிணக்கு மில்லாவிட்டால், காமம் கனியுங் கருக்காயும் போல இனிதாகாதென்றான்.

6. Sexual love without long and short - lived dislike is like too ripe and immature fruit.

எ. ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) இனிப் புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோ வென்று கருதலான், இன்பத்திற் கின்றியமையாத ஊடலின் கண்ணேயும் ஒருதுன்ப நிகழும், (எ - று).

---

என்று எதிர்மறையாகக் கூறியிருத்தலின், முன் மிகவு மினிமைசெய்தலின் என்றுடம்பாடாகக் கூறல் பொருந்துவதாகாது. பதனழிந்த பழம் உண்பார்க்கு மிகவு மினிமை செய்யாமைபோலத் துனியிலாக் காலம் அனுபவிப்பார்க்கு மிகவு மினிமைசெய்யாது; இளங்காய் உண்பதற்குத் தகுதியாகாமைபோலப் புலவியில்லாக் காமம் அநுபவிப்பதற்குத் தகுதியுடையதாகாது என்றிங்குணர்தற்பாற்றும்.

* கட்டிளமைத்தாய காய் - மிருதியும் இளமையுடையதாயகாய் (பிஞ்சு).

† இவ்விரண்டும் - பெரும்பிணக்கென்னுந் துனியும், சிறு பிணக்கென்னும் புலவியும்.

என்றென்னு மெச்சத்திற்குக் கருதலானென்பது வருவிக்கப்பட்டது, சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. கொல்லென்பதனை நீடுவதென்பது னுடனுங் கூட்டுக. ஆங்கென்பது அசைநிலை. ஊடல் கூடற்கண்விரைவித்தல் கூறியவாறு.

தெளி:—[இதுவுமது.] (இ-ள்.) புணர்வது - (இனிப்) புணர்ச்சியானது, நீடுவதுகொல் - நீட்டிக்குமோ, அன்று கொல் - நீட்டியாதோ, என்று—, (கருதலால்), ஊடலின் - (இன்பத்திற்கு அவசியம்வேண்டுவதாய) பிணக்கிலேயும், ஓர் துன்பம் உண்டாம் - ஒருதுன்பம் உண்டாம், ()

என்று என்னும் செய்தெ னெச்சத்திற்கியையக் கருதலால் என்பது வருவிக்கப்பட்டது ஊடலினுமென்னும் இழிவு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. கொல்லென்பது நீடுவதென்பதனுடனுங் கூட்டப்பட்டது. ஆங்கென்பது-அசைநிலை. (தலைமகன் தலைமகளது) ஊடல் கூடலில் விரைவித்தலைச் சொல்லியவாறும்.

(க - து.) தலைமகன் இனிப் புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோ என்று நினைத்தலால், இன்பத்திற்கு அவசியம்வேண்டுவதாகிய ஊடலின்கண்ணும் ஒரு துன்ப முண்டாகின்றதென்றான்.

7. The doubt as to whether re-union would be long delayed, creates suffering even in feigned dislike.

அ. நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.

[உணர்ப்புவயின்வாரா வூடற்கட் டலைமகன் தலைமகளோடு
புலந்து சொல்லியது.]

பரி:—(இ-ள்.) இவர் நம்பொருட்டாக நொந்தாரென்று அந்நோவினையறியுமன்புடையாரைப் பெறவழி ஒருவர் நோகின்றதனாற் பயனென்? (எ-று).

அறிதல்-ஈண் டுடலை யினிதுணர்தல். மற்று—வினைமாற்றின்கண் வந்தது. இவள் நங்காதலியல்லள்; அன்மையின், இந்நோவறியாள்; அறியாமையின், நாம் புலக்கின்றதனாற் பயனில்லையெனத் தன்னுற்றமை யுணர்த்தியவாறு.

தெளி:—[தணியச்செய்தற்கிடம்வாராத பிணக்கில் தலைமகன் தலைமகளோடு பிணங்கிச்சொல்லியது.] (இ-ள்.) நொந்தாரென்று-(இவர் நம்பொருட்டாக) நொந்தாரென்று, அஃதறியும் - அந்நோவினை யறியும், காதலர்- அன்புடையாரை, இல்லாவழி - பெறாதவிடத்து, நோதல் - (ஒருவர்) நோகின்றதனால், மற்றெவன்-(பயன்) யாது? (நோவாமையே நன்று), (எ-று).

அறிதல் - இங்குப் பிணக்கை நன்றாகவறிதல். மற்றென்னுமிடைச் சொல் நோதல் என்னும் வினையை மாற்றி நோவாமையென்னும் வினை யைத்தருதலால் வினைமாற்றின்கண் வந்ததாயிற்று. (தலைமகன்) இவள் நமது காதலியல்லள்; அல்லாமையால், இந்நோவறியாள் ; அறியாமை யால், நாம் பிணங்குதலால் பயனில்லை யென்று தன்னுற்றாமையை அறிவித்தவாறாம்.

(க - து.) தலைமகன் நமது நோவினை யறியுமன்புடையவ ரைப் பெறாதவிடத்து, நாம் பிறரை நோவதினால் பயன்யாது? நோதல்கூடாது என்றனென்பது.

8. What avails grief when none who love are there to understand the cause of my sorrow.

௯. நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்.) உயிர்க் கின்றியமையாத நீரும் நிழலின்கண்ணதே இனிதாவது, ஏனை வெயிலின்கண்ணது ஆகாது ; அதுபோலக் கல விக்கின்றியமையாத புலவியும் அன்புடையார்கண்ணே இனிதாவது, ஏனை யன்பிலார்கண் ஆகாது, (எ-று).

நிழற்கணிருந்த நீர் குளிர்ச்சிமிக்குத் தாகந்தணித்தலின், இனிதாயிற் று. வீழுநர் - ஆற்றாமைக்கு நோதலுங் கூடுதற்கண் வேட்கையு முடைய ராவார். இவள் நம்மாட்டு * அவ்விரண்டு மின்மையின், இப்புலவிதானு மின்னாதாகின்றதென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ-ள்). நீரும்-(உயிர்க்கு அவசியம்வேண்டுவ தாய) நீரும், நிழலதே-நிழலிலுள்ளதே, இனிது - இனிதாவதாம், (மற்றை வெயிலின்கணுள்ள நீர் இனிதாகாது, அதுபோல),புலவியும்-(புணர்ச்சிக்கு அவசியம்வேண்டுவதாய) பிணக்கும், வீழுநர்கண்ணே யினிது—அன்புடைய வரிடத்தே இனிதாவதாம், (மற்றையன்பிலாரிடத்து இனிதாகாது), ()

நிழலிடத்துள்ளநீர் குளிர்ச்சி மிக்குத் தாகந்தணித்தலால்,இனிதாயிற்று. வீழுநர் - ஆற்றாமைக்கு நோதலும் கூடுதலில் ஆசையும் உடையராவார். இவள் நம்மிடத்து அவ்விரண்டும் இல்லாமையால், இப்பிணங்குதலும் துன் பஞ்செய்வ தாகின்றதென்பதாம். ஆற்றாமை-பொறுத்திருக்க முடியாமை.

(௯ - து.) தலைமகன் புணர்ச்சிக்கு அவசியம் வேண்டுவதாய புலவியும் அன்புடையார்க்கே இனிதாவதாம் ; மற்றவர்க்கினிதா காது என்றனென்பது.

* அவ்விரண்டும்-ஆற்றாமைக்கு நோதலுங் கூடுதற்கண் வேட்கையும்.

9. As water is pleasant in the cooling shade, so dislike is delicious only with those we love.



௰. ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா.

[இதுவுமது.]

**பரி:—(இ - ள்.) தானூடப்பக்கண்ணே மெலியா நிற்கவும், விட்டிருக்க வல்லாரோடு கூடக்கடவேமென்று என்னெஞ்சம் முயறற்கேது தன்னவாவே, பிறிதில்லை, (எ - று).**

*அன்பு மருளு மில்லாதாரை உடையரென்றும் அவரோ டியாங்கூடுவெமென்றுங் கருதி * அதற்கு முயறல் அவாவுற்றார் செயலாகலின் 'கூடுவே மென்பதவா' என்றான். † காரியங் காரணமாக வுபசரிக்கப்பட்டது. இக்கூட்டம் முடியாதென்பதாம்.*

**தெளி:**—*[இதுவுமது] (இ - ள்.) ஊடலுணங்க - (தான்) பிணங்குதலிலே மெலியா நிற்கவும், விடுவாரோடு - விட்டிருக்க வல்லாரோடு, என்னெஞ்சம் - எனது மனம், கூடுவேமென்பது-கூடக்கடவோமென்று முயற்சி செய்தற்குக் காரணம், அவா - (தன்) ஆசையே, (வேறில்லை), (எ-று).*

*அன்பும் அருளும் இல்லாதாரை அவற்றை உடையாரென்றும் அவரோடியாம் கூடுவோமென்றும் நினைத்து அதற்கு முயலுதல் அவாவுற்றார் செயலாகலால் 'கூடுவேமென்பதவா' என்றான். கூடுவேம் என்னும் காரியம் அதன் காரணமாகிய முயற்சியாக வுபசரித்துக் கூறப்பட்டது. தலைமகன் யாம் கூடமுயலும் இக்கூட்டம் முடியாதென்றானென்பதாம்.*

(க - து.) *தலைமகன் என்மனம் தன்னை யுபிர்ந்துந் தன்னை விட்டிருப்பவரைத் தான்கூட முயற்சிசெய்வதற்குக் காரணந் தன்னாசையேயன்றிப் பிறிதொன்றில்லை யென்றானென்பது.*

10. It is nothing but fond desire which makes her heart unite with me who can leave her to her own dislike.



## 17-வது அதிகாரம்.

## புலவி நுணுக்கம்:—Feigned dislike.

**பரி:**—*அது புலவியது நுணுக்கமென விரியும். அஃதாவது தலைமகனுந் தலைமகளும் ஓரமளிக்கட் கூடியிருந்துழி அவன்மாட்டுப் புலத்தற் காரண*

---

* அதற்கு - கூடுதற்கு.

† கூடுவேம் என்னுங் காரியத்தை அதன் காரணமாய முயற்சியாக வுபசரித்துக் கூறினமையின், இது காரியங் காரணமாய வுபசார வழக்காம்.

மில்லையாகவுங் காதல் கைம்மிகுதலான் நுண்ணியதோர் காரணமுளதாக வுட்கொண்டு அதனை யவன்மேலேற்றி அவள் புலத்தல். * காரணத்தி னுணுக்கம் காரியத்தின்மே னின்றது. † அதிகாரமுறைமையும் இத னானே விளங்கும்.

தெளி:—புலவி நுணுக்கமென்பது புலவியது நுணுக்கமென்று விரி யும். அஃதாவது தலைமகனும் தலைமகளும் ஒரு சயனத்தில் கூடியிருந்த போது அவனிடத்துப் பிணங்குதற்குக் காரணம் இல்லையாகவும் காதல் அதிகரித்தலால் நுண்ணிதாகிய ஒரு காரணம் இருப்பதாக உட்கொண்டு அக்காரணத்தை அவன்மேல் ஏற்றி அவள் பிணங்குதல். காரணத்தினுணுக் கம் காரியத்தின்மேனின்றது. அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

க. பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

[உலாப்போய் வந்த தலைமகன் பள்ளியிடத்தானாகத்
தலைமகள் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) பரத்தமையுடையாய்! நின்னைப் பெண்ணியல் பினையுடையார் யாவருந் தங்கண்ணாற் பொதுவாக வுண்பர், அதனால் ‡ அவர் மிச்சிலாய நின்மார்பினைப் பொருந்தேன், (எ - று).

தற்பு நாண் ¶ முதலிய நற்குணங்க ளின்மையிற் பரத்தையர்க்குள்ளது பெண்ணியற்கை மாத்திரமே யென்னுங் கருத்தாற் 'பெண்ணியலார்' என்றாள். பொதுவாக வுண்டல் - தஞ்சேரிச் செலவின் முறையானன்றி ஒருகாலத் தொருங்கு நோக்குதல்; அதுவுமோர் குற்றம். தாநோக்கி யின் புற்றவாறே அவரு நோக்கி யின்புறுவரென || வாசங்கித்து அவர்பாற் பொறாமை யெய்துதலின், நுணுக்கமாயிற்று.

தெளி:—[உலாவப்போய் வந்த தலைமகன் சயனத்தின்கண் வந்த போது தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) பரத்த - பரத்தையரிடத்துச் செல்லுதலுடையாய், (உன்னை), பெண்ணியலா ரெல்லாரும் - பெண்ணி யல்பினை யுடையார் யாவரும், கண்ணின் - (தமது) கண்களால், பொது வுண்பர் - பொதுவாக அனுபவிப்பார், (அதனால்), நின்மார்பு-(அவர்மிச்சி லாகிய) உன்மார்பை, நண்ணேன் - பொருந்தேன், (எ - று).

---

* தலைமகள் தலைமகனிடத்துக் காதல் மிகுதல்பற்றி யுட்கொண்ட கார ணத்தின் நுணுக்கம் அதன் காரியமாகிய புலவிமேல்நிற்றலின், 'கார ணத்தி னுணுக்கம் காரியத்தின்மே னின்றது' என்று கூறப்பட்டது. இது காரணத்தின் தர்மம் காரியத்தின் தர்மமாய வுபசாரவழக்காம்.

† புலவியின்பின் புலவி நுணுக்கம்வைத்த அதிகார முறைமையும்.

‡ அவர் மிச்சிலாய-அப்பரத்தையர் நோக்குதலால் எச்சிலுடையதாய.

¶ முதலிய என்றமையின் மடம், அச்சம், பயிர்ப்பு என்பவற்றையுங் கொள்க. || ஆசங்கித்து - சந்தேகித்து.

(தலைமகள்) கற்பு நாண் முதலிய நற்குணங்கள் இல்லாமையால் பரத்தையர்க்குள்ளது பெண்ணியல்பு மாத்திரமே யென்னுங் கருத்தால் 'பெண்ணியலார்' என்றாள். பொதுவாகவுண்டல் - (பரத்தையர்) தமது சேரியில் (தலைமகன்) செல்லும்போது முறையாலன்றி ஒரு காலத்து ஒருமிக்க நோக்குதல்; அவ்வாறு நோக்குதலும் ஓர் குற்றமாம். (தலைமகன் தன் காதலனை) தாம்நோக்கி இன்பமடைந்தபடியே அப்பரத்தையரும் நோக்கி இன்பமடைவரென்று ஆசங்கித்து அப்பரத்தையரிடத்துப் பொறாமை யடைதலால், நுணுக்கமாயிற்று.

• (க - து.) தலைமகள் தன் காதலனை நோக்கி, பரத்தையரது பார்வையால் மிச்சிலாகிய உனது மார்பை நான் கூடேனென்று கூறினாளென்பது.

1. O thou of fickle mind! all those of womankind enjoy with their eyes in equal grace I shrink from thine embrace



உ. ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

[தலைமகனீக்கத்துச் சென்ற தோழிக்குத் தலைமகள் பள்ளியிடத்து நிகழ்ந்தது கூறியது.]

**பரி:—(இ - ள்.) யாந் * தம்மோடூடி யுரையாடா திருந்தேமாகக் காதலர் தும்மினார், அது நீங்கித் தம்மை நீடுவாழ்கென் றுரையாடுவேமாகக் கருதி, (எ - று).**

தும்மியக்கால் வாழ்த்துதல் மரபாகலான், உரையாடல் வேண்டிற் றென்பதாம் இயல்பானிகழ்ந்த தும்மலைக் குறிப்பா னிகழ்ந்ததாகக் கோடலின், நுணுக்கமாயிற்று.

**தெளி:—**[தலைமகன் நீங்கியபோது சென்ற தோழிக்குத் தலைமகள் சயனத்திடத்து நிகழ்ந்ததைச் சொல்லியது.] (இ-ள்.) யாம்-நாம், ஊடி-(தம்மோடு) பிணங்கி, இருந்தேமா-(உரையாடாது) இருந்தேமாக, தும்மினார்-(காதலர்) தும்மினார், (அப்பிணக்கு நீங்கி), தம்மை —, நீடுவாழ்கென்பாக் கறிந்து - நெடுங்காலம் வாழ்கவென்று சொல்லுவோமாக நினைத்து, (எ-று).

தும்மியவிடத்து வாழ்த்துதல் மரபாகலால், (யாம் காதலருடன்) உரையாடல் வேண்டியதாயிற் றென்பதாம். (தலைமகள்) இயல்பாலுண்டாகிய தும்மலைக் குறிப்பால் உண்டாகியதாகக் கொள்ளுதலால், நுணுக்கமாயிற்று.

(க - து.) தலைமகள் தோழியோடு யாம் பிணக்குத்தீர்ந்து தம்மோடுபேசுமாறு காதலர் தும்மினாரென்று கூறினாளென்பது.

* தம்மோடு - காதலரோடு.

2. When I silent sulked he sneezed and thought I would wish him a long life.



௩. கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று.

[*தலைமகளது புலவிக்குறிப்பினைக் கண்டு நீவிர் கூடியொழுகா நிற்கவும் இது நிகழ்தற்குக் காரணம் யாதென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.*]

பரி:—(இ - ள்.) யான் கோடுதலைச்செய்யு மாலையைச் சூடினேனாயினும், நும்மால் காதலிக்கப்பட்டா ளொருத்திக்கு இப்பூவணி காட்டல்வேண்டிச் சூடினீரென்று வெகுளா நிற்கும்; இத்தன்மையாட்கு ஒரு காரணம் வேண்டுமோ ? (எ - று).

* *கோடென்பது முதனிலைத் தொழிற்பெயர்.* † *பூ .- ஆகுபெயர்.* ‡ *வளையமாகச் சூடினுமென்பதாம்;* ¶ *"கோட்டங் கண்ணியுங் கொடுந்திரையாடையும்" என்றார் பிறரும்.* () *இனி யம்மருத நிலத்துப்பூவன்றி* | *வேற்றுநிலத்துக்* || *கோட்டுப்பூவைச் சூடினேனாயினும் ஈண்டையாள் பிறளொருத்திக்கு அவ்வேற்றுப் பூவணி காட்டல் வேண்டிச் சூடினீரென்று வெகுளுமெனினு மமையும்.*

* *கோடு என்னும் முதனிலை (பகுதி), கோடுதல் (வளைதல்) என்னுந் தொழிற்பெயர்ப் பொருளை யுணர்த்துதலால், முதனிலைத் தொழிற்பெயராயிற்று.*

† *பூ (மலர்) என்னுங் கருவியின் பெயர் அதன் காரியமாகிய மாலையை யுணர்த்துதலால், கருவியாகு பெயராம்.*

‡ *கோட்டுப்பூச் சூடினும் என்பதற்கு, பூ-பூமாலையை, கோட்டுச்சூடினும் - வளையமாகச் சூடினும் என்றுரை கூறுவதும் பொருந்தும்*

¶ *புறநானூறு-275. இதன்பொருள். வளையமாயுள்ள மாலையும் வளைந்த திரைச்சீலையும் என்பது.*

() *இனி யிக்குறளுக்கு, கோட்டுப்பூச் சூடினும்-(அந்த மருதநிலத்துப் பூவல்லாமல் வேற்று நிலத்திலுள்ள) கோட்டுப்பூவைச் சூடினேனாயினும், ஒருத்தியை - (இவ்விடத்துள்ளாள் பிறள்) ஒருத்திக்கு, காட்டிய - (அவ்வேற்றுப் பூவணியைக்) காட்டல்வேண்டி, சூடினீரென்று - தரித்தீரென்று, காயும் - கோபிப்பாள், என்றுரை கூறுவதும் பொருந்தும்.*

| *வேற்று நிலம் - குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை நிலங்கள்.*

|| *கோட்டுப்பூ - கிளைகளிலுள்ள பூ. பூ-கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என நால்வகைத்தாம்.*

தெளி:—[தலைமகளது பிணக்கின் குறிப்பைக்கண்டு நீர் கூடியொழுகா நிற்கவும் இப்பிணக்கு நிகழ்தற்குக் காரணம் யாதென்று வினவிய தோழிக்குத் தலைமகன் சொல்லியது.] (இ - ள்.) கோட்டுப்பூ - (யான்) வளைத லைச்செய்யும் பூமாலையை, சூடினும் - சூடினேனாயினும், ஒருத்தியை - (உம்மால் விரும்பப்பட்டாள்) ஒருத்திக்கு, காட்டிய - (இப்பூவணியைக்) காட்டுதல் வேண்டி, சூடினீரென்று - தரித்தீரென்று, காயும் - கோபியா நிற்பள், (இத்தன்மையுடையாளுக்கு ஒரு காரணம் வேண்டுமோ), (எ-று).

கோடு என்பது முதனிலைத் தொழிற்பெயர். பூ என்பது கருவியாகு பெயர்.

(க - து.) தலைமகன் தோழியை நோக்கி, யான் பூமாலையைச் சூடினாலும், அது காரணமாகப் பிணங்குகின்றவுள் தோழிக்குப் பிறிதுகாரணம் வேண்டுமோ என்றானென்பது.

3. Even if I put on a garland flower, she would say I did so to show it to another woman.

ச யாரினுங் காதல மென்றேனா ஊடினாள்
யாரினும் யாரினு மென்று

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காம நுகர்தற்குரிய விருவராயினார் யாவரினும் யாம் மிக்க காதலையுடையே மென்பது கருதி யாரினுங் காதலமென் றேனாக ; நின்றோழி அது கருதாது, என்றும் காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளும் நின்கட்காதலுடையே னென்றேனாகக் கருதி, அம்மகளிர் யாரினும் யாரினும் என்கட் காதலுடையீராயினீரென்று சொல்லிப் புலந்தாள், (எ - று).

தலைமகள் கருத்திற்குத் தன்மைப்பன்மை உயர்ச்சிக்கண் வந்தது யானன்பு மிகுதியாற் * சொல்லியதனைக் கருத்து வேறுபடக் கொண்டதல்லது பிறிதுகாரண மில்லை யென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்) (காமத்தையனுபவித்தற்குரிய இருவராயினார் யாவரிலும் யாம் மிக்க காதலையுடையோ மென்பது கருதி) யாரினுங் காதலமென்றேனா - யாரினுங் காதலை யுடையோ மென்றுகூறினேனாக, (உன்தோழி அதுகருதாது என்னால் விரும்பப்பட்ட மகளிர் பலருள்ளும் உன்னிடத்துக் காதலையுடையேனென்று கூறினேனாகக் கருதி), யாரினும் யாரினுமென்று - (அம்மகளிர்) யாரினும் யாரினும் (என்னிடத்துக்காதலை யுடையீராயினீர்) என்று சொல்லி, ஊடினாள் - பிணங்கினாள், (எ - று).

* சொல்லியதனை - 'யாரினுங் காதலம்' என்று சொல்லியதனை.

தலைமகள் கருத்திற்குக் காதலம் என்னுந் தன்மைப்பன்மை வினை முற்று உயர்த்திக் கூறுதற்கண் வந்தது; இதற்குத் தலைமகன் தன்னைக் காதலமென்று தன்மைப் பன்மை வினைமுற்றாக உயர்த்திச் சொல்லினு னென்று தலைமகள் கருதினளென்று கொள்க யான் அன்பு மிகுதியால் சொல்லியதனை (என்காதலி) கருத்துவேறுபடக் கொண்டதல்லாமல் வேறு காரணம் இல்லை யென்பதாம்.

(க - து.) தலைமகன் தோழியை நோக்கி,யான் யாம் யாவரினும் மிக்க காதலையுடையோ மென்று நின்தோழியை நோக்கிக் கூறினேன்; அதற்கு அவள் நீர் யாரினும் யாரினும் என்னிடத்துக் காதலை யுடையீராயினீரென்று கூறிப்பிணங்கினாளென்றா னென்பது.

4. When I said I loved her more than all other women, she said "more than all others, yes, more than all others", and remained sulky.



ரு. இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) காதல் மிகுதியான் இம்மையாகிய பிறப்பின் கண் யாம் பிரியேமென்று சொன்னேனாக, † அதனான் ஏனைமறுமையாகிய பிறப்பின்கட் பிரிவலென்னுங் குறிப்பினேனாகக் கருதி, அவள் தன் கண்ணிறைந்த நீரினைக்கொண்டாள், (எ - று).

‡ வெளிப்படுசொல்லைக் குறிப்புச்சொல்லாகக் கொள்கின்றதல்லது என்பாற் றவறில்லை யென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ-ள்.) (காதல் மிகுதியால்) இம்மைப் பிறப்பில் - இம்மையாகிய பிறப்பில், பிரியலமென்றேனா - (யாம்) பிரியோமென்று சொன்னேனாக, (அதனால் மற்றை மறுமையாகிய பிறப்பில் பிரிவேனென்னுங்கருத்துடையேனாக நினைந்து), கண்ணிறை நீர்கொண்டனள் - (அவள் தன்) கண்ணிறைந்த நீரினைக்கொண்டாள், (எ - று).

(யான் கூறும்) வெளிப்படுசொல்லை (என்காதலி) குறிப்புச்சொல்லாகக் கொள்கின்றதல்லாமல் என்னிடத்துத் தவறில்லையென்பதாம்.

(க - து.) தலைமகன் தோழியை நோக்கி, யான் யாம் இப்பிறப்பிற்பிரியோமென்றுன்தோழியைநோக்கிக்கூறினேன்; அதற்கவள்

---

† அதனான் - அவ்வாறு சொன்னதனால்.

‡ இம்மைப்பிறப்பிற் பிரியலம் என்னும் வெளிப்படுசொல் மறுமைப் பிறப்பிற் பிரிவல் என்னுங் குறிப்புச்சொல்லாகக் கொள்ளப்பட்டது. குறிப்புச்சொல் - குறிப்பாற் பொருளுணர்த்துஞ் சொல்.

யான் மறுபிறப்பில் உன்னைப் பிரிவேனென்று கூறினேனென்று கருதி யழுதாளென்று கூறினானென்பது.

5. (With extreme love) when I told I would never part from her while in this life, her eyes were filled with tears.

௫. உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.

(இதுவுமது.)

பரி:—(இ - ள்.) பிரிந்தகாலத்து நின்னை யிடையின்றி நினைந்தே னென்னுங்கருத்தால் யானுள்ளினேனென்றேன்; என, அதனை ஒருகால் மறந்து பின்னினைந்தே னென்பதாகக் கருதி, என்னை யிடையே மறந்தீ ரென்று சொல்லி முன் னென்னைப் புல்லுதற் கமைந்தாள் * அஃதொழிந்து புலத்தற்கமைந்தாள், (எ-று)

† மற்று—வினைமாற்றின்கண் வந்தது ‡ அருத்தாபத்திவகையான் மறத்தலையுட்கொண்டு புலந்தாளென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) உள்ளினேனென்றேன்-(பிரிந்த காலத்தில் உன்னை யிடைவிடாமல் நினைந்தேனென்னுங்கருத்தால் யான்) நினைந்தேனென்றேன், (என்றுகூற, அவள் அதனை ஒருகால்மறந்து பின் நினைந்தேனென்று சொல்லியதாகக் கருதி), மற்றென்மறந்தீரென்று - என்னை (இடையே) மறந்தீரென்று சொல்லி, (முன்னே), என்னை—, (தழுவுதற்கு அமைந்தவள்), புல்லாள் - தழுவுதலொழிந்து, புலத்தக்கனள்-பிணங்குதற்கு அமைந்தாள், (எ-று).

மற்று-வினைமாற்றுப் பொருளில் வந்தது. (தலைமகள்) அருத்தாபத்தி வகையால் மறத்தலை யுட்கொண்டு பிணங்கினளென்பதாம்.

(க - து.) தலைமகன் தோழியைநோக்கி, யான் பிரிந்துள்ள காலத்தி விடைவிடாதுன்னை நினைந்தேனென்றுன் றோ

* அஃதொழிந்து - என்னைப் புல்லுதற் கமைந்ததைவிட்டு.

† மற்றென்னுமிடைச்சொல் உள்ளினேன் என்னும் வினையைமாற்றி உள்ளாமையென்னும் வினையைத் தந்து நின்றமையின், வினைமாற்றுப் பொருளதாயிற்று.

‡ உள்ளினேன் (நினைந்தேன்) என்று தலைமகன் கூறினமையின், தலைமகள் அருத்தாபத்திவகையால் மறந்தீரென்று மறத்தலையுட்கொண்டு பிணங்கினள் என்பதாம். இங்ஙனமன்றாயின் இதுகூடாதென் றுணர்தல் அருத்தாபத்தியின் வடிவமாம். மறத்தல் கூடாதாயின், நினைத்தல் கூடாதென்பதிங்கருத்தாபத்தியாம்; மறந்தமையால் நினைத்தல்வேண்டியதாயிற் றென்பதிதன் பொருளாம்.

ழியைநோக்கிக் கூறினேன் ; அதற்கவள் என்னைமறந்தன்றோ நினைக்க வேண்டுமென்றுகூறிப் பிணங்கினுளென்றுனென்பது.

6. When I told I had re-called her to mind, she relaxed her embrace saying I had forgotten her, and began to feign dislike.



எ. வழுத்தினுள் டும்மினே ளுக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்) கூடியிருக்கின்றவள் யான் தும்மினேனாகத் தன்னியற்கை பற்றி வாழ்த்தினாள் ; அங்ஙனம் வாழ்த்திய தானே மறித்து, நும்மை நினைத்து வருந்துகின்ற மகளிருள் யாவர் நினைத்தலாற் றும்மினீரென்று சொல்லிப் புலந்தழுதாள், (எ - று).

வாழ்த்தலொடு புலத்தல் இயையாமையின் ' அழித்து ' என்றான். அன்புடையார் நினைத்தவழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மறோன்று மென்பது மகளிர் வழக்கு. † இவ்வழக்கை ‡ உள்வழக்காகக் கருதிப் புலந்தாளென்பதாம்.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) (கூடியிருக்கின்றவள்) தும்மினேனாக - (யான்) தும்மினேனாக, வழுத்தினாள் - (தன்னியற்கைபற்றி) வாழ்த்தினாள், (அவ்வாறு வாழ்த்திய தானே), அழித்து - மறித்து, (உம்மை நினைந்து வருந்துகின்ற மகளிருள்), யாருள்ளி - யாவர் நினைத்தலால், தும்மினீரென்று—தும்மினீரென்றுசொல்லி, அழுதாள்-(பிணங்கி) அழுதாள்.

வாழ்த்தலோடு பிணங்குதல் பொருந்தாமையால் ' அழித்து ' என்றான். அன்புடையார் நினைத்தபோது அந்நினைக்கப்பட்டவர்க்குத் தும்மல் தோன்றுமென்பது மகளிர் வழக்கு. (தலைமகள்) இவ்வழக்கை உள்வழக்காக நினைத்துப் பிணங்கினுளென்பதாம்.

(க - து.) தலைமகன் தோழியை நோக்கி, யான் தும்மினேன்; என்னோடு கூடியிருக்கின்றவள் தோழி உம்மை நினைத்து வருந்துகின்ற மகளிருள் யார் நினைத்தலால் நீர் தும்மினீரென்று கூறிப் பிணங்கியழுதாளென்றுனென்பது.

7. She blessed me when I sneezed, but changed her mind instantly and wept, asking "At the thought of which wom n you sneezed? ".

---

† இல்வழக்கை - அன்புடையவர் நினைத்தவிடத்து அந்நினைக்கப்பட்டவர்க்குத் தும்மலுண்டாகும் என்னும் பொய்வழக்கை.

‡ உள்வழக்காக - மெய்வழக்காக.

அ. தும்முச் செறுப்ப வழுதா ணுமருள்ள
லெம்மை மறைத்திரோ வென்று.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) எனக்குத் தும்மறேன்றியவழி யாருள்ளித் தும்மி னீரென்று புலத்தலையஞ்சி, அதனை யானடக்கினேன்; அங்ஙனமடக்க வும், நுமர் நும்மை நினைத்தலை எம்மை மறைக்கலுற்றீரோ வென்று சொல்லிப் புலந்தழுதாள், (எ - று).

* தும்முவென்பது முதனிலைத் தொழிற்பெயர். † செறுப்பவுமென் புழி ‡ இறந்தததழீஇயவெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. எம்மை யென்பது நம்மோடியாது மியைபில்லாத வெம்மையென்பதுபட நின்ற ¶ இசையெச்சம். இதனை வடநூலார் காகுவென்ப. தும்மினுங்குற்றம் ஒழியினுங் குற்றமாயக்காற் செயற்பால தியாதென்பதாம்.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) (எனக்குத் தும்மல் தோன்றியவிடத்து யாவர் நினைத்தலால் தும்மினீரென்று பிணங்குதற்கு அஞ்சி), தும்முச் செறுப்ப - அத்தும்மலை (யான் அடக்கினேன் அவ்வாறு) அடக்கவும், நுமருள்ளல்-உம்மவர் (உம்மை) நினைத்தலை, எம்மை மறைத்திரோவென்று- எம்மை மறைக்கலுற்றீரோவென்று சொல்லி, அழுதாள் - (பிணங்கி) அழுதாள், (எ - று).

தும்மு என்பது முதனிலைத் தொழிற்பெயர். செறுப்பவும் என்றவிடத்து இறந்தது தழுவிய எச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு

* தும்மு என்பது தும்மல் என்னுந் தொழிற்பெயர்ப் பொருளை யுணர்த்துதலால், முதனிலைத் தொழிற்பெயராம். முதனிலை - பகுதி.

† செறுப்பவென்புழி என்றும் பாடமுண்டு.

‡ செறுப்பவும் என்றவும்மை கோட்டிப்பூச குடல் முதலியவற்றை விட்டிருப்பதன்றி யென்னும் பொருளைத் தருதலின், இறந்தது தழுவிய வெச்சவும்மையாயிற்று.

¶ இசையெச்சமாவது வாக்கியங்களுள் அவ்வவ்விடத்திற்கேற்பப் பல சொல் வருவித்துரைக்கப்பட்டு வருவதாம். இங்கு 'நம்மோடியாது மியை பில்லாத' என்பது வருவித்துரைக்கப்பட்டவாறறிக. இசை - சொல்; எச்சம் - குறைவு. "ஆக்கும் பிரதி பதத்துடனே" என்னும் பிரயோக விவேகச் செய்யுளின் விசேடவுரையில் "இனி, அலங்கார நூலார் இசை யெச்சத்தைக் காகுவென்பர். அதற்குதாரணம் 'நுமருள்ள லெம்மைமறைத் திரோ' என்பதாம். அது சொல்லுங்கால் முகவிகாரமாதல் சொல்விகார மாதல் தோன்றநிற்கும்' என்று கூறியிருத்தலும், நன்னூல்விருத்தியுரையில் "இசையென்பது சொல். இசையெச்சமெனப் பொதுப்படக் கூறினமை யின், இவ்வெச்சமும் இது கொள்வதும் பெயர் வினை யிடை யுரி யென் னும் நால்வகைச் சொல்லுள் ஒன்றும் பலவும் தனித்துந் தொடர்ந்தும் வரு மென்பது பெற்றாம்" என்று கூறியிருத்தலும் இங்குணர்தற் பாலனவாம்.

நின்றது. எம்மையென்பது உம்மோடு யாதும் சம்பந்தமில்லாத எம்மை யென்பது தோன்ற நின்ற இசையெச்சம். இவ்விசையெச்சத்தை வடநூலார் காகு என்பர். தும்மினுங் குற்றம் (தும்மல்) ஒழியினுங் குற்றமாய விடத்து யான் செய்யத்தக்கது யாது என்பதாம்.

(க - து.) தலைமகன் தோழியை நோக்கி, தும்மியவிடத்துன் தோழி பிணங்குதல் பற்றி யானதனை யடக்கினேன் ; அவள் நீர் நும்மவர்நினைத்தலை யெமக்கு மறைக்கலுற்றீரோ வென்றுகூறிப் பிணங்கியழுதா ளென்றா னென்பது

8. When (next time) I checked sneezing, she wept saying "Perhaps you did so to hide from me your people remembering you".

௯. தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) இவ்வாற்றானூடிய தன்னை யான் பணிந்துணர்த்துங் காலும் வெகுளா நிற்கும்; பிறமகளிர்க்கும் நீர் அவரூடியவழி இவ்வாறே பணிந்துணர்த்து நீர்மையையுடையீ ராகுதிரென்று சொல்லி.

இவள் தெளிவித்தவழியுந் தெளியாளென்பதுபற்றி என்மேலேற்றிய தவற்றை உடம்பட்டுப் பணிந்தேன்; பணிய, அதுதானும் புலத்தற்கேதுவாய் முடிந்தது; இனி யிவண்மாட்டுச் செய்யத்தகுவ தியாதென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ-ள்.) தன்னை-(இவ்விதத்தால் பிணங்கிய) தன்னை, உணர்த்தினும் - (யான்வணங்கிப்) பிணக்குத் தீர்க்கும்போதும், காயும்-கோபியாநிற்பள், பிறர்க்கும்-பிறமகளிர்க்கும், நீர்-, இந்நீராகுதிரென்று-(அவர்பிணங்கியபோது) இவ்வாறே வணங்கிப் பிணக்குத் தீர்க்குந் தன்மையையுடையீராவீரென்று சொல்லி, (எ-று).

இவள் தெளிவித்தவிடத்துந் தெளியாளென்பதுபற்றி என்மேல் ஏற்றிய குற்றங்களை (யான்) உடன்பட்டு வணங்கினேன்; வணங்க, அதுவும (அவள்) பிணங்குதற்குக் காரணமாய் முடிந்தது ; இனி இவளிடத்துச் செய்யத்தகுவது யாதென்பதாம்.

(க - து.) தலைமகன் தோழியை நோக்கி, யான் பிணக்கொழியும் பொருட்டு, உன் தோழியைவணங்கினேன்; அவள் பிறமாதரிடத்தும் நீர் இத்தன்மையை யுடையீராவீரென்று கூறிக் கோபியா நின்றா ளென்றா னென்பது.

9. When I try to coax to calm her (jealousy) she becomes angry and says "This is the way you behave towards other women (when they are displeased).

கO. நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) என்சொற்களுஞ் செயல்களும் பற்றித் தான் வெகுடலான், † அவற்றை யொழிந்திருந்து தன்னவயவங்களை தொப்பின்மையை நினைந்து அவற்றையே நோக்கினும், என்னை வெகுளாநிற்கும்; நீர் என்னவயவமனைத்தும் நோக்கினீர் அவற்ற தொப்புமையான் எம்மகளிரை நினைந்தென்று சொல்லி, (எ - று).

யான் எல்லா வவயவங்களானும் ஒருத்தியோ டொத்தல் கூடாமையின், ஒன்றொ லொருவராகப் பலரையு நினைக்கவேண்டும்; அவரெல்லாரையும் யானறியச் சொல்லுமினென்னுங் கருத்தால், அனைத்து நீர் நோக்கினீர் யாருள்ளி என்றாள். வாளாவிருத்தலுங் குற்றமாயிற் றென்பதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ-ள்.) (என்சொற்களும் செயல்களும் பற்றித் தான் கோபித்தலால்) இருந்து - (அவற்றையொழிந்து) இருந்து, நினைத்து-(தனது அவயவங்களது ஒப்பில்லாமையை) நினைந்து, நோக்கினும்-(அவ்வவயவங்களையே) பார்த்துக்கொண்டிருந்தாலும், காயும் - (என்னைக்) கோபியாநிற்பள், நீர்-, அனைத்தும் - (எனது அவயவம்) அனைத்தையும், நோக்கினீர்-பார்த்தீர், (அவ்வவயவங்களி னொப்புமையால்), யாருள்ளி யென்று-எம்மகளிரை நினைந்தென்று சொல்லி, (எ-று).

யான் எல்லா அவயவங்களாலும் ஒருத்தியோடு ஒத்தல் கூடாமையால், நீர் ஓரவயவத்தால் ஒருவராக மகளிர் பலரையும் நினைக்கவேண்டும்; அவரெல்லாரையும் யான் அறியச் சொல்லுமென்னும் கருத்தால், அனைத்து நீர் நோக்கினீர் யாருள்ளி என்றாள். யான் சும்மாவிருத்தலும் குற்றமாயிற் றென்பதாம்.

(க - து.) தலைமகன் தோழியை நோக்கி, யான் உன்தோழியின் அவயவங்களினது ஒப்பில்லாமையை நினைந்து அவற்றையே நோக்கியிருந்தேன்; அவள் எம்மகளிரை நினைந்து நீர் எனது அவயவமனைத்தையும் நோக்கினீரென்று சொல்லிக் கோபியாநின்றாளென்று னென்பது.

10. (Sitting silently) even when I look on her, contemplating her beauty, she is angry and says " with whose thought have you thus eyed me over ".



---

† அவற்றை - என்சொற்களையும் செயல்களையும்.

## 1௩ - வது அதிகாரம்.

ஊடலுவகை:—

*The delights of Temporary displeasure.*

பரி:—அஃதாவது அப்பெற்றித்தாய ஊடலாற் றமக்குக் கூடலின்பஞ் சிறந்துழி அச்சிறப்பிற் கேதுவாய அவ்வூடலைத் தலைமக ளுவத்தலும் தலைமக னுவத்தலுமாம். * அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

தெளி:—*அஃதாவது அத்தன்மையதாகிய ஊடலால் தமக்குக் கூட்டின்பம் சிறந்தவிடத்து அச்சிறப்பிற்குக் காரணமாகிய அவ்வூடலைத் தலைமகள் விரும்பிப்பேசுதலும் தலைமகன் விரும்பிப்பேசுதலுமாம். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.*

க. இல்லை தவறவர்க காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு.

*[தலைமகள் காரணமின்றிப் புலக்கின்றமை கேட்டதோழி
அங்ஙன நீ புலக்கின்றதென்னை யென்றாட்கு
அவள் சொல்லியது.]*

பரி:—(இ - ள்.) அவர்மாட்டுத் தவறில்லையாயினும், நமக்கவர் † தலையளிசெய்கின்றவாறு அவரோடூடுதலை விளைக்கவற்றாகின்றது, ()

‡ *அவர்க்கென்பது வேற்றுமை மயக்கம். அளவிறந்த வின்பத்தராகலின், யானெய்தற் பாலதாய இத்தலையளி ஒழிந்தாரு மெய்துவரெனக் கருதி ¶ அது பொறாமையான் ஊடனிகழாநின்ற தென்பதாம்.*

தெளி:—*[தலைமகள் காரணம் இல்லாமற் பிணங்குகின்றமையைக் கேட்டதோழி அவ்வாறு நீ பிணங்குகின்றதென்னை யென்றாட்கு அத்தலைமகள் சொல்லியது.]* (இ - ள்.) *அவர்க்கு-அவரிடத்து, தவறு-பிழைகள், இல்லையாயினும் - இல்லையானாலும், அவரளிக்குமாறு* - (நமக்கு) *அவர் தலையளி செய்கின்றவிதம், ஊடுதல்வல்லது* - (அவருடன்) *பிணங்குதலை* (*விளைக்க*) *வல்லதாகின்றது*, (எ - று).

*அவர்க்கென்பது வேற்றுமை மயக்கம்.* (*காதலர்*) *அளவிறந்த இன்பத்தையுடையவராகலால், யான் அடைதற்பாலதாகிய இத்தலையளியை*

---

* *அதிகாரமுறைமையும் - புலவி நுணுக்கத்தின்பின் ஊடலுவகை வைத்த அதிகாரமுறைமையும்.*

† *தலையளி - முகமலர்ந்தினியகூறி யுணர்வழியப்புணர்தல்.*

‡ *அவர்க்கு என்னும் நான்கனுருபு தனக்குரிய பொருளைவிட்டு அவர் மாட்டெனு ஏழனுருபின் பொருளில் வந்தமையின், வேற்றுமை மயக்கமாயிற்று.*

¶ *அது - இத்தலையளியை யொழிந்தாருமெய்துதல்.*

மற்றவரும் அடைவாரென்று நினைந்து அது பொறாமையால் ஊடல் நிகழ்கின்றதென்பதாம். மற்றவர்-பரத்தையர்.

(க - து.) தலைமகள் தோழியை நோக்கி, காதலரிடத்துத் தவறில்லை யாயினும், அவர் செய்யுந் தலையளி யான் அவரோடு பிணங்குதலை யுண்டாக்குகின்றதென்று கூறினளென்பது.

1. Although there be no fault in him, the way in which he embraces me is such as to make me feign displeasure.



௨. ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்

[புலவாக்காலும் அத்தலையளி பெறலாயிருக்க, * அஃதிழந்து புலவியான் வருந்துவதென்னையென்றாட்கு அவள் சொல்லியது.]

பரி:—(இ - ள்.) ஊடலேதுவாக நங்கட்டோன்றுகின்ற சிறிய † துனிதன்னால் காதலர்செய்யு நல்ல தலையளி வாடுமாயினும் பெருமை எய்தும், (எ - று).

தவறின்றி நிகழ்கின்றவூடல் கடிதினீங்கலின் ‡ அத்துன்பமு மில்லாதென்பாள் 'சிறுதுனி' என்றும், ¶ ஆராமைபற்றி நிகழ்தலின் § அதனான் நல்லளிவாடாதென்பாள் 'வாடினும்' என்றும், பின்னே பேரின்பம் பயக்குமென்பாள் 'பாடுபெறும்' என்றுங் கூறினாள். | அது வருத்தமெனப் படாதென்பதாம்.

தெளி:—[பிணங்காதிருக்கின்றகாலத்தும் அத்தலையளியைப் பெறுதலாயிருக்க, அதனை யிழந்து பிணக்கினால் வருந்துவதென்னை யென்ற தோழிக்கு அத்தலைமகள் சொல்லியது.] (இ - ள்.) ஊடலிற் றோன்றும் - பிணங்குதல் காரணமாக (நம்மிடத்துத்) தோன்றுகின்ற, சிறுதுனி - சிறிய துனியினால், நல்லளி - (காதலர் செய்யும்) நல்ல தலையளி, வாடினும் - வாடுமாயினும், பாடு - பெருமையை, பெறும் - அடையும், (எ - று).

(காதலரிடத்துத்) தவறில்லாமல் நிகழ்கின்ற ஊடல் விரைவில் நீங்கலால் அத்துன்பமும் இல்லாதென்பாள் 'சிறுதுனி' என்றும், (அது) ஆராமை பற்றி நிகழ்தலால் அதனால் நல்லளிவாடாதென்பாள் 'வாடினும்' என்றும், (அத்தலையளி) பின்னே பேரின்பத்தை யுண்டாக்குமென்பாள் 'பாடுபெறும்' என்றும் சொல்லினாள். அது வருத்தமெனப்படாதென்பதாம்.

* அஃது - அத்தலையளி. † துனிதன்னால் - துன்பத்தினால்.
‡ அத்துன்பமும் - ஊடல் காரணமாக வுண்டாகின்ற அத்துன்பமும்.
¶ ஆராமை – (புணர்ச்சி விருப்பம்) தணியாமை.
§ அதனான் - அத்துனியினால். | அது - சிறுதுனி.

(க - து.) தலைமகள் தோழியை நோக்கி, ஊடல் காரணமாகத் தோன்றுஞ் சிறு துனியினால் காதலர் செய்யுந் தலையளி வாடுமாயினும், பின்னே பெருமையை யடையுமென்றாளென்பது

2. His love will bloom again though at first it may seem to fade through the short - lived pain caused by my feigned anger.



௩. புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) நிலத்தோடு நீர்கலந்தாற்போல ஒற்றுமையுடைய காதலர்மாட்டுப் புலத்தல்போல நமக்கின்பந் தருவதோரு புத்தேளுலகமுண்டோ, இல்லை, (எ-று).

* நீர் தானின்ற நிலத்தியல்பிற்றாமாறுபோலக் காதலருந் தாங்கூடிய மகளிரியல்பினராகலான் † அதுபற்றி அவரோடு புலவி நிகழுமென்பாள் 'நிலத்தொடு நீரியைந் தன்னாரகத்து' என்றும், அவர் ‡ நமக்கும் அன்னராகலின் அப்புலவி பின்னே பேரின்பம் பயவாநின்றதென்பாள் 'புலத்தலிற் புத்தேணாடுண்டோ' என்றுங் கூறினாள். ¶ உவமம் பயன்பற்றி வந்தது.

---

* "நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகும்" என்னுங் குறளின் விசேடவுரையில் "விசும்பின்கட் டன்றன்மைத்தாய நீர் நிலத்தோடு சேர்ந்தவழி நிறம் சுவை முதலிய பண்புகள் திரிந்தாற்போலத், தனிநிலைக்கட் டன்றன்மைத்தாய வறிவு பிறவினத்தோடு சேர்ந்தவழிக் காட்சி முதலிய தொழில்கள் திரியும்" என்றிருப்ப திங்குணர்தற்பாலதாம்

† அதுபற்றி - காதலர் தாங்கூடிய மகளிரியல்பினராதல்பற்றி.

‡ நமக்கும் - தாம்கூடிய மகளிரிடத்தன்றி நமக்கும்.

¶ நிலத்தொடு நீரியைந்தன்னார் என்பது பயனுவமம். பயன் காரணமாக வருமுவமம் பயனுவமமாம். பயன் - செயல் காரணமாகத் தோன்றுவதாம். நீர்தானின்ற நிலத்தியல்பிற்றாதலென்னு முவமானத்தில் நீரின் செயல் நிற்றலாம், அது காரணமாகத் தோன்றுவது அது நிலத்தியல்பிற்றாதலாம் ; காதலர் தாங்கூடிய மகளிரியல்பினராத லென்னுமுவமேயத்தில் காதலரின் செயல் கூடுதலாம், அது காரணமாகத் தோன்றுவது அவர் மகளிரியல்பினராதலாம். இங்கு நீர் தானின்ற செயல் காரணமாக நிலத்தியல்பிற்றாதலும், காதலர் தாங்கூடிய செயல் காரணமாக மகளிரியல்பினரா்தலும் தம்முள் ஒக்குமாறுணர்க. "வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே, வகைபெற வந்த வுவமத் தோற்றம்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தின் விசேடவுரையில் நச்சினார்க்கினியார் "மாரி யன்ன வண்கைத், தேர்வே ளாயைக் காணிய சென்மே" என்பது பயனுவமம் ; என்னை ? மாரியான் விளைக்கப்படும் பொருளும் வண்கையாற் பெறும பொருளும் ஒக்குமென்றவாறு" என்று கூறியிருத்தல் இங்குணர்தற்பாலதாம்.

தெளி:—[இதுவுமது.] (இ - ள்.) நிலத்தொடு - நிலத்தோடு, நீர் - நீரானது, இயைந்தன்னாரகத்து - கலந்தாற்போல ஒற்றுமையுடைய காதல ரிடத்து, புலத்தலின் - பிணங்குதல்போல, (நமக்கு இன்பந்தருவதொரு), புத்தேணாடு - புத்தேளுலகம், உண்டோ—இருக்கின்றதோ, (இல்லை), ()

நீர் தானின்ற நிலத்தினியல்பினதாகும் விதம்போலக் காதல ரும் தாம்கூடிய மகளிரினியல்பின ராகலால் அதுபற்றி அவரோடு பிணங் குதல் நிகழுமென்பாள் 'நிலத்தோடு நீரியைந்தன்னாரகத்து' என்றும், அக் காதலர் நமக்கும் அத்தன்மையராகலால் அப்பிணக்குப் பின்னே பேரின்பம் தாராநின்ற தென்பாள் 'புலத்தலிற் புத்தேணா டுண்டோ' என்றும் சொல்லி னாள். உவமம் - பயன்பற்றி வந்தது புத்தேள் - தேவர்.

(க - து.) தலைமகள் தோழியைநோக்கி, காதலரிடத்துப் பிணங்குதல்போல நமக்கின்பந்தருவதொரு சுவர்க்கமுண்டோ? இல்லை என்றாளென்பது.

3. Is there a celestial world which can give bliss like the feigned dislike of those whose union resembles that of earth and water.



ச. புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை.

[அப்புலவி இனி யாதானீங்குமென்றாட்குச்
சொல்லியது.]

பரி:—(இ - ள்.) காதலரைப் புல்லிக்கொண்டு பின்விடாமைக் கேதுவாகிய அப்புலவிக்கண்ணே யுளதாம், அதன்மேற்சென்ற என் னுள்ளத்தைக் கெடுக்கும் படைக்கலம், (எ-று).

* புலவியுளென்னு மேழாவது வினைநிகழ்ச்சிக்கண் வந்தது. 'என் னுள்ள முடைக்கும் † படை' என்றது வணக்கத்தையும் பணிமொழியை

---

* புலவியுள் என்னும் ஏழனுருபு படைதோன்றும் என ஒன்ற னது தொழிற்காலத்தைக் குறிக்கும் பிறிது தொழிற்பொருட்கண் வந்தது.

உள்-ஏழனுருபு. இஃது இருவரின் முடியும் ஒருவினைத் தொழிற் பெயர் எனப்படும்.

"உட்னிகழ்கின்ற" என்னும் செய்யுளின் விசேடவுரையில் பிரயோக விவேக நூலார் "சதிசத்தமியைத் தொல்காப்பியர் வினைசெய் யிடமென் பர்; பரிமேலகழகர் வினை நிகழ்ச்சி யென்பர்" என்று கூறியிருத்தல் இங் குணர்தற்பாலதாம். தொல்காப்பிய வுரையில் " வினைசெய்யிடத்தினில் " என்பதற்கு "தட்டுப்புடைக்கண் வந்தான்" என்பது உதாரணமாகக் காட் டப்பட்டிருக்கின்றது.

† படைக்கலம் என்றும் பாடமுண்டு.

யும். † 'படை' என்றாள்; அவற்றான் அப்புலவியுள்ள மழிதலின். புலவி நீங்குந்திறங் கூறியவாறு.

தெளி:—[அப்பிணக்கு இனி எதனால் நீங்குமென்ற தோழிக்குத் தலைமகள்சொல்லியது.](இ-ள்:)புல்லி-(காதலரைத்)தழுவிக்கொண்டு, விடாஅ-(பின்) விடாமைக்குக்காரணமாகிய, புலவியுள் - அப்பிணக்கினிடத்தே, என்னுள்ளம்-(அப்பிணக்கின்மேற்சென்ற) என்னுள்ளத்தை, உடைக்கும்-கெடுக்கும், படை-படைக்கலம், தோன்றும்-உண்டாகும், (எ-று).

புலவியுள் என்னும் ஏழனுருபு வினைநிகழ்ச்சிப் பொருளில் வந்தது. தலைமகள் 'என்னுள்ளமுடைக்கும்படை' என்றது தலைமகனது வணக்கத்தையும் பணிமொழியையும்.(வணக்கத்தையும் பணிமொழியையும் தலைமகள்) 'படை' என்றாள்; அவற்றால் அப்பிணக்குள்ளம் அழிதலால். (தலைமகள் தோழிக்குப்) பிணக்கு நீங்கும்வகையைச் சொல்லியவாறும். பணிமொழி - பணிவையுணர்த்துஞ் சொல். பணிவு - அடக்கம்.

(க - து.) தலைமகள் தோழியைநோக்கி, யான் காதலரைத் தழுவிக்கொண்டு பின்விடாமைக்குக்காரணமாகிய பிணக்கிலே அப்பிணக்கின்மீதுசென்ற என்மனத்தைக் கெடுக்கும் படைக்கலம் உளதாகின்றது என்றாளென்பது.

4. In feigned dislike after an embrace there lurks a weapon which can break my heart.



ரு. தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து.

[தலைமகளை யூடலிக்கக் கூடிய தலைமகன் கழியுவகையனாய்த் தன்னுள்ளே சொல்லியது.]

பரி:—(இ-ள்.) ஊடவர் தங்கட் டவறிலராயினும் உடையார்போல ‡ ஊடப்பட்டுத் தாம் விரும்பு மகளிருடைய மெல்லிய தோள்களைக் கூடப்பெறாத வெல்லைக்கண் அவர்க்கு ¶ அஃதப்பெற்றியதோரின்பம் பயத்தலுடைத்து, (எ-று).

உடையாயக்கால் இறந்த வின்பத்தோடு வருமின்பமு மெய்துவ ராகலின் அது மிகன்று, மற்றையிலாயக்காலும் வருமின்பத்தை யிழந்ததில்லையென்னுங் கருத்தால், தவறிலராயினு மாங்கொன்றுடைத்து, என்றான். ஊடலினுளைய வின்பம் அளவிறத்தலிற் கூறற்கரிதென்பான்

† படைக்கலம் என்றும் பாடமுண்டு.

‡ ஊடப்பட்டு-(ஊடவர் தமது காதலியரால்) பிணங்கப்பட்டு.

¶ அஃதப்பெற்றியதோரின்பம் - தவறின்றி யூடியது அவ்வூடல் நீங்கிக் கூடியபோதுண்டாகும் இன்பம் போன்றதோரின்பம்.

* 'ஆங்கொன்று' என்றான். தவறின்றி யூடியதூஉம் எனக்கின்பமாயிற் றென்பதாம்.

தெளி:—[தலைமகளைப் பிணக்கு நீக்கிக் கூடிய தலைமகன் மிகுமகிழ்ச் சியுடையவனாய்த் தன்னுள்ளே சொல்லியது.] (இ - ள்.) தவறிலாராயினும்- (ஆடவர் தம்மிடத்துத்) தவறில்லாதவராயினும், (தவறுடையார்போலப் பிணங்கப்பட்டு), தாம்வீழ்வார் - தாம் விரும்பும் மகளிரது, மென்றோள் - மெல்லிய தோள்களை, அகறலின் - கூடப்பெறாத சமயத்தில், ஆங்கொ ன்று - (அவ்வாடவர்க்கு அஃது) அத்தன்மையதாகிய தோரின்பம், உடைத்து - (தருதல்) உடையது, (எ-று).

ஆடவர் தவறுடையவராயவிடத்துக் கழிந்த வின்பத்தோடு வருமின் பமும் அடைவாராகலால் அத்தவறு மிகவும் நன்று, மற்றைத்தவறில்லாதவ ராயவிடத்தும் வருமின்பத்தை இழந்ததில்லையென்னுங் கருத்தால், தவ றிலாராயினும் ஆங்கொன்றுடைத்து என்றான். ஊடலினாலாகிய இன்பம் அளவுகடந்திருத்தலால் கூறுதற்கு அரிதென்பான் 'ஆங்கொன்று' என் றான். (தலைமகன் என்னிடத்துத்) தவறிலதாக (என்காதலி) ஊடியதுவும் எனக்கு இன்பந்தருவதாயிற்றென்றா னென்பதாம்.

(க - து.) தலைமகன் தாம்விரும்பும் மகளிர் பிணங்குதல் தவ றுடையார்க்கேயன்றி அஃதில்லார்க்கும் மிகவினிதாகுமென்றா னென்பது.

5. Though free from fault, men feel charmed to be estranged from loved one's tender shoulders.

ரு. † உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) உயிர்க்கு மேலுண்பதனினும் முன்னுண்டதறுதல் இன்பந்தரும்; அதுபோலக் காமத்திற்கு மேற்புணர்தலினும் முன்னைத் தவறுபற்றி யூடுதல் இன்பந்தரும், (எ - று).

‡ காமத்திற்கென்புழிச் சாரியையும் நான்கனுருபும் விகாரத்தாற் றொக் கன. பசித்துண்ணும்வழி மிகவுண்ணலுமாய் ¶ இன்சுவைத்துமாம்; அது

* அப்பெற்றிய தொன்று என்றும் பாடமுண்டு.

† "மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய, தற்றது போற்றி யுணின்" என்னுங்குற ளிங்குணர்தற்பாலதாம்.

‡ காமத்திற்கு என்பது காமம்-அத்து-இன்-கு எனப் பிரிபடுவதாம்.

¶ இன்சுவைத்து - இனிமையாகிய சுவையைத்தருவது. சுவை-ருசி.

போல, அகன்று கூடும்வழி ஆராததுமாய்ப் * பேரின்பத்ததுமாமெனத் தன்னனுபவம்பற்றிக் கூறியவாறு.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) (உயிர்க்கு) உணலினும்-(மேல்) உண்பதனிலும், உண்டதறல்- (முன்) உண்டவுணவு சீரணித்தல், இனிது- இன்பந்தரும், (அதுபோல), காமம்-காமத்திற்கு, புணர்தலின் - (மேல்) புணர்தலினும், ஊடல்-(முன்னைத் தவறுபற்றிப்) பிணங்குதல், இனிது - இன்பந்தரும், (எ - று).

காமத்திற்கு என்றவிடத்து அத்து இன் என்னும் சாரியைகளும் கு என்னும் நான்கனுருபும் செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றன. பசித்து உண்ணும்போது (உணவு) மிகவுண்ணலுமாய் இன்சுவையதுமாம் ; அது போல, (காமம்) பிரிந்து கூடும்போது தணியாததுமாய்ப் பேரின்பத்ததுமாமென்று (தலைமகன்) தன்னனுபவம் பற்றிச் சொல்லியவாறும்.

(க - து.) தலைமகன் காமானுபவத்திற்கு மகளிரைமேற்புணர்தலினும் முன்னைத் தவறு பற்றி யவர் பிணங்குதல் மிக இன்பந் தருவதாமென்றானென்பது.

6. To digest what has been eaten is more wholesome than to eat more; likewise love is more delightful in feigned dislike than intercoure.



எ. ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும்.

(இதுவுமது.)

பரி:—(இ - ள்.) காமநுகர்தற்குரிய இருவருள் ஊடலின்கட்டோற்றவர் வென்றாராவர், அஃதப்பொழுதறியப்படாதாயினும் பின்னைப் புணர்ச்சியின்கண் † அவரா லறியப்படும், (எ-று).

தோற்றவர் - ‡ எதிர்தலாற்றாது சாய்ந்தவர். ¶ அவர் புணர்ச்சிக்கட் பேரின்ப மெய்தலின் வென்றாராயினர். மன்னும் உம்மும் அசைநிலை. ⁑ யானதுபொழுது சாய்தலின், இதுபொழுது பேரின்பம் பெற்றே னென்பதாம்.

---

* பேரின்பத்தது - அளவுகடந்த இன்பத்தைத்தருவது.

† அவரால் - ஊடலிற்றோற்றவரால்.

‡ எதிர்தலாற்றாது சாய்ந்தவர் - ஊடலில் எதிர்த்துநில்லாது பணிவாயிருந்தவர்.

¶ அவர் - ஊடலில் தோற்றவர்.

⁑ யானது பொழுது சாய்தலின் - யான் அவ்வூடற்காலத்துத் தோற்றமையால்.

தெளி:—[ இதுவுமது. ] (இ - ள்.) (காமத்தை யனுபவித்தற்குரிய இருவருள்) ஊடலிற் றோற்றவர் - பிணக்கின்கண் தோற்றவர், வென்றார்-வென்றாராவார், அது-அவ்வென்றாராதல், (அப்பொழுது அறியப்படாதாயி னும்), கூடலின் - (பின்னே) புணர்ச்சியின்கண், காணப்படும் (அவரால்) அறியப்படும், (எ-று).

தோற்றவர் - எதிர்த்தல் செய்யாமல் சாய்ந்தவர். அவர் புணர்ச்சியின் கண் பேரின்பத்தை யடைதலால் வென்றாராயினர். மன்னும் உம்மும அசைநிலைகள். யான் அப்பொழுது சாய்தலால் இப்பொழுது பேரின்பம் பெற்றேனென்பதாம். சாய்தல் - அடங்கிப்போதல்.

(க - து.) தலைமகன் ஊடலிற் றோற்றவர் காமானுபவத்தைப் பூரணமாகப் பெறுதலின், அவரே வென்றாரா ரென்றான்.

7. Those have won whose feigned dislike has been defeated; and that is proved by re-union's joy.



அ. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

[இதுவுமது.]

பரி:—(இ - ள்.) இதுபொழுது இவணுதல் வெயர்க்கும்வகை கலவியின்கணுளதாய இனிமையை இன்னுமொருகால் * இவளூட யாம் பெறவல்லேமோ ? (எ - று).

கலவியது விசேடம்பற்றி 'நுதல் வெயர்ப்ப' என்றான். இனிமை-† கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறிதலானுய வின்பம். இனி ‡ அப்பேறு கூடாதெனப் பெற்றதன் சிறப்புக் கூறியவாறு.

தெளி:—[இதுவுமது] (இ - ள்.) நுதல்வெயர்ப்ப - (இப்போது இவளது) நெற்றி வெயர்க்கும்படி, கூடலிற்றோன்றிய - புணர்ச்சியின்கணுளதாகிய, உப்பு-இனிமையை, (இன்னுமொருகால்), ஊடி - (இவள்) பிணங்க, பெறுகுவங்கொல்லோ - (யாம்) பெறவல்லேமோ ? (எ-று).

புணர்ச்சியினது விசேடம்பற்றி 'நுதல்வெயர்ப்ப' என்றான். இனிமை-கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறிதலாலாகிய இன்பம். இனி அப்பேறு கூடாதென்று பெற்றவின்பத்தின் சிறப்புச் சொல்லியவாறும்.

* இவளூடி என்றும் பாடமுண்டு.

† "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுள" என்னுங்குற ளிங்குணர்தற் பாலதாம்.

‡ அப்பேறு - நுதல்வெயர்ப்பக் கூடலிற்றோன்றிய இனிமையைப் பெறுதல்.

(க - து.) தலைமகன் இவளது நெற்றி வெயர்க்கும்படி புணர்ச்சியினு லுண்டாகிய இனிமையை யின்னுமொருமுறை யிவள் பிணங்குதல் காரணமாக யாம் பெறவல்லேமோ என்றான்.

8. Will I once more enjoy through her feigned dislike, the pleasure of that intercourse which makes her forehead perspire.



கூ. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா.

[இதுவுமது.]

பரி:—(இ-ள்) ஒளியிழையினை யுடையாள் இன்னுமெம்மோ டூடு வாளாக; அங்ஙனம் அவளூடி நிற்றற்கும் அதனை யுணர்த்துதற்பொருட் டியாமிரந்து நிற்றற்குங் காலம் பெறும்வகை இவ்விரவு விடியாது நீட்டித்தல் வேண்டுக, (எ-று).

ஊடுக நீடுகவென்பன வேண்டிக்கோடற்பொருள. * மன்னிரண்டும் ஆக்கத்தின்கண் வந்தன. ஓகாரங்கள் அசைநிலை. கூடலின் ஊடலே யமையுமென்பதாம்.

தெளி:—[இதுவுமது] (இ - ள்). ஒளியிழை - விளங்குகின்ற ஆபரணத்தையுடையவள், ஊடுகமன் - (இன்னும் எம்மோடு) பிணங்குவாளாக, (அவ்வாறு அவள்பிணங்கி நிற்றற்கும் அப்பிணக்கினைத்தீர்த்தற்பொருட்டு) யாம் - நாம், இரப்ப - இரந்து நிற்றற்கும், (காலம் பெறும்வகை), இரா - இவ்விரவு, நீடுகமன் - (விடியாது) நீட்டித்தல் வேண்டுக, (எ-று).

ஊடுக நீடுகவென்னும் வியங்கோள் வினைமுற்றுக்கள் வேண்டிக் கொள்ளுதற் பொருளில் வந்தன. மன்னிரண்டும் ஆக்கப்பொருளில் வந்தன. ஓகாரங்கள்-அசைநிலைகள். கூடலினும் ஊடலே அமையுமென்பதாம்.

(க - து.) தலைமகன் எங்காதலி இன்னு மெம்முடன் பிணங்குவாளாக ; அப்பிணக்கைத் தீர்த்தற்குக் காலம் பெறுவகை இவ் விரவு விடியாதொழிக என்றானென்பது.

9. May the maiden with bright - jewels feign dislike, and may the night prolong for me to implore her.



* மன் என்னும் இடைச்சொலிரண்டும் ஆக்கப்பொருளில் வந்தன. [ஆக்கம்-ஆதல்.] "கழிவே யாக்க மொழியிசைக் கிளவியென், றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே" என்பது தொல்காப்பியம். ஊடுகமன், நீடுக மன் என்புழி (ஊடுவாளாக; நீடுவதாக என) மன் என்பது ஆகவென்னும் ஆக்கப் பொருளில்வந்தது.

